# ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

## பூமேனி பாப்பாக்களுக்கு புவியில் சிறந்த பவுடர்




**இலவச புத்தகம்:** ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது தமிழ் பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிட்டு எழுதவும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், பி.ஓ. பாக்ஸ் 1976, டிபார்ட்மெண்ட் 36M பம்பாய

# கல்கி

## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| **அரசியல்** | | | |
| மாணவர்களின் கிளர்ச்சி | ... | ... | 3 |
| ஊர் வதந்தி | விஜி | ... | 4 |
| கம்யூனிஸ்ட் சர்க்காரும் கல்விச் சட்டமும் | ... | ... | 4 |
| "தோல்வி மனப்பான்மை" | ... | ... | 6 |
| **கதைகள்** | | | |
| காரியத்திலே கண் | கும்பம் | ... | 19 |
| பாவை விளக்கு | அகிலன் | ... | 25 |
| மாலவல்லியின் தியாகம் | கி. ரா. கோபாலன் | ... | 35 |
| மலைச்சாரல் மாதவி | ஆனந்தி | ... | 63 |
| கன்றின் குரல் | சுபாஷிணி | ... | 74 |
| தர்மசாலையில் | எஸ். கே. பொற்றெக்காட்—சௌரி | ... | 87 |
| அறம் வளர்த்த கை | ராமானுஜம் | ... | 94 |
| **கட்டுரைகள்** | | | |
| ஆயுளிலே ஒருநாள் | அநுத்தமா | ... | 11 |
| ஓடாய் உழைப்பானேன்? | அ. சீநிவாசராகவன் | ... | 14 |
| வட்டமேஜை | ... | ... | 21 |
| பொழுது போனது எப்படியோ? | டி. கே. சண்முகம்—புத்தனேரி | ... | 44 |
| மாதர்குல திலகங்கள் | வசுமதி ராமசாமி | ... | 49 |
| நேயர் கடிதம் | ஸ்ரீஹரி | ... | 71 |
| குருவாயூர் | கொடுமுடி | ... | 80 |
| **பாலர் மலர்** | | | |
| வளையல் வேணுமா? | சரஸ்வதி தியாகராஜன் | ... | 55 |
| ஆயிஷா (சுதந்திரத் தொடர்கதை) | கௌசிகன்-பாபு | ... | 56 |
| மாயப் பந்து | ராஜி | ... | 58 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



## எப்பொழுதும் முதல் பரிசு அவனுக்கே — அதிசயமில்லை. அவன் அணிவது 'ஸான்போரைஸ்ட்' பருத்தி உடைகள்

அவன் பிராயத்தில் குழந்தைகள் தென்புடன் ஓடி விளையாடுவது சர்வ சாதாரணமே! உங்கள் குழந்தையும் சுறுசுறுப்புடன் ஓடி விளையாடுவதைக் காண உங்களுக்குத்தான் என்ன மகிழ்ச்சி. ஆனால் அவன் உடைகள் சுருங்கி, அவன் ஓட்ட சாட்டங்களுக்கு இடைஞ்சல் விளைவிக்கக்கூடாது. ஆகவே அவன் உடைகளை 'ஸான்போரைஸ்ட்' டிரேட் மார்க்குள்ள துணிகளில் தையுங்கள்.

**சுறுசுறுப்பான குழந்தைகளுக்குத் தேவையானது — உடம்புக்குப் பொருந்தாதபடி ஒருபொழுதும் சுருங்காத 'ஸான்போரைஸ்ட்' டிரேட் மார்க்குள்ள துணிகளில் தைத்த உடைகளே!**

### லேபிலில் 'SANFORIZED' இந்த அடையாளம் இருந்தால்

### உங்கள் உடைகள் உடம்புக்குப் பொருந்தாதபடி ஒருபொழுதும் சுருங்காது!

ரிஜிஸ்தர் செய்யப்பட்ட 'ஸான்போரைஸ்ட்' டிரேட் மார்க்கின் சொந்தக்காரர்களான க்ளுவெட் பீபாடி அண்ட் கோ., இன்கார்ப்பரேட்டட் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பெற்றது) அவர்களால் இந்த விளம்பரம் வெளியிடப்பட்டுள்ளது. இந்த கம்பெனியின் சுருங்காது என்பதற்கான கடும் நிபந்தனைகளுக்குட்பட்டு தயாரிக்கப்படும் துணிகளில் மட்டுமே 'ஸான்போரைஸ்ட்' டிரேட் மார்க் உபயோகிக்க அனுமதி அளிக்கப்படுகிறது.

விபரங்களுக்கு : 'ஸான்போரைஸ்ட்' ஸர்விஸ், [illegible] பம்பாய் 1



மலர் 17 | தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற | ஹேவிளம்பி
இதழ் 8 | தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | புரட்டாசி 6

# மாணவர்களின் கிளர்ச்சி

தென்னாட்டு மக்களின் கருத்தை நிராகரித்து விட்டு, ஹிந்தி மொழிதான் பாரத நாட்டு அரசாங்க மொழியாக அமுலுக்கு வரவேண்டும் என்று நிர்மானிக்கப் பட்டால் தென்னாட்டில் தற்போது, பள்ளிகளில் பயிற்சி பெற்று வரும் மாணவர் களின் கதி அதோகதியாகும் என்பதில் எள்ளத்தனையும் சந்தேகமில்லை.

மொழிக் கமிஷனின் அறிக்கை வெளியானதிலிருந்து தமிழ் நாட்டில் பல இடங் களில் கல்லூரி மாணவர்கள் ஹிந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி நடத்தி வருகின்றனர். வகுப் பறைகளுக்குச் செல்லாமல் கல்லூரியின் வெளியிலிருந்து கிளர்ச்சி செய்து வருகின்றனர்.

இந்தக் கிளர்ச்சி மாணவர்களுடைய வருங்கால நன்மையைப் பற்றிய கிளர்ச்சி; அரசியல் கிளர்ச்சியல்ல. ஹிந்தி பாஷையை ஆங்கிலத்துக்குப் பதிலாகப் பாரத சர்க் காரின் நிர்வாக மொழியாக்குவதைத்தான் மாணவர்கள் ஆட்சேபிக்கிறார்கள். ஹிந்தி பாஷையைக் கற்றுக் கொள்வதற்கு அவர்கள் ஆட்சேபிக்க வில்லை. எந்த பாஷையைக் கற்றுக் கொள்வதற்கும் அவர்கள் ஆட்சேபிக்கவில்லை. பிரஞ்சு, ஜெர்மன், ருஷ்ய பாஷைகளைக்கூட ஆவலுடன் சில மாணவர்கள் கற்று வருகிறார்கள்.

சிலர், பழைய ஹிந்தி எதிர்ப்பு, அதாவது ராமசாமிப் பெரியாருடைய இயக்கத் தைப் பின்பற்றி அதையே கட்டிக் கொண்டு அழுவது உண்மை. தற்போது நடை பெற்று வரும் ஹிந்தி எதிர்ப்பு அது அல்ல. இந்த இரண்டு ஹிந்தி எதிர்ப்புக்களையும் குழப்பிக் கொண்டு சிலர் பேசுவார்கள். இரண்டுக்குமுள்ள வித்தியாசத்தை அறிந்து நாம் நடந்து கொள்ள வேண்டும். ஹிந்தியைப் படிப்பதனால் நாம் கெட்டுப் போக மாட்டோம். ஹிந்தி பாரத அரசாங்க நிர்வாக மொழியாகிவிட்டால் நாம் நிச்சயம் கெட்டுப் போவோம்.

சென்ற வாரம் மதுரையில் கல்லூரி மாணவர்களின் கூட்டத்தில் பேச நேர்ந்த நமது கல்வி மந்திரி மாணவர்களைக் கண்டித்தார். மாணவர்கள் இம்மாதிரி கிளர்ச்சி களில் கலந்து கொள்ளக் கூடாது என்றார்.

அரசியல் மொழியைப் பற்றி அவர் பேசினாரா அல்லது ஹிந்தியைப் படிப்பதைப் பற்றிப் பேசினாரா என்பது நமக்குத் தெரியவில்லை. அல்லது மொத்தத்தில் மாணவர்கள் தங்கள் படிப்பை விட்டு விட்டு, கிளர்ச்சிகளில் நேரத்தைச் செலவழிக்கக் கூடாது என் பதை மட்டும் உபதேசித்தாரா? எதுவும் நமக்கு நிச்சயமாகத் தெரியவில்லை.

ஹிந்தி மொழி ஆங்கிலத்தின் இடத்துக்கு வந்து விட்டால் தற்போது கல்லூரி களில் படிக்கும் இளைஞர்களுக்கு உண்டாகப் போகும் நஷ்டத்தை மந்திரி திரு சுப்பிரமணியம் உணராமலிருக்க இடமில்லை.

மொழிக் கமிஷன் சிபாரிசுகளையும், மத்திய சர்க்கார் தங்கள் காரியாலயங்களில் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கு ஹிந்தி பயிற்சியளிக்கத் தீவிர முயற்சிகள் எடுத்து வருவதையும் பார்க்கும் போது 1965-க்குள் ஹிந்தியை நுழைப்பதில் சர்க்கார் பிடிவாதமாக இருக்கிறார்கள் என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது! இந்த முறை நீடித்தால் தென்னாட்டு மாணவர்களின் எதிர்கால வாழ்வு பெரிதும் பாதிக்கப்படும். இதை மத்திய சர்க்கார் உணரும்படி பல பெரியார்கள் எடுத்துக் கொண்ட முயற்சி விழலுக்கு இறைத்த நீராகப் போய் முடிந்திருக்கிறது. இப்பொழுது மாணவர்களின் கிளர்ச்சி மூலம் மத்திய சர்க்கார் தென்னாட்டு மக்களின் உணர்ச்சிகளை ஓரளவு அறிய

## ஊர் வதந்தி !




வாய்ப்பு இருந்தது. அதையும் திரு சி. சுப்பிரமணியம் தடுத்து நிறுத்தி விட்டதாகச் சொல்லுகிறார். ஆகவே, தென்னாட்டு மக்களின் எதிர்கால நலன்களையும் உரிமைகளையும் பாதுகாக்கும் பொறுப்பு திரு சி. சுப்பிரமண்யம் அவர்கள் தலையிலும், அவருடைய மற்றச் சகாக்கள் தலையிலும் விழுந்திருக்கிறது! இதை அவர்கள் வெற்றிகரமாகச் சாதிப்பார்களா?

வடக்கேயுள்ள உத்தரப் பிரதேசம், பீஹார் ராஜ்ய மாணவர்களைப் போல், எதிர்காலத்தில் தமிழ் நாட்டு மாணவர்களும் மத்திய சர்க்கார் உத்தியோகங்களில் சம உரிமை பெறும்படி செய்வார்களா?

# கம்யூனிஸ்ட் சர்க்காரும் கல்விச் சட்டமும்

கேரள நாட்டில் கம்யூனிஸ்ட் சர்க்கார் கொண்டுவந்த கல்விச் சட்டம் வேண்டிய சலசலப்பை உண்டாக்கி விட்டு, முடிவில் மிக அமைதியாக நிறைவேறி விட்டது.

கேரள சட்டசபையில், கல்வி மசோதாவை வோட்டெடுக்க வேண்டிய நேரம் வந்த போது, எதிர்க் கட்சியினரில், கல்வி மசோதாவை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்தவர்கள் யாருமே இருக்கவில்லை! இந்த மசோதாவுக்கு இத்தனை பேர்கள் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர் என்ற எண்ணிக்கை பலம் வேண்டாமோ? அந்த பலத்தைக்கூடக் கல்வி மசோதாவை எதிர்த்தவர்கள் அளிக்கத் தயாராக இல்லை. இதிலிருந்து அவர்களுமே உள்ளத்துக்குள் இந்த மசோதாவை வரவேற்றிருக்கின்றனர் என்று புரிகிறதல்லவா?

பின் ஏன் எதிர்ப்புக்கிளர்ச்சிகள் நடத்தினர்?

கம்யூனிஸ்ட் சர்க்காரை எதிர்ப்பதற்கு—அடிப்பதற்கு—எந்த மட்டை கிடைத்தாலும் பரவாயில்லை என்று சற்றும் யோசியாமல் கல்வி மசோதாவை உபயோகித்துக் கொண்டுள்ளனர்.

கல்வி மசோதாவை மட்டை என்று நினைத்துக் கொண்டு காங்கிரஸ்காரர்களும் பி. சோ.க் காரர்களும் கம்யூனிஸ்ட்களைத் தாக்கியிருக்கின்றனர்! அவர்கள் தாக்குதல் எல்லாம் கம்யூனிஸ்ட்களுக்கு ஆதரவாகப் போய் முடிந்தது! கேரள காங்கிரஸ்காரர்களும் பி. சோ.க்களும் கல்வி மசோதா, வெண்சாமரமாக இருக்க, அதை வெறும் மட்டை என்று நினைத்த பேதைமையைப் பார்த்து மற்ற ராஜ்யங்களிலுள்ள காங்கிரஸ்










காரர்களும், பி. சோ.க்களும் தங்களுக்குள் நகைத்துக் கொண்டிருக்கின்றனர்.

ஆக, காங்கிரஸ் மேலிடத்தார், கேரளத்தில் காங்கிரஸின் செல்வாக்கை வளர்க்க எடுத்துக் கொண்ட முயற்சிகள், சாண் ஏறினால் முழம் சறுக்கியது என்ற கதையாகத்தான் முடிந்துள்ளன!

கேரள சர்க்கார், கொண்டு வந்துள்ள இந்தக் கல்வித் திட்டத்தில் எந்த அம்சத்தை வைத்து இவ்வளவு எதிர்ப்பு ஆர்ப்பாட்டம் செய்ய முயன்றிருக்கின்றனர் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

"தனியார் நடத்தும் பள்ளிக்கூட நிர்வாகம் ஊழல் மலிந்திருப்பதாகச் சர்க்கார் கேள்விப்பட்டால் அதைச் சர்க்கார் உடனடியாக ஏற்றுக்கொண்டு நடத்தும். அப்படிச் சர்க்கார் ஏற்றுக்கொள்ளும்போது, அன்றைய 'மார்க்கெட்' நிலவரப்படி, பள்ளிக்கூட உடைமைகளுக்கு மதிப்புப் போட்டு நிர்வாகஸ்தர்களுக்கு ஈட்டுத் தொகை வழங்கப்படும்!"

இதுதான் கல்வி மசோதாவிலுள்ள முக்கியமான ஷரத்து. இதை வைத்துத்தான் இவ்வளவு கிளர்ச்சிகளும் நடத்தப்பட்டிருக்கின்றன.

இந்த நிபந்தனையைக் கேரள ராஜ்யத்திலுள்ள நிலைமையை உணராமல் வெளியிலிருந்து பார்க்கும்போது சிலருக்கு ஒரு பீதியை உண்டாக்கி யிருக்கிறது. இந்த நிபந்தனைக்குள் பெரும் ஆபத்து விளைவதற்கான கரு அமைந்திருக்கிறது என்று சிலர் சந்தேகப்பட்டார்கள். அதாவது, இந்த நிபந்தனையின்படி கம்யூனிஸ்ட் சர்க்கார் எந்தப் பள்ளிக்கூடத்தையும் ஊழல் மலிந்த பள்ளிக்கூடம் என்று சொல்லி எடுத்துக் கொண்டு விடலாம். அந்தப் பள்ளிக்கூட மாணவர்களுக்குக் கம்யூனிஸ்ட் கொள்கைகளைப் போதித்து, எதிர்கால மக்களைக் கம்யூனிஸ்ட்களாகவே செய்து விடலாம். ஆகவே, இந்தக் கல்வி மசோதா சாதாரண மசோதா அல்ல! கம்யூனிஸ்ட்கள் எப்பொழுதும் தங்கள் ஆதிக்கம் நிலைத்திருக்க, வகுத்துள்ள திட்டம் என்று கருதத் தொடங்கினர்.

ஆனால் கேரள நாட்டின் உண்மை நிலையை உணர்ந்தவர்கள் இப்படி யெல்லாம் பயப்படவில்லை. எப்பொழுதோ வந்திருக்க வேண்டிய இந்தச் சட்டம் இப்பொழுதாகிலும் வந்ததே என்று சந்தோஷப்பட்டிருக்கிறார்கள்.

டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்களைப் பற்றி நேயர்களுக்குத் தெரிந்திருக்கும். எது தெரிந்தாலும் தெரியா விட்டாலும் அவர் ஒரு கம்யூனிஸ்ட் அல்ல என்பது நிச்சயமாகத் தெரிந்திருக்கும். கம்யூனிஸ்ட் கொள்கைக்கு அவர் சற்றும் ஆதரவாளர் அல்ல என்பதும் நிச்சயமாகத் தெரிந்திருக்கும்.

எனினும் அவர் இந்தக் கல்வி மசோதாவை மனதார வரவேற்றிருக்கிறார்! ஏன்?

அவர் திருவிதாங்கூரில் பல ஆண்டுகள் திவான் பதவி வகித்துப் பல அரும் பணிகள் புரிந்திருக்கிறார்! அவரே இத்தகைய ஒரு கல்விச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்று முயன்றிருக்கிறார். அவர் அதில் தோல்வி யுற்றார். இதை அவரே ஒப்புக் கொண்டிருக்கிறார். தாம் தோல்வியுற்ற கல்விச் சீர்திருத்தத்தில் கம்யூனிஸ்ட்கள் வெற்றிபெற வேண்டும் என்று நல்லாசி கூறியிருக்கிறார்.

ஸ்ரீமான் ஜெயப்பிரகாச் நாராயண் அவர்களும் இந்தக் கல்விச் சீர்திருத்தத்தை வரவேற்றிருக்கிறார். அவரால் இந்தக் கல்விச் சட்டத்தை எதிர்க்க முடியவில்லை. கல்வி மத போதகர்களின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுத் திகழ வேண்டும் என்பது அவரது கருத்து. அதனால் இதை வரவேற்பதாகக் கூறியிருக்கிறார். ஆனால் கல்வி முழுதும் சர்க்கார் நிர்வாகப் பொறுப்பில் இருப்பதைத் தாம் விரும்பவில்லை என்றும் கூறியிருக்கிறார். கேரள கல்விச் சட்டமோ, நிர்வாகம் மோசமாகவுள்ள பள்ளிக்கூடங்களைத்தான் ஏற்றுக் கொள்ளும் என்று கூறுகிறது.

ஆனால் இந்தக் கல்விச் சட்டத்தைப் பற்றிக் கேரள முதன் மந்திரி திரு ஈ. எம். எஸ். நம்பூத்ரிபாடு அவர்கள், இதில் தம் கட்சிக்குத் தனியானதோர் பெருமை கிடையாது என்றே சொல்லியிருக்கிறார். ''கேரள காங்கிரஸ் தலைவர் பனம்பள்ளி கோவிந்த மேனன் முதன் மந்திரியாக இருந்தபோது, இந்தக் கல்வி மசோதாவிலுள்ள அத்தனை அம்சங்களும் கொண்ட சட்டத்தைக் கொண்டு வந்தார். அவை அத்தனையும் விவாதிக்கப்பட்டன. பின்னர் கைவிடப்பட்டன! அவர்கள் சட்டமாக்க விரும்பியதைத்தான் நாங்கள் சட்டமாக்குகிறோம்!'' என்று கூறியிருக்கிறார்.

மொத்தத்தில் இந்தச் சட்டம், கேரளத்தில் பள்ளிக்கூட ஆசிரியர்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதற்காகக் கொண்டுவரப் பட்டிருக்கிறது.

அங்கு தனியார் நடத்தும் பல பள்ளிக் கூடங்களில், ஆசிரியர்களுக்கு அரைச் சம்பளமும் முக்கால் சம்பளமும் கொடுத்து முழுச் சம்பளத்துக்குக் கையெழுத்து வாங்குவது போன்ற கெட்ட பழக்கங்கள் நீண்ட நெடு நாட்களாக இருந்து வருகின்றன!

சர்க்கார் அளிக்கும் கல்வி மான்யங்களைத் தனியார் நடத்தும் பள்ளிக்கூட நிர்வாகிகள் துர்விநியோகம் செய்து வந்துள்ளனர்.

இவற்றுக்கெல்லாம் முடிவுகட்ட நீண்ட நாட்களாக பலர் முயற்சிகள் எடுத்துக் கொண்டு வந்தனர். கடைசியில் கம்யூனிஸ்டுகள் வெற்றி பெற்றுள்ளனர். சுமார் 45,000 ஆசிரியர்கள் பயன் பெறக் கூடிய இந்தக் கல்விச் சீர்திருத்தத்தைக் கொண்டு வந்து கம்யூனிஸ்ட் சர்க்கார் நல்ல பெயர் தட்டிக் கொண்டு போய் விட்டனர்.

அதுமட்டுமன்றி, இந்தக் கல்வி மசோதாவை எதிர்த்து நடைபெற்ற கிளர்ச்சிகளில் எங்கும் தடியடிப் பிரயோகமோ, துப்பாக்கிப் பிரயோகமோ செய்யாமல் நீதியையும் சமாதானத்தையும் நிலை நாட்டிவிட்ட பெருமையும் தேடிக் கொண்டு விட்டார்கள்.

அராஜக வாதிகள் என்ற 'புகழ்' பெற்ற கம்யூனிஸ்ட்டுகள் 'நல்ல ஜனநாயக வாதிகள்' என்ற 'இகழ்'ச்சியைப் பெற்று வருகின்றனர். இந்த இகழ்ச்சி அவர்களுக்குப் பெருகட்டும்!

# “தோல்வி மனப்பான்மை”

நமது நிதிமந்திரி டி.டி.கே. அமெரிக்காவுக்குச் செல்லுகிறார். அங்கு டாலர்கள் கடன்பெறுவதற்காகச் செல்கிறார். அதற்குத் தகுந்த சூழ்நிலையை அமெரிக்கப் பத்திரிகைகளும் ஏற்படுத்தி வருகின்றன! இவற்றைப் பார்க்கும் போது நமக்குக் கடன் உதவி கிடைக்கும் என்று தோன்றுகிறது.

அமெரிக்காவிடமிருந்து நமக்கு உதவி கிடைத்தால் நமது செல்வாக்கு பழுதடையும் என்பதில் சந்தேகமில்லை. அமெரிக்காவின் போக்கை நம்மால் கண்டிக்க முடியாது. நமது சொல்லுக்கு இனி மதிப்பிராது. நமது செயல்களும் மதிப்பற்றுப் போகும். அமெரிக்காவின் போக்கை எதிர்த்துச் செயல்பட இடம் அற்றுப் போகும்.

இதுதான் பிறரிடமிருந்து உதவி பெறுவதினால் ஏற்படக்கூடிய நிலைமை.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிப் பேசும்போது, காந்தி மகானின் பெயரும் அடிபடுகிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பாரத மக்கள் தாங்கக் கூடியதாக இல்லை. இன்று ஏற்பட்டுள்ள பல தொல்லைகளுக்குக் காரணம் அதுதான். அதனால் திட்டத்தைக் குறைக்க வேண்டும் என்று நாட்டில் பலரும் சொல்லி வருகிறார்கள்!

இப்படிச் சொல்லுவது ''தோல்வி மனப் பான்மை'' என்று குறை கூறப்படுகிறது.

காந்தி மகான் தொடங்கிய பல காரியங்களையும் இப்படித்தான் அந்த நாட்களில் சிலர் பழித்தார்கள். பிறகு காந்தி மகான் செய்ததே சரி என்று ஒப்புக் கொண்டார்கள். அதைப் போல் இந்தத் திட்டங்களைப் பற்றியும் நடைபெறும் என்று கருதப்படுகிறது.

காந்தி மகான் தாம் ஆரம்பித்த புரட்சி காரியங்களை இந்திய மக்களுடைய கடவுள் பக்தியின் அஸ்திவாரத்தின் பேரில் ஆரம்பித்தார். தன்னம்பிக்கையின் அடிப்படையின் பேரில் பிற நாட்டாருடைய உதவிகளை எதிர்பாராமல் ஆரம்பித்தார். மக்களுடைய கடவுள் பக்தியோடு இணைக்கப்பட்டிருந்த அவருடைய இயக்கம் வெற்றி பெற்றது.

நம்முடைய ஐந்தாண்டுத் திட்டங்களுக்கும் இந்திய மக்களுடைய கடவுள் பக்திக்கும் சம்பந்தம் ஒன்றும் இல்லை. இதைப் பற்றிச் சொல்வாருமில்லை. நம்முடைய பொருளாதாரத்தை மிஞ்சி மேனாட்டு உதவியை எதிர்

பார்த்துக் கட்டப்பட்ட கோட்டைக்கும்காந்தி மகானுடைய ராட்டைக்கும் வெகு தூரம்!

ஏழுநூறு கோடி ரூபாய் அமெரிக்காவிலிருந்து வந்தால்தான் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிகரமாக முடியும் என்கிறோம்! இதுவல்லவா தோல்வி மனப்பான்மைக்கு அறிகுறி!

திட்டம் வகுக்கப்பட்டுள்ள அடிப்படைக் கொள்கையில் பாரதப் பண்பில்லை. அதுமட்டுமல்ல, அவற்றை நிறைவேற்றச் சொந்தப் பணம், சொந்த முயற்சி என்று காந்தி மகான் காண்பித்த வழியையும் காணோம்! பின் காந்தி மகானின் திட்டங்களுக்கும் இவற்றுக்கும் எந்த விதத்தில் சம்பந்தம் இருக்கின்றன?

நமது ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றிக் குறை கூறுபவர்களோ, இத்திட்டங்களினால் ஏற்படக்கூடிய பொருளாதார கஷ்டங்களை நன்கு உணர்ந்தே பேசுகிறார்கள்.

தனி நபர் வருமானம், 1939 ல் இருந்ததை விட இன்று நான்கு மடங்கு உயர்ந்திருக்கிறது என்று புள்ளி விவரம் காண்பித்துப் பேசுகிறார்கள்! அதாவது 1939 ல் பத்து ரூபாய் சம்பாதித்தவன் இன்று 40 ரூபாய் பெறுகிறான் என்கின்றனர். ஆனால் 1939ல் ஒரு ரூபாய்க்கு ஐந்து படி அரிசி கிடைத்தது. ஆனால் 1951 - முதற் கொண்டு இன்று வரை ஒரு ரூபாய்க்கு ஒன்றேகால்படி கிடைப்பதே அரிது. அதற்கும் சர்க்கார் வெளியூரிலிருந்து அரிசி தருவித்து ஏராளமான நியாய விலைக் கடைகளை வைக்க வேண்டியதாக இருக்கிறது! இப்படி நிலைமையானால் பத்து ரூபாய் சம்பாதித்தவன் நாற்பது ரூபாய் சம்பாதித்து என்ன பயன்? எந்தவிதத்தில் அவன் பொருளாதார நிலை உயர்ந்திருக்கிறது?

புள்ளி விவரங்களை மட்டும் வைத்துக் கொண்டு பசியாற்ற முடியாது.

அமெரிக்க அரசாங்கத்திடமிருந்துபெருந் தொகை கடன் பெற்று அபிப்பிராய சுதந்திரங்களை இழந்தாலும் தோல்வி. கடனைப் பெ ஏமக் நிர்மந்திரி திருப்பினாலும் தோல்வியே. இது வெறும் மனப்பான்மையன்று! புறக்கணிக்க முடியாத உண்மை!

பத்து ஆண்டுகளுக்குள் கடன் பெற்ற எழுநூறு கோடி ரூபாயை நாம் திருப்பிக் கொடுக்க இயலும் என்று நம்பத்தகுந்த முறையில் யாரேனும் நிரூபித்து விட்டால் நாம் எழுதியதை வாபஸ் பெறுவதற்குத் தயார். அதுவுமன்றி, வரும் பத்தாண்டுகளில் ராணுவச் செலவு மேலே ஏறாது என்றும் நிரூபித்து விட்டால் மிக்க மகிழ்ச்சியுடன் அந்த உறுதி மொழியை ஏற்றுக் கொள்வோம்! இல்லாவிடில் இந்த அமெரிக்கக் கடன் உதவி இருதலைக்கொள்ளியே யாகும்.

# சரித்திரத்தை மாற்றும் மதியீனம்

இலங்கையின் சரித்திரத்தைத் திருத்தி எழுத வேண்டுமென்ற ஒரு கிளர்ச்சி நாளுக்கு நாள் பலப்பட்டு வருகிறது. அத்தேசச் சரித்திரத்தைப் பலர் பலமாதிரியாகத் திரித்து எழுதி யிருப்பதாகச் சிலர் கூறத் தொடங்கியிருக்கிறார்கள். உண்மையான சரித்திரத்தைச் சரியான முறையில் எழுத வேண்டுமென்று கோரும் இவர்களுடைய இலட்சியம் என்ன தெரியுமா? புராதன இலங்கையில் தமிழர்களும் தமிழ்க் கலாசாரமும் முற்றாக இல்லையென ஸ்தாபிக்க முயலுவதுதான்.

ஒரு தவறை மறைக்க ஒன்பது தவறுகள் செய்த கதையாக இருக்கிறது, இலங்கையில் தோன்றியுள்ள சரித்திர மாற்றுப் படலம். தலைமுறை தலைமுறையாக அங்கு வாழும் தமிழ் மக்களின் பிரஜா உரிமைக்கு முதலில் ஆபத்து ஏற்பட்டது. பிறகு மொழி உரிமையும் வழங்க மறுத்தார்கள். அந்தக் கிளர்ச்சிகளில் வெற்றிபெற்ற சமூக வெறியர்கள் இப்போது சரித்திரத்தையே மாற்றி எழுத வேண்டும் என்கிறார்கள்.

உதாரணமாக, சிங்கள வம்சத்தின் ஸ்தாபகரான விஜயன் என்ற இந்திய இளவரசர் பாண்டிய ராஜகுமாரியை மணந்து கொண்டார்; அவரும் அவர் சகாக்களும் பாண்டிய நாட்டுத் தமிழ்ப் பெண்களை மணந்து அவர்கள் பல்கிப் பெருகியே சிங்கள வம்சம் தோன்றிய தென்பது இதுவரை எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட சரித்திர வரலாறு. விஜயன் தமிழரா, அல்லது வட இந்தியனா என்ற ஒரே அம்சத்தில்தான் கருத்து வேற்றுமை இருந்தது.

தமிழ், தமிழகம், தமிழர் என்ற சம்பந்தமே சிங்கள வம்ச வரலாற்றில் இருக்கலாகாதென்று விரும்பும் சிலர், விஜயனும் அவரது சகாக்களும் வட இந்தியர்கள் என்று கூற முற்பட்டிருக்கிறார்கள். அவர்கள் மணந்த பாண்டிய நாட்டுப் பெண்கள் வட மதுரையைச் சேர்ந்த பாண்டு ராஜ வம்சத்தவர்களே தவிர, தென் மதுரையைச் சேர்ந்த தமிழ்ப் பெண்கள் அல்ல என்கிறார்கள்.

இலங்கைக்கு விஜயன் வந்ததாகக் கூறப்படும் கி. மு. ஆறும் நூற்றாண்டில் வட மதுரையில் பாண்டு மன்னர் என்று யாரும் இருந்ததில்லை. அப்பொழுது யாதவ வம்சத்தைச் சேர்ந்த சூரசேனன் வட மதுரையில் அரசு புரிந்ததாகச் சரித்திரம் கூறுகிறது.

இலங்கையில் முருகனையும் கோணேசரையும் திருக்கேதீச்வரரையும் வழிபட்ட விஜயன், தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் என்பதற்கு இன்னொரு ஆதாரம் இருக்கிறது. கி. மு. ஆறும் நூற்றாண்டில் ஆரியாவர்த்தத்தில் முருகன் வழிபாடு இருந்ததில்லை. முருகன் வழிபாடு தமிழரின் தனிப் பெருமை.

இவ்விதமாக, விஜயனும் அவரது ராணியான பாண்டிய ராஜகுமாரியும் தமிழர்கள், சைவர்கள் என்பதற்கு எவ்வளவோ ஆதாரங்கள் இருக்கையில் அவற்றை மறைத்துச் சிங்களவர்களின் மூதாதையர்கள் தமிழ்க் கலப் பற்றவர்கள் என்றும், அவர்கள் காலத்தில் இலங்கையிலே தமிழ்க் கலை, கலாசாரங்கள் இருந்தது கிடையாது என்றும் சரித்திரத்தை மாற்றி எழுதச் சிலர் முற்பட்டுள்ள அநீதியை என்னவென்று சொல்லுவது!

# செப்படி வித்தையா?

— கொழும்பு, செப்டம்பர் 14ல

தமிழ்ப் பிரதேசங்களில் சிங்களவர்களைப் பெருவாரியாகக் குடியேற்றித் தமிழ் மக்களை அவர்களுடைய பூர்வீக பூமியிலேயே சிறுபான்மையோர்களாக்கும் முயற்சியை அரசாங்கம் கைவிட்டு விட்டதாயும், சமீபத்தில் ஏற்பட்ட சமரச ஒப்பந்தத்தில் தமிழ் மக்களுக்குக் கிடைத்த ஒரே ஒரு நன்மை இது தான் என்றும் இதுவரையில் சொல்லிக் கொள்ளப்பட்டு வந்தது. தமிழ்ப் பிரதேசங்களில் சிங்களவர்களை இனி குடியேற்றுவதில்லையென்று பிரதம மந்திரி வாக்குறுதியளித்திருப்பதாயும், தமிழர்களுக்கு அவர்களுடைய பிரதேசம் பாதுகாக்கப்பட்டு விட்டது சமரச ஒப்பந்தத்தின் மாபெரும் வெற்றியென்றும், தமிழரசுக் கட்சித் தலைவர்கள் பெருமையோடு அறிவித்தனர். துரதிர்ஷ்டவசமாக இந்த வெற்றி அற்ப சந்தோஷத்தில் முடிந்துவிடும் போலிருக்கிறது.

தமிழ்ப் பிரதேசமான பதவியா என்னுமிடத்தில் குடியேறச் சுமார் அறுபது சிங்களக் குடும்பங்கள் இவ்வார ஆரம்பத்தில் அனுப்பப்பட்டன. இதைக் கேள்விப்பட்டவுடன் தமிழரசுக்கட்சித் தலைவர்கள் கலவரமடைந்து போனார்கள்; பதவியாவில் சிங்களவர்களைக் குடியேற்றுவது சமரச ஒப்பந்தத்துக்கு விரோதமானதென்று அவர்கள் பிரதம மந்திரியிடம் பலமான ஆட்சேபணை தெரிவித்தார்கள். உடனே பதவியாவுக்குப் போய்க் கொண்டிருந்த சிங்களக் குடும்பங்களை அரசாங்கம் பாதி வழியில் நிறுத்தியது. தமிழரசுக் கட்சியின் ஆட்சேபணையை அனுசரித்துச் சிங்களக் குடியேற்றத்தை அரசாங்கம் நிறுத்திவிடப் போவதாகப் பலரும் எதிர்பார்த்தனர். சிங்களவர்களின் எதிர்ப்பைச் சமாளித்துச் சமாதானப்படுத்தப் பதவியாவுக்குப் புறப்பட்ட சிங்களக் குடும்பங்களை வரவேற்றுக் குடியேற்ற அங்கு ஏற்பாடுகள் பூர்த்தியடையவில்லை யென்றும், ஆகையால்தான் புறப்பட்டுப்போன குடும்பங்கள் பாதி வழியில் நிறுத்தப்பட்டதாயும் அரசாங்கம் ஒரு அறிக்கையை வெளியிட்டது. உடனே தமிழரசுக் கட்சித் தலைவர்களை அழைத்துப் பதவியாவில் குடியேறச் சென்ற சிங்களக் குடும்பங்கள் பழைய ஏற்பாட்டின்படி குடியேறப்போவதாயும் அவர்களைத் தடுக்க முடியாதென்றும் பெருவாரியான தோரணையில் சிங்களவர்கள் இனிமேல் தமிழ்ப் பிரதேசங்களில் குடியேற்றப்பட மாட்டார்களென்றும் பிரதம மந்திரி தெரிவித்திருக்கிறார்.

சிங்களவர்களைத் தமிழ்ப் பிரதேசங்களில் இனிக் குடியேற்ற மாட்டோமென்று அரசாங்கம் கூறுவது தமிழ் மக்களை ஏமாற்றும் செப்படி வித்தையென்றும் இதுமாதிரி வித்தைகளில் தமிழ் மக்கள் ஏமாறும் காலம் மலையேறி விட்டதென்றும் அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலம் அறிவித்திருக்கிறார். தமிழ்ப் பிரதேசங்களைச் சிங்கள மயமாக்கக் கூடாதென்ற எண்ணம் அரசாங்கத்துக்கு உண்மையாக இருந்தால் அதைப் பகிரங்கமாகத் தெரிவிப்பதற்கு என்ன? தமிழ்ப் பத்திரிகைகளுக்கு ஒரு விதமாகவும் ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு ஒரு விதமாகவும் சிங்களப் பத்திரிகைகளுக்கு வேறொரு விதமாகவும் அறிக்கைகள் விடுவதும் இடத்துக்குத் தக்கபடி பேசுவதும் ஏன் என்று ஸ்ரீ பொன்னம்பலம் கேட்டிருக்கிறார்.

இவ்வாரம் வெளிமடை தேர்தல் தொகுதியில் ஒரு பார்லிமெண்டரி உபதேர்தல் நடந்தது. அந்தத் தொகுதி அங்கத்தினராயிருந்த ஸ்ரீ ராஜரத்ன என்பவர் ஒரு தேர்தல் ஆட்சேபணை மனுவின் காரணமாகத் தமது பதவியை இழந்ததினால் உபதேர்தல் நடக்க வேண்டியதாயிற்று. அவருடைய மனைவியான ஸ்ரீமதி குஸுமா ராஜரத்ன என்பவர் தேர்தலில் போட்டியிட்டார். சமஷ்டிக் கட்சித் தலைவர்களுடன் பிரதம மந்திரி செய்து கொண்ட ஒப்பந்தத்தை உடனே ரத்துச் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தி, அந்த அடிப்படையில் இந்தப் பெண்மணி தேர்தலில் போட்டியிட்டு, இரண்டு ஆண் அபேட்சகர்களைத் தோற்கடித்துப் பெரும்பான்மையான ஓட்டுகளுடன் வெற்றி பெற்றிருக்கிறார். தமது தேர்தல் வெற்றியைப் பார்த்த பிறகாவது சமரச ஒப்பந்தத்தைப் பிரதம மந்திரி உடனே ரத்து செய்ய வேண்டு மென்றும், இல்லாவிட்டால் அக்டோபர் முதல் தேதி சிங்களவர்கள் ஒரு மாபெரும் சத்தியாக்கிரகப் போராட்டத்தை ஆரம்பித்து அரசாங்கத்தைக் கவிழ்த்து விடுவார்களென்றும் ஸ்ரீமதி ராஜரத்ன ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். சத்தியாக்கிரகம் செய்ய வேண்டுமென்ற யோசனையை ஆரம்பித்தது முன்னாள் ஆளும் கட்சியான யு. என். பி. கட்சித் தலைவர்களே யாகும். அந்தக் கட்சியின் தலைவரும் முன்னாள் பிரதம மந்திரியுமான ஸர் ஜான் கொத்தலாவலை நான்கு மாத காலம் லண்டனில் உல்லாசப் பொழுது போக்குகளில் ஈடுபட்டுவிட்டு இந்த வாரம் கொழும்பு திரும்பி யிருக்கிறார்.

— ரஜனி

ஆகஸ்டு மாதச் சிறுகதைப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற

**வைரம்**

என்னும் கதை அடுத்த இதழில் பிரசுரமாகிறது.

பரிசு பெற்றவர்: திரு டி. எஸ். கோதண்டராமன், 47-பி, கச்சேரி ரோடு, விழுப்புரம்

Your Beauty

needs this finishing touch of Max Factor flattery!

*Here's the Wonderful Powder that gives your skin a clearer, brighter, fresher-than-ever loveliness!*





DEBBIE REYNOLDS
in RKO'S BUNDLE OF JOY

*finest-in-the-world* **FACE POWDER**

**MAX FACTOR**
HOLLYWOOD

Available at all Leading Cosmetic and General Stores

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA.

Aiyars: FP 7

# மதுபாலாவின் அழகின் இரகசியம்

கோத்ரெஜ்

**வத்னி***

சாவி மார்க்




100% ஸ்வதேசி

* "தாய்நாடு" என்று அர்த்தங்கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

## சோப்பைப்




இந்தியாவில் நபர் ஒன்றுக்கு ஆண்டுதோறும் 9.5 அவுன்ஸ் சோப்பு மட்டுமே செலவாகிறது. அமெரிக்காவில் நபர் ஒன்றுக்குச் செலவாகும் 25 பவுண்டின் அளவையோ அல்லது ஜப்பானில் கூட செலவாகும் 3 பவுண்டு சோப்பின் அளவையோ ஒப்பிடுகையில், இந்த அளவு மிகவும் சொற்பமே. ஆகவே நம் நாட்டிற்கு மிகவும் அவசியமான சமுதாய சுகாதார நலனைப் பற்றி ஜனங்களுக்குப் போதிய போதனை செய்துதான் ஆகவேண்டும்.

பொதுஜன நன்மைக்காக கோத்ரெஜ் ஆல் வெளியிடப்பட்டிருக்கிறது.




அவரவர்கள் பாப புண்ணியங்களை ஒட்டிப் பிறவிகள் எடுப்பதாக நம் நம்பிக்கை இருக்கிறது. அப்படி எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும் ஒரே ஒரு ஜன்மத்தில் ஒரு நாள் அற்புதமாக அமையுமானால், அதற்காக எத்தனை பிறவிகள் எடுத்து எடுத்துக் காத்தாலும் பயனற்றுப் போகாது. அப்படித்தான் அன்று ஆவணி மாதம் இருபத்தோராம் தேதி காஞ்சி க்ஷேத்திரத்தில் நமது சத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் கனகாபிஷேகத்தைப் பார்த்த அத்தனை மக்களும் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

நாங்கள் காஞ்சீபுரம் போய்ச் சேரும் போதே பூஜை முடிந்து விட்டது. தீர்த்தம் அளித்துக் கொண்டிருந்தார்கள். அதற்காகச் செல்லும் வரிசையில் நின்று கொண்டோம், என்னை அழைத்துச் சென்ற பெரிய மாதும் நானும். கூட்டம் அதற்குள் நெருக்கியது. ஒருவரை ஒருவர் நெட்டித் தள்ளினார்கள். அந்த நெருக்கடியில் அகப்பட்டுக் கொண்ட பெண்மணிகள் நசுங்கிவிட்டனர். குழந்தைகள் அலறின. குழந்தைகளைக் கொண்டு வந்த பெண்களைச் சிலர் ஏசினார்கள். அப்போது ஒரு பெண்மணி, "சரிதான்! பேசாமல் இருங்கள். இந்த ஒரு நாள் இந்தச் சந்நிதியில் கோபத்தையும் தாபத்தையும் கொண்டு வராதீர்கள். போகிற வெள்ளம் நல்ல இடத்துக்குத்தான் போகிறது. அதில் அகப்பட்டுக் கொண்டதனால் ஒரு பாவமுமில்லை. எல்லாரும் கூடப் பிறந்தவர்கள் மாதிரிதான்" என்றாள். வேறு ஒரு பெண்மணி, "குழந்தைகளைக் கொண்டுவரக் கூடாது என்கிறீர்களே, எத்தனை பிறவிகள் எடுத்தால் இன்று போல ஒரு நாள் கிடைக்கும்? ஆயுளிலே ஒரு நாள்! குழந்தைக்கும்தான், எனக்கும்தான். பெரியவர்களைக் கண்ட பாக்கியம், அவர்கள் கையால் கிடைத்த தீர்த்தத்துக்கு இந்தச் சிரமம் படக்கூடாதா?" என்றாள்.

உடனே படீர் என்று மனக் கதவு ஒன்று திறந்து வெளிச்சத்தை அள்ளி வீசியது. அதன் பிறகு அங்கு மனிதக் குலமோ அதன் குறைபாடுகளோ தோன்றவில்லை. தாயுள்ளம் போன்ற அன்புப் பெருக்கு ஒன்று பக்தியோடு பெருக்கெடுத்துச் சுடரொளியைத் தேடிச் செல்லும் பிரவாகம்தான் தெரிந்தது. ஆயுளிலே ஒரு நாள் என்பது அரிய மந்திரமாகப் பட்டது; துணை வந்த பெரிய அம்மாவும் நானும் பிரிந்து விட்டோம். சிறிது நேரம் தேடினேன். தனியே வந்த மனிதன் தனியே செல்ல வேண்டிய பாதையிலே துணைக்கு இடமில்லை போலும் என்று நினைத்து நான் தீர்த்தம் வாங்கச் சென்றேன்.

பிறகு அபிஷேகத்துக்காக எழுப்பியிருந்த மேடைக்கு எதிர்ப் பக்கத்திலே, தெருவின் மறு பக்கத்திலே ஓர் இடம் பெற்று நின்று கொண்டேன்.

ஜனத் திரள் ஒரே நோக்குடன் ஒரே இடத்தில் பார்வை வைத்து நின்ற அற்புதம் நெஞ்சை அள்ளியது.

சரியாகப் பன்னிரண்டரை மணிக்கு மேடைக்கு வந்து விட்டார்கள் பெரியவர்கள். மேடைமீது ஏறின உடனே ஒரு மின்னல் போன்ற ஜோதி அங்கே இருந்த ஒவ்வொரு ஜீவனின் உள்ளத்திலும் பளிச்சிட்டது. "ஹர, ஹர! சூரோ!" என்று வாய்கள் ஆர்ப்பரித்தன. பல்லாயிரம் கோஷங்களை எழுப்பி அலைகளுள் மேடைமீது வீற்றிருந்த தவச்சுடரைப் பதிய வைத்துவிட எண்ணியது போல் கணக்கற்ற கைகள் சிரமேற் குவிந்து நின்று காஞ்சி க்ஷேத்திரத்தின் எண்ணிக்கைக்கு அடங்காத கோபுரங்களுடன் போட்டி யிட்டுக் கொண்டிருந்தன.

மேடைமீது எழுந்தருளியிருந்த சத்குரு அவர்களுக்குப் பக்த கோடிகள் பூ மாலைகள் அணிவித்தார்கள். பெரிய பெரிய தண்டு மாலைகள், சிறிய பூ ஆரங்கள், தொடுத்த பூச்சரம், வில்வமாலைகள் — இப்படியாகக் கைகள் நிமிர்ந்து நிமிர்ந்து மேலே எழும்பி எழும்பி வணங்கி அணிவித்தன. கருணைச் சுடர் அவற்றை ஏற்றுக்கொண்டது. பக்திப் பெருவெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அந்தச் சுழற்சியிலே மனம் விமானமேறி ஆனந்தக் கூத்து ஆடியது.

ரோஜா மாலை போட்டபோது ஒரு கோலம், வில்வமாலைக்கு ஓர் அழகு, மல்லிகைச் சரத்துக்குத் தனி மதிப்பொன்று. — இப்படியாக விநாடிக்கு விநாடி மனத்தைக் கவரும் கண்கொள்ளாக் காட்சி முன்னே பளிச்சிட்டது. தவத்திலே மிகுந்த ஓர் உருவம், காஷாய வஸ்திரம், தென்னங் கீற்றுப் பந்தல், மரத்தினால் ஏற்பட்ட மேடை — இவ்வளவே ஊனக் கண்கள் பார்த்தன. ஆனால் அங்கே கூடியிருந்த மக்களுக்கு ஊனக் கண்கள் குருடாகி விட்டிருந்தன. சரீரச் செவிகள் செவிடாகி விட்டிருந்தன. உள்ளிருந்து ஒரு தூய வெளிச்சமே வழி காட்டியது. அந்த வெளிச்சத்திலே சுவர்ணமயமான ஒரு சபாமண்டபம் தெரிந்தது. அதில் ரத்தின சிம்மாசனத்திலே குளிர்ந்த பனி மெத்தையிலே அருளாளன் ஸ்ரீ சிவபெருமான் கொலு வீற்றிருப்பதைக் கண்டோம். சாட்சாத் ஸ்ரீ தட்சிணாமூர்த்தி எழுந்தருளியிருப்பதைக் கண்டது அகக்கண்.

சுமார் மணி ஒன்று இருக்கும். வேத நாவினுல் பந்தப்பட்ட பொற்கலசங்கள் கூடி வந்தன. நாட்டின் புண்ணிய நதிகள் எல்லாம் பொன்னுடை போர்த்துக் கொண்டு மங்கலமான மாவிலை, புஷ்ப அலங்காரத்துடன் வந்து கூடின. குளிர்ச்சி மிகுந்த ஆண்டவனுக்குக் குளுமையூட்ட முயன்றனவோ என்று பிரமை தட்டியது.

அந்தம் மிகுந்த அந்த ஜோதிப் பிழம்பினின்று தோன்றிய ஓர் அற்புத சூரியச் சுடர் போல் புதுப் பெரியவர்கள் தோன்றினார்கள். அங்கே ஆதி தந்தையையும் சேயையும் கண்டன கண்கள். கையிலே தண்டமும் இடுப்பிலே சுற்றி விடப்பட்ட பொன்னுடையுமாக மின்வெட்டும் வேகத்திலே திரும்பிக் காட்சி கொடுத்த மகானைக் கண்ட யாவரும் ஒரு மனித உருவைக் காணவில்லை, ஆசாரிய குருவைக் கூடக் காணவில்லை. சாட்சாத் குமர குருபரக் கடவுளான பால முருகனைத் தரிசித்து மெய் சிலிர்த்தனர் பக்த கோடிகள்.

புது ஆசாரியரவர்கள் பழையவருக்குச் செய்த பூஜை, காணக் கோடிக் கண்கள் போதா. சக்தி வாய்ந்த ஓர் ஆத்மக் கண்ணால் தான் காணக் கூடிய சேவை அது. ஒவ்வொரு செய்கையிலும் அளவு கடந்த அன்பு, பக்திப் பரவசம், ஆனந்தக் களிப்பு, விநயம் மிகுந்த குரு சிஷ்யபாவம், பார்த்துக் கொண்டிருந்த ஒவ்வொருவரையும் புடம் போட்டுக் குளிப்பாட்டி எடுக்கக் கூடிய வல்லமை பொருந்தியதாக இருந்தன.

ஆர்த்திகமான உலகத்திலே பொன்னுக்குத் தனி மதிப்பு. ஆகையால்தான் நாம் பொன்னுடை போர்த்தி, பொன்னுடை அபிஷேகம் செய்விக்க முற்பட்டோம். ஏழைகளாக இருந்தாலும் செல்வமான இந்த வேலையை மேற்கொள்ளத் துணிந்ததாக ஒரு பெரியார் குறிப்பிட்டார். ஏழைகளாகக் காஞ்சியில் இருந்திருக்கலாம். ஏழையாகத் திரும்பிய ஆள் ஒருவர்கூடக் கிடையாது. பக்திச் செல்வத்திலே மிகுந்து, பேறு பெற்றுப் பெருமிதத்தோடு மிடுக்கு நடை போட்ட நிறைந்த உள்ளங்களே திரும்பின. பொன்னுக்குக் கனகாபிஷேகம் செய்தோம். ஒரு பொன் கூடத் தெய்வச் சுடர்மீது ஒட்டவில்லை. அவை மீண்டும் உதிர்ந்து நம் மீதே மழையாகப் பெய்து கருணைப் பெருக்கிலே நனைத்து ஆத்மாவுக்குப் பொன்னொளி அளித்தன.

ஒவ்வொரு சமயம் விசேஷங்களில் அலங்காரம் செய்யும்போது ஒவ்வொரு மாலையையும், ஒவ்வொரு மலரையும் பார்த்துப் பார்த்து அமைப்போம். அப்பொழுது நிறத்திலே ஒரு முரண், அமைப்பிலே ஒரு சிதறல் தோன்றுவதுண்டு. அன்றோ பக்தர்கள் மனம் நெகிழ, கைநடுங்க, மேல் நோக்குள்ள விநயத்தோடு பதற, மாலைகள் போட்டார்கள். ஒவ்வொன்றும் அதனதன் இடத்திலே அழகாகத் தானாக அமர்ந்து கோலக் காட்சி தந்தன. எல்லாவற்றுக்கும் மேலே தெட்டி மாலை ஒன்று ஏறி அமர்ந்தது. அது ரத்தின மாலைகளுக்கு வைர முடி வைத்தது போல இருந்தது. தோள் தாங்காதபக்திமலர் சமர்ப்பணத்தைத் தலை தாங்கியது. அவர் கரங்கள் கலைக் கிளிகள் இரண்டைப் பிடித்தன. மனிதர்கள் தங்கள் உள்ளப் பளுவையெல்லாம் தாங்க மாட்டாது தூக்கி, கவலையோடும் கலவரத்தோடும், பலவீனத்தோடும் ஆண்டவனிடம் சமர்ப்பித்தால், ஆண்டவன் அத்தனையையும் ஒரு விளையாட்டாக ஏற்பதற்கு ஓர் உருவகக்காட்சியோ அது? அந்த நெருக்கத்திலே எவ்வித சலனமுமின்றி வாடாத புன்னகை அருளிய பெருவுள்ளத்தை என்ன சொல்ல!

அபிஷேகம் முடிந்து, கற்பூர ஆரத்தி ஆனபோது அத்தனை உள்ளங்களும் ஆண்டவனுக்குத் தத்தம் ஆத்மஜோதியை அர்ப்பணித்தன. "ஜய ஜய சங்கர, ஹர, ஹர, சங்கர" என்ற

தொனி வானைப் பிளந்தது. ஆர்ப்பரிக்க அறிந்த உலகம் ஆரவாரித்தது. ஆட்கொள்ள அறிந்த ஆன்மா அமைதியாக நின்றது.

இறுதியில், இனிய கானத்தை அள்ளி வீசுவதற்கென்றே பிறந்த ஒரு பெண்மணியின் குரல் கேட்டது இலேசாக. அந்தக் குரலுடன் அங்கு கூடியிருந்த அத்தனை தாய்மார்களின் உள்ளங்களும் ஒன்றி மங்களம் பாடின.

அந்த அமுதகானத்தைக் கேட்டு விட்டு நாங்களும் வீடு போய்ச் சேர்ந்தோம். மழைவிடாமல் பெய்யத் தொடங்கியது. ஆனந்தக் குளிர்ச்சி கொண்டது இதயம்.

# காஞ்சியில் கனகாபிஷேகம்

கல்பனா

விஷ்ணு காஞ்சி ஆனைகட்டித் தெருவில் வீடுகட்டி வாழ்கிறவர்களெல்லாம் மிகவும் பாக்கியம் செய்தவர்கள்.

அந்த வீதிக்குச் சென்ற வாரம் விஜயம் செய்த தமிழ் மக்கள் புண்ணியசாலிகள்!

உத்தமர்களில் உத்தமரும், எளியவர்களில் எளியவரும், வல்லவரில் வல்லவருமான, நம் காலத்துத் தலைசிறந்த தெய்வ புருஷர் ஒருவரின் கனகாபிஷேக வைபவத்தை இரு கண்களினால் குளிரக் குளிரக் காணக் கொடுத்து வைத்தவர்கள் பாக்யவான்கள்!

அந்தத் தெய்வ மனிதரின் சிரஸிலே தெளிக்கப்பெற்ற ஸப்த நதிகளின் தீர்த்தங்களும் பிறவி எடுத்த பயன் பெற்றன.

அவருடைய திருமேனியிலேசொரியப்பெற்ற ஒவ்வொரு புஷ்பமும் புனித மடைந்தது.

புஷ்பங்களுடன் வர்ஷிக்கப் பெற்ற ஆயிரத்தெட்டு கனக மோகராக்களோ, இன்னும் ஆயிரத்தெட்டு வருஷ காலத்துக்குப் பின்னும் அழியாத புண்ணியத்தை அடைந்தன.

அந்த மகானுடைய உடம்பிலே போர்த்தப் பெற்ற சால்வை,—நாலு தலைமுறையாகப் பெட்டியிலே தவங் கிடந்த தஞ்சாவூர் ராஜாவின் சால்வை,—சாபல்யமடைந்தது.

தமிழகத்தின் பத்து ஜில்லாக்களிலிருந்தும், ஆந்திர தேசத்தின் மூலை முடுக்குகளிலிருந்தும் வந்து குழுமியிருந்த அந்தப் பக்தகோடிகளின் தலையிலே விழுந்த ஒவ்வொரு அட்சதை மணியும் வாழ்வின் துன்ப துயரங்களையும் குறைகளையும் நீக்கும் மோட்சமணி ஆயிற்று.

விஷ்ணு காஞ்சி ஆனைகட்டித் தெருவில் சென்ற ஆறாந் தேதி ஜகத்குரு காமகோடி பீடாதிபதிகளுக்கு நடைபெற்ற கனகாபிஷேக வைபவத்தைக் காணும் பேறு பெற்றவர்கள் பாக்கியசாலிகள்தான்! சந்தேகமில்லை.

இந்த மண்ணுலகில் தர்மமும் அதர்மமும் மனித குலம் தோன்றிய நாள் தொட்டு நெடுகிலும் இருந்து வருகின்றன.

அதர்மத்துக்குப் பூரண வாரிசு கொண்டாடிக் கொண்டு பற்பலர் அவ்வப்போது கிளம்பிக் கொண்டிருப்பது போலவே, தர்மத்தை நிலைநாட்டவும், தர்ம வழியின் மேன்மையை எடுத்துச் சொல்லவும் சிற்சில மகாபுருஷர்களும் அவ்வப்போது அவதரித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

புராதனமான ஹிந்து மதத்தில் அதர்மமும் மௌடீகமான மாயையும் அளவு கடந்து நுழைந்து அதன் ஜீவாதாரமான தத்துவங்களையே நாசம் செய்துவிடும் அபாயம் நேர்ந்த போது ஆதிசங்கரர் காலடியில் அவதரித்தார்.

ஹிந்து மதத்தின் உட்பகைவர்களுடனும், வெளிப் பகைவர்களுடனும் இளம் ஆதிசங்கரர் போராடி வெற்றி கண்ட வரலாறு வெகு பிரசித்தமானது.

அத்தகைய வரலாற்று நாயகர் ஆதிசங்கரர் ஸ்தாபித்த மடங்களில் காஞ்சி காமகோடி மடத்தின் ஆச்சார்ய பீடத்தில், நம்முடைய தலைமுறையில் வீற்றிருக்கும் மகானை, ஸ்ரீலஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதியைக் கண்டவர்கள் தர்மத்தையும் இன்னதென்று அறிந்து கொள்ளலாம்.

சாந்த மயமான தோற்றமும், காட்சிக்கு எளிமையும், தெய்வப் புலமை மிக்க குரலோசையும், அன்பு ஒளியும் தவிர வேறு எது தர்ம தேவதையின் உருவமாக இருக்க முடியும்?

இத்தகைய தெய்விக புருஷரிடம் உண்மையிலேயே தெய்வம் குடிகொண்டிருக்கிறது என்பதற்கு ஒரு உதாரணமும் இந்தச் சமயத்தில் கிடைத்திருக்கிறது.

இரு கண்களிலும் ஒளி நிறைந்த ஒரு பெரியவர் ஆச்சார்யாளுக்குக் கனகாபிஷேகம் செய்து பார்க்க விரும்பினார். ஆச்சார்யாளிடம் அதைத் தெரிவித்தபோது அவர் இதற்குச் சம்மதிக்கவில்லை. அந்தப் பெரியவர் வருத்தத்துடன் திரும்பிப் போனார். சில நாட்களில் அவருடைய கண்கள் பார்வையை இழந்தன; திரும்பவும் அவர் ஆச்சார்யாளிடம் வந்து கனகாபிஷேகத்துக்குச் சம்மதிக்குமாறு பிரார்த்தித்தார். "சம்மதித்து என்ன பிரயோசனம்? அதைப் பார்க்க உங்களுக்குக் கண்கள் இல்லையே?" என்று ஆச்சார்யாள் சொன்னார்கள்.

"அதனால் என்ன? மனத்துக்குத் திருப்தி ஏற்படுமல்லவா?" என்றார் பெரியவர். இதன்மேல் ஆச்சார்யாள் சம்மதித்தார். ஏற்பாடுகளைக் கவனிக்கப் பெரியவர் புறப்பட்டுப் போனார். போன இடத்தில் அவருக்குக் கண் பார்வை திரும்பி வந்துவிட்டது! ஆச்சார்யாளிடம் இருக்கிற தெய்விக சக்தியால் அந்த அற்புதம் நிகழ்ந்துள்ளது. இல்லாவிட்டால் வேறு எதனால்தான் ஏற்பட்டிருக்க முடியும்!

கண்களை இழந்து திரும்பப் பெற்ற பெரியவர் அத்தனை பெரிய சதஸிலிருந்து ஆச்சார்யாளின் தெய்வ சக்தியை அறிவுறுத்திக் கொண்டிருந்தார். கண் படைத்தவர்களை எல்லாம் இதைப் பார்க்கும்படி நாம் கேட்டுக் கொள்கிறோம். கண் இருந்தும் பார்க்க மறுக்கும் புண்ணியவான்களையும் ரகசியமாகவாவது கண் திறந்து பார்க்கும்படி கோருகிறோம்.

அவ்விதம் பார்க்கிறவர்கள், பார்க்க முயற்சிப்பவர்கள் இறைவனைக் காணலாம்.

# ஓடாய் உழைப்பானேன்?

**இடம் :** லோடஸ் நாடு என்ற துயிற்கனி நாடு, கற்பனை உலகத்து நாடுகளில் ஒன்று.

**காலம் :** கிரேக்க இதிகாச காலம், என்றோ ஒரு நாள்.

**கதை :** ஹோமர் என்ற கிரேக்க மகா கவிஞன். சுமார் 2800 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து, இன்றும் கவிதையால் வாழ் கின்றவன், வாழ்விப்பவன்.

**காட்சி ஜோடனை, புதுமெருகு, வசனம்:** 19-ம் நூற்றாண்டில் வாழ்ந்த தென்னிஸன் என்ற ஆங்கிலக் கவிஞன்.

**இது வரையில் :**

*நீளும் பின்பகல். தொடுவானத்திலே ஒருபுறம் அந்திக் கதிர், மறுபுறம் சந்திர னுடைய மங்கிய வட்ட முகம். கீழே மஞ்சள் வெய்யிலில், தங்கத் துகளாக மின்னும் மணற்பரப்பு. எதிரே, மலையும், அருவியும், சோலையும், அமைதிதோய்ந்த அழகிய கனவாக விரிகின்றன. பின்புறம், தணிந்து முனகும் கடல்.*

*ஒதஸூஸ் என்ற தமது அரசனுடன், இந்த நாட்டின் கரையில் ஒதுங்கிய கிரேக்க வீரர்கள், துயிற்கனி அருந்திய போதையில், தூக்கம் போன்ற விழிப் பில், கடற்கரை மணலின் மேல் சாய்ந்து கிடக்கிறார்கள். எத்தனையோ நாள், நடுக்கடலில், புயலில் அடி பட்டு நைந்தவர்கள்; ஆகவே, உள்ளமும் உடலும் சோர்ந்திருக் கிறார்கள். துயிற்கனியைத் தின் றது வேறு சேர்ந்து கொண்டது.*

**இனிமேல் :**

**அந்தியின் ரோஜா அனலில் வெளிர்**
**முகமும்**
**மென்மைவிழியும் மெலிவுளமும்**
**மேனியராய்**
**செங்கனியும்பூவும் குலுங்கும்**
**துயிற்செருந்திப்**



**பைங்கிளைகள் ஏந்திவந்தார் பாங்காய்த் துயில் நாட்டார்**
**மாயத்துயிற்கனியை மற்றவர்க்குத் தந்திட்டார்**
**நேயமாய்த் தின்றவர்க்குத் தின்ற உடனேயே**
**பன்னக் கடலோசை எங்கேயோ நீள்தொலைவில்**
**உள்ளதோர் நாட்டில் உலம்புவதாய்த் தோன்றியது**

**பக்கத்தில் பேசும் குரலும் படர்சாவின்**
**அக்கரையில் ஓயும் அருவக்குரலாச்ச.**
**தூங்குவார்போல விழித்திருந்தார் மார்துடித்து**
**ஏங்குமொலி காதில் இசையாய்ப் பெருகியது.**

பிறகு? பிறகென்ன, சூரியன் ஒருபுறமும், சந்திரன் ஒருபுறமும் தணிந்து தொங்கிய அந்த நாட்டு மங்கல் வானின் கீழ், மெல்லிய பொன் மணற்பரப்பில் சாய்ந்தார்கள். கடலும் - கடலா அது, பேயாட்டம் ஆடிய நுரைப்பாழ் அல்லவா - கடலும், அதை ஓயாமல் தள்ளிய துடுப்பும், அவர்களுக்கு இப்போது சலித்துப் போயிற்று. படுத்தபடியே, பகற்கனவில் படிந்து, தாய் நாட்டையும், வீட்டையும் மனைவி மக்களையும் எண்ணி, மனத்தை அதுபோனபடி பகற்கனவில் அலைய விடுவதே இன்பமாகத் தோன்றியது. யாரோ ஒருவன் சொன்னான்:

'இனிமேல் ஊருக்குத் திரும்ப மாட்டோம்'.

'மாட்டோம்' என்றனர் மற்றவர்.

'இனி, எதையும் நாடி அலையமாட்டோம். இங்கேயே, இந்தத் துயில் நாட்டில் ஒன்றும் செய்யாமல், உழைக்காமல், வருந்தாமல், போரிடாமல் இருந்து வாழ்நாளைக் 'கழிப்போம்' என்று மெல்லப் பாடத் தொடங்கினார்கள்.

**திங்கள் ஒருபுறமும் செங்கதிர் ஓர்புறமும்**
**தங்கும் கரையின் தவிர்ப்பொன் மணல்மேலே**
**சாய்ந்து படுத்தார்கள்; சாய்ந்தபடியே தமது**
**தாய்நாட்டை வீட்டைத் தமரை மனைவியரை**
**மைந்தரை எண்ணிக் கனவில் அழுந்துவது**
**இன்பமாய்த் தோன்றிற்று. எதிர்கடலும் துடுப்பும்**
**அலைந்தலைந்து பேயாட்டம் ஆடுநுரைப் பாழும்**
**சலித்து மிகச் சலித்துக் கைத்தனவால். யாரோ**
**ஒருவன் குரல்கொடுத்தான்: 'ஊருக்கு இனிமேல்**
**திரும்புவதும் ஏது. திரும்போம் இனி' என்றான்.**
**'பன்னக் கடலைக் கப்பாலுக் கப்பாலே**
**உள்ளதடா நம்நாடு. உழலோம் அதைத்தேடி**
**எங்கேயும் ஓடி அலையோம். இனி என்றும்**
**இங்கே இருப்போம்' என்றிசைத்தார் எல்லோரும்**

அழகிய லோடஸ் நாடா? ஆம், அழகுடையதுதான். அது மட்டுமா? எவ்வளவு அமைதி நிரம்பியது! வேலை ஒன்றும் செய்யாமல், பகற் கனவு கண்டு, ஓய்ந்து கிடப்பதற்கு எவ்வளவு பொருத்தமான நாடு!

மதுரமான இசை நாடெங்கும் தவழ்கிறது. எவ்வளவு மென்மையான இசை!

'அன்று அலர்ந்த ரோஜாவின் மிருதுவான இதழ், தளை அவிழ்ந்து, பட்டுப் போன்ற புல்லின் மேல் விழுந்தால் எவ்வளவு மென்மையாக விழும்?

ஓங்கி வளர்ந்த மலைகளின் நடுவிலே, பள்ளத்தில் ஒரு சுனை; அதன் தெளிந்த, சலனமற்ற மார்பிலே, இரவில் விழும் பனி, எவ்வளவு மென்மையாக விழும்?

இவற்றையெல்லாம் விட மிருதுவாக அல்லவா, இந்த நாட்டிலே எங்கும் ஒலிக்கும் மெல்லிய இசை மிதந்து வருகிறது!'

இப்படி எண்ணுகிறார்கள் துயிற்கனி அருந்திய வீரர்கள். 'ரோஜா இதழையும், கங்குற் பனியையும் தேடிக்கொண்டு போவானேன், இந்த இசையின் மென்மையைக் காட்ட? தூக்கத்தில் விழி சொருகுகிறது. அடடா, என்ன சுகம்! அந்த விழியின் மேலே படிந்தும் படியாமலும் சாய்கிறது இமை. இதைப்போல், அவ்வளவு மிருதுவாக அல்லவா, நம்

பேராசிரியர்: அ. சீநிவாச ராகவன்

**அருள் வாக்கு**

கோடி கோடியாக தனத்தைத் தமது பாதத்தில் கொட்டினாலும் அதை அலட்சியமாக நினைக்கும் புண்யாத்மாக்கள் உலகத்தில் ஒருவராகிலும் இருந்தே தீருவர். அப்படிப்பட்ட மகனீயர்களுடைய சகாயத்தால் ராஜாக்கள் ராஜ்யபரிபாலனம் செய்ய வேண்டும். முற்காலத்தில் வசிஷ்ட விசுவாமித்திரர்கள் மேற்கூறிய குணமுடைய புண்யாத்மாக்களாக இருந்தார்கள். அவர்களுடைய யோசனையில்லாமல் ராஜ்யத்தில் எந்தக் காரியமும் செய்யப்பட மாட்டாது. தனத்துடன் குணமும் கூடி யிருந்தால்தான் ஒரு ராஜ்யம் பிரகாசிக்கும்.

ஸ்ரீ சங்கராச்சாரியார், காமகோடிபீடம்

முடைய உயிரின்மேல் இந்த மாய இசை துவளுகிறது! பேரின்ப வானம், அங்கே தூக்கம் என்ற அமுதம் கொழிக்கிறது. இதையல்லவா இந்த இசை நம்முடைய நெஞ்சிலே பெய்கிறது!'

**அன்றலர்ந்த ரோஜா மலரின் அவிழும்இதழ்**
**மென்மைப் பசும்புல்லைப் புல்லிவிழு**
**மென்மையினும்,**
**ஓங்கு மலை மதில்கள் சூழ்ந்த இருள்மடுவில்**
**தேங்கு புனல் மார்பின் நிரை அதிர**
**நீர்சலத்தில்**
**கங்குற் பனிமேல் கவிசெயும் மென்மையினும்**
**மென்மையாய் இங்கே மிதந்து வரும்**
**இன்ப இசை:**
**ஓய்ந்தவிழி மேல்ஓயும் மெல்இமையின்**
**மெல்லியதாய்த்**
**தோய்ந்து உயிரின்மேலே துவளுகின்ற**
**கன்னல் இசை:**
**பேரின்ப வானில் பெருகும் துயில் என்னும்**
**ஆரமுதம் இங்கே அளிக்கும் மதுர இசை.**

இப்படிப் பாடத் தொடங்குகிறார்கள், துயிற்கனி அருந்திய கிரேக்க வீரர்கள். ஒன்று கவனித்தீர்களா? லோடஸ் நாட்டில் எங்கும் உலவும் இசையின் மென்மையைக் குறிப்பதற்கு, தூக்கமே சிறந்த உவமையாகத் தென்படுகிறது இவர்களுக்கு. ஏன் தென்படாது? தூக்கந்தான் பேரின்ப நாட்டில் விளையும் அமுதமாக இப்போது அவர்களுக்குத் தோன்றுகிறதல்லவா?

மெல்ல, அரை விழியால், நாட்டைப் பார்க்கிறார்கள். அருவிகளில் எங்கும், குளிர்ந்த பாசி பச்சைப் பசேரென்று கிடக்கிறது. அந்தப் பசுமையோடு போட்டி இடுவதுபோல, குருக்கத்தி எங்கும் தழைத்து, வளர்ந்து, பாசியின் மேலே, மரகதக் கை நீட்டுகிறது. தண்ணீரிலிருந்து தலையை மெல்லத் தூக்கி, ஆம்பலும், நெய்தலும், நீலமும், கண்ணீர் சொரிகின்றன. பாறை உதட்டின் மேல், தோன்றிச் செடி, தன் சிவந்த மலரைத் தொங்க விட்டுக் கொண்டு, துயிலில் அழுந்துகிறது.

**ஓடையிலே தண்ணென்று உலவும் பசும்பாசி;**
**ஊடே நுழைந்தெங்கும் ஊரும் குருக்கத்தி;**
**ஆன்றஇலை ஆம்பல் அழுதுகண் ணீர்**
**உகுக்கும்**
**தோன்றியின் பாறை உதட்டில் துயிலாழும்.**

இதைப் பார்க்கும்போது — துயிற்கனியின் போதையிலே ஊன்றிப் பார்க்கும்போது—பொருள்கள் யாவும், ஓடாமல், உழைக்காமல் ஓய்வில் பொருந்தி இளைப்பாறுவதாகத் தோன்றுகிறது. மனிதன் மட்டும் ஏன் உழைத்து உழைத்து ஓடாக வேண்டும்? எல்லா உயிர்களையும் விட மனிதனே உயர்ந்தவன். ஆனால் அவன் மட்டும் இப்படி அல்லற்பட்டு, முடியா நெடுந் துயரில் உழல்வானேன்? தூக்கம் என்ற தெய்வ மருந்து இருக்கிறதே, அந்தச் சஞ்சீவியைப் பூசி, உள்ளத்தின் தாபத்தைத் தணிக்க, ஏன் மனிதன் முற்படவில்லை? ஓயாமல் சிறகடிக்கிறான், ஓடுகிறான், ஏன்? அமைதியை விட இன்பம் உண்டா? இல்லை என்று ஏதோ நம் முன்னே பேசுகிறதே, அதன் குரலைக் கேட்டு உய்வதற்கு மனிதன் ஏன் தயங்குகிறான்? பொருளுக்கெல்லாம் மணிமுடியாய் விளங்கும் மனிதன் மட்டும் ஓடாய் உழைப்பானேன்?

**உள்ளபொருள் அத்தனையும் ஓய்வில்**
**இளைப்பாற**
**உள்ளம் உருக்கிநாம் ஓயாத வேதனையின்**
**தீயிலே வெந்து வெந்து தீவினையில்**
**ஆழ்வானேன்?**
**பேயாய்த் திரிந்து பித்தம் பிடிப்பானேன்?**
**எல்லாப் பொருளுக்கும் ஓய்வுண்டாம் நாம்**
**மட்டும்**
**எல்லா உயிரினும் ஏற்றமாம் நாம் மட்டும்**
**நில்லாது உழைக்கின்றோம் நீண்ட இடர்க்**
**காட்டில்**
**அல்லல் தனிலிருந்தே அல்லற்கு எதிர்பட்டு**

தீரா நெடுந்துயரில் வெந்து குமைகின்றோம்
ஓயாச் சிறகு ஒடுக்கோம் ஓடியே ஓடாளோம்
இன்பமரும் தெய்வத்துயிலாம் இமையும் தன்
சஞ்சீவி பூச்சுடனத் தாபம் தணித்தறியோம்
இன்பம் அமைதியிலும் வேறில்லை இல்லை
யெனத்
தன்னுணர்வு பாடும் தத்துவத்தைக் கேட்டு
உய்யோம்.
உள்ளபொருள் அத்தனைக்கும்மேலே மணி
முடியாய்
உள்ள நாம் மட்டுமிங்கே ஓடாய் உழைப்
பானேன்?

எல்லாப் பொருளும் ஓய்வில் அழுந்திக் கிடக்கின்றனவா? ஆமாம், வேறென்ன? 'வயல் வெளியிலே மண்டிக் கிடக்கும் காட்டு மலர்களைப் பாருங்கள். அவை ஓடி உழைக்கின்றனவா, நூல் நூற்கின்றனவா, இல்லையே! ஆனால், ஒப்பற்ற பெருமையோடு விளங்கிய சாலோமன் என்ற பேரரசன் கூட, இம் மலர்களைப் போல அழகிய ஆடை புனைந்து வாழ்ந்ததுண்டா? இல்லை.' என்று கிறிஸ்தவ வேதக் கருத்தைப் போன்ற ஒரு கருத்து. ஆனால் அதன் தத்துவ வேர் மாத்திரம் இல்லாமல்—துயிற்கனி உண்டு மயங்கிய கிரேக்கர் உள்ளத்தில் அரும்புகிறது. 'அதோ, காட்டின் நடுவிலே தளிரொன்று, கனி ஒன்று, மலர் ஒன்று. இவற்றின் வாழ்க்கையைப் பாருங்கள். கவலையில்லாமல், உழைப்பில்லாமல் அவை இருந்து மறைகின்றன. அது அல்லவா வாழ்க்கை!' என்று அவர்கள் பேசுகிறார்கள்:

காட்டின் நடுவில் அதோ கண்விழிக்கும் செந்
தளிரும்
காற்றுவந்து காதற்கனிவுசொலக் கட்டவிழ்ந்து
பச்சை இலையாய் விரிந்து பசபசத்து
உச்சிவெயில் மாந்தி ஒருகவலை இல்லாமல்
பால்நிலவில் ஆடிப் படரும் பனி பருகி
தானுமப் பழுத்துத் தளர்ந்து சருகாகி
மஞ்சள் நிறமேறி மாயப் பெருங் காற்றில்
நெஞ்சு கலங்காமல் நில மிதந்திடுமாம்.

தளிர்தான் இப்படியா? அதோ கனியைப் பாருங்கள், கொம்பிற் குலுங்கும் மாங்கனியை.

தேனுகச் சாறு செறிந்து அதோ மாங்கனியும்
வேனிற் கதிர்வருட விளைந்து கனிவேறி
கொம்பிற் குலுங்கிப்பின் கூதிர்வர ஓரிரவில்
வெம்பி விதிவழியே வீழ்ந்து மறைந்திடுமாம்.

கூதிர்—இலை உதிர்காலம்.

மலரைப் பாருங்கள்:

தான்பெற்ற நாளெல்லாம் தன்தரையில்
காலூன்றி
மேனி நலுங்காமல் வெந்துழைத்துச் சோராமல்
கோலமலர் வாசக் கொழுமையினை வீசி எழில்
வாலையாய்ப் பூத்துப் பின் வாடிக் கருகிடுமாம்.

'இவற்றைப் போல மனிதன் ஏன் வாழக் கூடாது? ஓடாய் உழைப்பானேன்?' என்று கேட்கிறார்கள் துயிற்கனி உண்டு மயங்கிய கிரேக்கர். சோம்பல் அம்பலத்தின் தத்துவம் மெல்ல வடிவாகிறது.

(தொடரும்)

## "கல்கி" அக்டோபர் மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாயும் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்கேற்ற தகுதியுள்ள மற்றக் கதைகளும் "கல்கி"யில் பிரசுரமாகும். கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்துவிட வேண்டும்.

கதைகளைத் திருப்பிப்பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால்தலைகள் வைத்து அனுப்பவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறோம்.

தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும், குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

செப்டம்பர் 21 ௳ முதல்

சென்னை
மற்றும்
தென்னாடெங்கும்

டி.என்.ஆர். புரொடக்ஷன்ஸ்

# ராணி லலிதாங்கி

தமிழ்

நடிகர்கள்: சிவாஜி கணேசன் • பானுமதி • வீரப்பா
ராஜசுலோசனா • சாரங்கபாணி • S.D.சுப்புலக்ஷ்மி
K.A.தங்கவேலு • T.P.முத்துலக்ஷ்மி

டைரக்ஷன்
T.R.ரகுநாத்



RKF

RIGHTS CONTROLLED BY
ராதாகிருஷ்ணா பிலிம்ஸ் (பிரைவேட்) லிட்

BAKTHA

# காரியத்திலே கண்

**கும்பம்**

கதிரவன் மேற்கே மறைந்து கொண்டிருந்தான். பாலோடை கிராமம் முழுவதும் ஜன நடமாட்டமே அதிகமில்லை. தெருக்களிலெங்கும் ஒன்றிரண்டு பேர்களே குறுக்கும் நெடுக்கும் போய் வந்து கொண்டிருந்தார்கள். காரணம் அந்தக் கிராமத்தின் கோடியில் கிராம தேவதை இருளாயி கோவிலில் நடந்து வந்த பத்து நாள் திருவிழாவில் அன்றுதான் கடைசித் தினம். ஆகவே, அன்று மாலை பலவிதமான வேடிக்கைகளுக்கு ஏற்பாடு செய்திருந்தனர். அவைகளைப் பார்ப்பதற்கும் விசேஷமாகப் பொய்க்கால் குதிரை ஆட்டத்தைக் காணுவதற்கும் ஊரே அங்கு கூடியிருந்தது.

நூல் கொண்டு கட்டப்பட்ட தம் மூக்குக் கண்ணாடியை ஒதுக்கி விட்டு எதிர்ப்பக்கம் பார்த்தார் கடை முதலாளி தாமோதரம். கடையிலிருந்த ஹைதர் காலத்துக் கடியாரம் மணி ஆறு அடிக்கப் பத்து நிமிஷங்கள் இருக்கின்றன என்பதைத் தெரிவித்தது. 'அந்தப் பத்து நிமிஷங்களும் ஓடி விட்டால்?' இதை நினைத்தபோது முதலாளி தாமோதரத்தின் மனம் பூரித்தது. ஆம்! ஆறு மணி அடித்து விட்டால் அவருக்கு விடுதலை. அவரும் இருளாயி கோவிலில் ஆஜராகி விடலாம். ஆனால் அந்தப் பத்து நிமிஷங்களும் பத்து யுகமாக அல்லவா அவருக்குத் தோன்றின! 'பத்து நிமிஷம் முன்னால்தான் புறப்பட்டால் என்ன?' என்று ஒரு சமயம் அவருக்குத் தோன்றியது என்னமோ உண்மைதான். ஆனால், அவரது மனச்சாட்சி 'ஆறு மணி வரை வேலை செய்ய நீ சம்பளம் வாங்குகிறாய்' என்று அடித்துச் சொல்லியது.

தாமோதரம், சோப்பு முதல் உப்பு உள்பட பல சரக்குகளை விற்கும் அந்தக் கடையின் முதலாளியாக மட்டும் இருந்தால்கடையை நினைத்தபோது மூடிவிடலாம். ஆனால் அவர் பாலோடை கிராம பிராஞ்ச் போஸ்ட்மாஸ்டர் ஆயிற்றே. சர்க்காரிடம் வாங்கும் சம்பளத்துக்குப் பூரணமாக வேலைசெய்ய வேண்டும் என்ற சத்திய உள்ளம் படைத்தவர் அவர்.



ஒரு பக்கம் பலசரக்குக் கடை. மற்றொரு பக்கம் போஸ்டாபீஸ். இரண்டுக்கும் நடுவே ஒரு ஆசனத்தில் அவர் உட்கார்ந்திருந்தார். அவரது உதவி ஆள் 'ரன்னர்' வேலாயுதமும், மாலை ஐந்து மணிக்கே தபால்களை எடுத்துக் கொண்டு, பத்து மைல் தூரத்திலுள்ள தலைமை ஆபீசுக்கு ஓடி விட்டான்.

கடிகாரத்தில் மணி ஆறு அடித்து ஓய்ந்தது. கையில் கொத்துச் சாவியை எடுத்துக் கொண்டு திரும்பிய போது, 'என்ன, கடையைப் பூட்டப் போறீங்களா?' என்று கம்பீரமாகக் கேட்டபடி கடையில் நுழைந்த ஆசாமியைப் பார்த்ததும் பயத்தினால் அவர் முகம் வெளிறி விட்டது. வந்த ஆசாமி தாமோதரத்தை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தார். 'கொத்துச் சாவியைக்கொடு இப்படி' என்று அதிகாரத்துடன் கையை நீட்டினான்வந்தவன்.

தாமோதரத்தின் பார்வை வாசல் பக்கம் சென்றது. தெரு வழியே தப்பித் தவறி யாராவது போனால் கூச்சல் போட்டு உதவிக்கு அழைக்கலாம் என்பது அவர்நோக்கம். இல்லாடி கோவிந்தசாமிக்கு அவருடைய நோக்கத்தைப் புரிந்து கொள்ள அதிக நேரம் ஆகவில்லை. 'ஏய் கிழவா! இதோ பார்' என்று கூறித் தன்னுடைய கையிலிருந்த இரும்புப் பூண் போட்ட குண்டாந்தடியை ஆட்டினான். அவன் தொடர்ந்து பேசினான்: 'கிராமத்திலே ஒரு ஈ காக்கைகூடக் கிடையாது. நீ கூச்சல் போட்டே, ஒரே போடு' என்று எச்சரித்து விட்டுக் கிழவன் தாமோதரனை நெருங்கினான்.

இல்லாடி சொன்னால் சொன்னபடி செய்வான் என்பது தாமோதரத்துக்குத் தெரியும். பதில் பேசாமல் கொத்துச் சாவியை அவனிடம் கொடுத்து விட்டுப் பிரமை பிடித்தவர் போல் நின்றார். அவன் கல்லாப் பெட்டியைத் திறந்து அதிலிருந்த சில்லறையை மடியில் கட்டிக் கொண்டான். 'பூ இவ்வளவு தானா?' என்ற வெறுப்போடு சுற்றிலும் கண்ணோட்டம் விட்டான். தபாலாபீஸ் சம்பந்தப்பட்ட பெட்டி அவன் பார்வைக்குத் தப்பவில்லை. அதை நோக்கி நடந்தான் அவன். இப்பொழுது தாமோதரம் குறுக்கே வந்தார். 'அது சர்க்கார் பணம். அது போனால் என்னுடைய மானம் மரியாதை......' என்று கெஞ்சினார்.

அலட்சியமாகப் பேசினான் அவன். 'அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. எனக்கு எல்லாப் பணமும் ஒன்றுதான்.' தாமோதரத்தை ஒரு பக்கமாகத் தள்ளிவிட்டுத் தன் காரியத்தில் கண்ணானான் இல்லாடி.

அந்தப் பெட்டியைத் திறந்ததும் அவன் முகம் மலர்ந்தது. அதைக் காலி செய்து எடுத்துக் கொண்டு வெற்றிப் புன்னகையோடு கடைவாசலை நோக்கி நடந்தான்.

வாசல் வரை சென்ற இல்லாடி, சட்டென்று ஏதோ நினைத்துக் கொண்டவன் போல் திரும்பி வந்தான். 'இந்தாய்யா ஒசத்த சோப் ஒண்ணு இருந்தால், கொடு' என்று அதட்டிக் கேட்டான் அவன்.

"சோப்பா?" என்று கிழவர் மிகுந்த தடுமாற்றத்துடன் கேட்டார்.

"ஆமாம். சோப்பு யாருக்குத் தெரியுமா?"

"அது எனக்கு எப்படித் தெரியும்?" என்று பயந்து கொண்டே சொன்னார்.

"ஏன் ஐயா இப்படி பயந்து சாகிறே! நான் உன்னை என்ன செய்துவிடப் போகிறேன்?"

"ஏன்? இப்பொழுது செய்திருக்கிறது போதாதா! என் மானம் மரியாதை எல்லாத்தையும் எடுத்துத்தான் மடியில் கட்டிக் கொண்டு விட்டாயே!"

"என்ன ஐயா! மானம் மரியாதை என்று உளறிக்கிட்டே இருக்கறே. நான் சோப்பு கேட்டதை மறந்துட்டியா?"

"மறந்து விடுவேனா? சோப்பு யாருக்கென்று இன்னும் சொல்லவில்லையே!"

"என் அத்தை மகளுக்குத்தான். வருஷம் பிறந்திடுச்சில்லே. எனக்குச் சீக்கிரமே கல்யாணம் நடக்கப் போவுது!" என்று தன்னுடைய குரலில் பெருமை பளிச்சிடப் பேசினான் அவன்.

தாமோதரத்தின் மூளை வேலை செய்யத் தொடங்கியது. அவர் காரியத்திலே கண்ணானார். "சோப்பு மட்டும் போதுமா? நல்ல ஒசத்தியான வாசனை செண்ட்" என்று அவர் வார்த்தையை முடிக்கக்கூட இல்லை; அதற்குள் "செண்டுன்னா அதுக்கு உயிராச்சே. எங்கே கொண்டா பார்க்கலாம்" என்று பரபரப்பாகக் கேட்டான் இல்லாடி.

தாமோதரம் மௌனமாகக் கடை கல்லாவின் பக்கத்தில் ஒரு சிறு ஸ்டூலின் மீது இருந்த சிறு பாட்டிலைச் சுட்டிக்காட்டினார். இல்லாடி பாய்ந்து அதைக் கையில் எடுத்துக் கொண்டான். "எங்கே பார்ப்போம்" என்று சொல்லியபடி பாட்டிலைத் திறந்து மூக்கில் வைத்துப் பலமாக ஒரு இழுப்பு இழுத்தான்.

அவ்வளவுதான். அடுத்த விநாடி இல்லாடி திக்குமுக்காடினான். தும்மல்! தும்மல்! தும்மல்! —ஓயாமல் தும்ம ஆரம்பித்து விட்டான்; தலையைச் சுற்ற ஆரம்பித்து விட்டது. கண்களிலிருந்து நீர் கரகரவெனக் கொட்டியது.

அவன் கையிலிருந்த தடி கீழே நழுவி விழுந்தது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்ட தாமோதரம் சட்டென்று குண்டாந்தடியையும் எடுத்துக் கொண்டு தெருவுக்கு ஓடினார். பலமாகக் கூச்சல் போட்டு நாலைந்து பேர்களைச் சேர்த்து விட்டார். இல்லாடி கோவிந்தனைப் பிடித்துக் கைகளைப் பின்னால் கட்டி மற்றவர்கள் இழுத்துச் சென்றபோது, தாமோதரம் பாட்டிலில் மிஞ்சியிருந்த அந்த மயக்கம் தரும் மூக்குப் பொடியைத் துளி போலக் கையில் எடுத்து ஒரு இழுப்பு இழுத்து விட்டு, 'ஏ பொடியே, என் மானம் காத்த பொடியே' என்று மனதார வாழ்த்தினார்!

# வட்ட மேஜை

## பாதிக்கும் திட்டம்

சமீபத்தில் சர்க்காரால் கொண்டு வரப்பட்ட கல்வித் திட்டத்தில் ஒரு ஆசிரியருக்குச் சராசரி மாணவர் ஆஜர் முப்பத்தைந்து இருக்க வேண்டுமென நிர்ணயித்துள்ளார்கள். இத்திட்டம் பழைய ஆசிரியர்களைத் தற்காலத்தில் பாதிக்காது என்றும், பள்ளிகளில் புதிதாகச் சேரும் ஆசிரியர்களைத்தான் இது பாதிக்கும் என்றும் தெரிய வருகிறது.

இத்திட்டம் எவ்வளவு தூரம் வெற்றி அளிக்கும் என மற்றவர்களால் சொல்ல இயலாது. அப்பணி புரியும் ஆசிரியர் சமூகத்தால் தான் துணிந்து உரைத்தல் கூடும். இத்திட்டத்தைச் சர்க்கார் கொண்டு வந்திருப்பது "குழந்தையையும் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டும்" செயலுக்கு ஒப்பாக உள்ளது. சுமார் ஐந்து ஆண்டுகளுக்குள் எனது மாவட்டத்தில் ஏராளமான ஆசிரியர் பள்ளிகளுக்கு அனுமதி அளித்துள்ளது. அவற்றிலிருந்து வருடா வருடம் வெளியேறும் ஆசிரியர்கள் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. இந்நிலையில் புதிய பயிற்சிக் கூடங்களுக்கு அனுமதி கொடுத்து, விபரீதமான இந்தத் திட்டத்தையும் கொண்டு வந்துள்ளனர்.

இத்திட்டம் கொண்டு வந்ததின் நோக்கம் நம் நாட்டில் கல்வி அறிவு பெற்றவர்களின் தொகையை அதிகரிக்கச் செய்யும் நோக்கமாக இருக்கலாம். யாவரும் வரவேற்க வேண்டியதுதான். ஆனால் இந் நோக்கத்துக்கு ஆசிரியர்கள் பலியாக வேண்டிய ஓர் நிலை ஏற்பட்டு விட்டது. எங்கு சென்று வேலை கேட்டாலும் இக்காரணம் காட்டி, 'இல்லை' என்ற பதிலையே அளிக்கின்றனர். வேலையில்லாத் திண்டாட்டம் தாண்டவம் ஆடிய காலத்தில் கூட ஆசிரியர் வேலைக்கு அநேக இடங்கள் ஆசிரியரின்றிக் காலியாக இருந்தன. 'இப்பொழுதோ இடம் இல்லை! இல்லை' என்ற பேச்சு எங்கும் காதைத் துளைக்கிறது.

கிராமங்களில் நடைபெறும் பள்ளிகளைத்தான் இந்தத் திட்டம் பெரிதும் பாதித்து விட்டது. படிக்கும் குழந்தைகளின் எண்ணிக்கையோ குறைவு. இதை நிவர்த்திக்க எவ்வளவு முயற்சி எடுத்துக் கொண்டாலும் வெற்றி காண இயலவில்லை. வழக்கத்திலிருந்து வருவதையே (ஆசிரியருக்கு இருபது பேர்கள்) நேர்மையான முறையில் காட்ட முடியாத நிலையில், கைவிட்டு எண்ணத் தக்க பள்ளிகள் உள்ளன. மாணவர்கள் எண்ணிக்கை அதிகரிப்பு, வேலையில் உள்ள ஆசிரியர்களைக் குறைக்கும் நிலையில் ஆக்கிவிட்டது.

வேலையில் இருந்தோர் வேலை இழந்து தவிக்கவும், இடம் இன்றி இருப்போர் நிலை மாறவும் சர்க்கார் நகரங்களில் நடைபெறும் பள்ளிகளை வைத்துக் கொண்டு தீர்மானிக்காமல் கிராமப் பள்ளிகளைப் பற்றி நன்கு ஆராய்ந்து அதன் பின் இந்தத் திட்டத்தைப் பரிசீலனை செய்து அமுலாக்க வேண்டும்.

கம்பம் — டி. கே. குஞ்சம்மாள்.
3-9-57 — ஆசிரியை

## ஏன் இந்த ஒதுக்குமுறை?

இராமநாதபுரம் மாவட்டத்தில் முதுகுளத்தூர் வட்டம் எத்துறையிலும் பின்தங்கி நிற்கக் காண்கிறோம். இதற்கு மக்கள் சர்க்காரைக் குறைப்படுவதைத் தவிர வேறில்லை! முதுகுளத்தூர் பகுதியில் சாலை வசதி, மின்சார வசதி, தொழில்துறை வசதி, கல்வி வசதி மற்றும் மக்களுக்கு உசிதமான வசதிகள் அத்தனையும் மிக மிகக் குறைவு.

பாரத அரசியலார் எத்தனையோ குழுக்களையும் ஐந்தாண்டுத் திட்டங்களையும் அமுலுக்குக் கொண்டு வந்து, நாட்டுக்குத் தேவையான அணைக்கட்டுக்கள், தொழிற்கூடங்கள், கலைக்கூடங்கள், பயிற்சி நிலையங்கள் முதலியவற்றை ஏற்படுத்தி விருகின்றனர். ஆனால் இப்பகுதியில் அவை ஏதாவது உண்டா? இல்லை. பழம் பெருமை பெற்ற கமுதி, அபிராமம், கடலாடி, சாயல்குடி, பெருநாழி, சிக்கல், காக்கூர், மண்டல மாணிக்கம், ஏர்வாடி போன்ற ஊர்கள் இவ்வட்டத்தில் சிதைவு அடைந்து நிற்கின்றன. "வானம் பொழியுது. பூமி விளையுது. மன்னவன் காணிக்கை ஏதுக்கடா?" என்று முதல் முழக்கம் செய்தானே, வீரபாண்டியக் கட்டபொம்மன், அதனை நாடறியப் பிரதிபலிக்கச் செய்தவர்கள் இப்பகுதி மறக்குடி மக்கள். இன்று பல சாராரும் வாழ நல்வசதியின்றிப் பொன்விளையும் பூமியில் நீர்வள வசதியின்றி அல்லல்படும் நிலையில் தவிக்கின்றனர்.

கடந்த 1955-ம் ஆண்டு நவம்பர் கடைசியில் ஏற்பட்ட அரக்கப்புயல் மற்றும் மாபெரும் வெள்ளத்தால் ஏங்கியவர்கள் இன்னும் தெளிவுறவில்லை. ஜனநாயக ஆட்சி நிலைக்கப் பொதுவாக மாவட்டத்தின் கிழக்குப் பகுதியில் (திருவாடானை, பரமக்குடி, இராமநாதபுரம், முதுகுளத்தூர்வட்டங்கள்) தொழிற்கூடங்கள் அமைத்துக் கணக்கற்ற வேலையற்றோர்க்கு வேலை தேடித் தரவேண்டும். பிரதான சாலை வசதிகளையும் சேர்ப்படுத்த வேண்டும். இதைக் காந்தி உருவாக்கிய காங்கிரஸ் கவனிக்குமா?

சென்னை — காக்கூர் சேவி அய்யர்.
4—9—57 — (தமிழாசிரியர்)

## விந்தையிலும் விந்தை!

கேரள ராஜ்யத்தில் உற்பத்தியாகி, ஒரு பிரயோசனமும் இல்லாமல் அரபிக்கடலில் வீணாக விழுந்து கொண்டிருக்கும் நதிகளின் தண்ணீரைத் திருப்பி, நமது மாகாணத்துக்குப் பயன்படும்படி செய்வதற்காகக் கேரள சர்க்காருடன் சென்னை சர்க்கார் பேச்சு நடத்தப் போவதாகப் பத்திரிகைகளில் பார்த்தேன்.

இவற்றில், முக்கியமாக, பெரியாறு திட்டத்தை நிறைவேற்றுவதற்கான முயற்சி செய்தால் ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் வறண்ட பிரதேசங்களான ஸ்ரீவில்லிப்புத்தூர், சங்கரன்கோவில் தாலுகாக்கள் மிகவும் பயனடையலாம். நமது மத்திய சர்க்கார் முன்னாள் உணவு மந்திரி ஸ்ரீ

கே. எம். முன்ஷியினால் ஆரம்பிக்கப்பட்ட 'வன மகோத்சவம்' இப்பொழுதுதான் சிறிது பயன்தர ஆரம்பித்திருக்கிறது. உணவு உற்பத்திக்குப் பிரயோசனப்படா விட்டாலும், அநேகமாக, சாலைகளில் எல்லாம் நிழல் தரும் மரங்கள் அதிகரித்திருப்பதைக் காண்கிறோம்.

அதே சமயத்தில், அநேக இடங்களில், காடுகளிலும், மலையடிவாரங்களிலும் உள்ள மரங்களை வெட்டுவதும், அழிப்பதும் அதிகரித்திருக்கின்றன. ஸ்ரீவில்லிபுத்தூர் தாலூக்கா மேற்கு மலைத் தொடர்ச்சியிலும், மலை அடிவாரத்திலும், அநேக மரங்களை எரித்துக் கரிக்காகக் கொண்டு செல்கின்றனர். இதனால் ஒவ்வொரு வருஷமும், பெய்யும் சொற்ப மழையும் குறைந்து கொண்டு வருகிறது.

மொழி வாரி ராஜ்யப் பிரிவினைக்குப் பின், சென்னை மாகாணத்திலிருந்து காடுகள் அடர்த்தியாக உள்ள சில பிரதேசங்கள் கேரள ராஜ்யத்துடன் சேர்ந்து விட்டது. அதனால் காடுகளை விஸ்தரிப்பதற்கான முயற்சிகள் செய்யப்படும் என்று மந்திரி திருபக்தவத்சலம் முன்பு ஒரு தடவை கூறியது நினைவிருக்கலாம். ஆனால், எங்கள் தாலூக்காவில் காடுகள் அழிக்கப்படுவதுதான் அதிகமாகி வருகிறது. இது மிகவும் விந்தையா யிருக்கிறது.

ஸ்ரீவில்லிபுத்தூர்
26 - 8 - 57 — ராகவன்

## இதுவா நீதி?

செப்டம்பர் பதினைந்தாம் தேதி இதழ் கல்கியின் தலையங்கம் கண்டு அளவில்லாத மகிழ்ச்சியடைகிறேன்: சுதந்திரம் கிடைத்து விட்டதால் ஆனந்த பரவசத்திலாழ்ந்து மகிழ வேண்டிய மக்கள் இன்று ' ஒரு சர்வாதிகார சாம்ராஜ்யத்தின் கீழ் வாழ்வதுபோல் அவதிப்படுகிறோமே ' என்று அல்லல்படுகின்றனர், அநியாய வரியினால். கொடுங்கோல் மன்னர்கள் ஆண்ட காலத்தில் வரியால் வதைக்கப்பட்ட மக்களின் நிலைமைக்கும் இன்று சுதந்திரம் கிடைத்து விட்ட நம் நாட்டு மக்களுக்கும் மிகுந்த ஒற்றுமை இருப்பதாகவே தோன்றுகிறது.

இப்பொழுதுள்ள வரிப் பிரகாரம் மக்கள் அடையப் போகும் இன்னல்களைப் பார்ப்போம். ஒருவர் முதன் முதலில் வருமான வரியைச் செலுத்திய பின், உள்ள பணத்தைக் கொண்டு நகைகள் வாங்குகிறார் என்று வைத்துக் கொள்வோம். அவர் நகைக்காகச் செலவு செய்வதற்குச் செலவு வரி விதித்து விடுவார்கள். அதைச் செலுத்திய பிறகோ அவர் வைத்திருக்கும் நகைக்கு வேறு வரி! இது மலரை நோகச் செய்யாமல் வண்டு தேனெடுக்கும் முறையல்ல. உயிருள்ள தேனீக்கள் நிறைந்த தேன் கூட்டைக் கசக்கிப் பிழிந்து தேனெடுக்கும் முறையாகும்.

கோழிக்கோடு
13—9—57 — இ. கே. ராஜலக்ஷ்மி

## பாராட்டுகிறோம்

“ சீமை கண்ட மலேயா ” என்ற தலைப்பில் டி. கே. சண்முகம் அவர்களும், புத்தனேரி சுப்பிரமணியமும் தங்களுடைய பிரயாண அனுபவங்களை விரிவாக, விளக்கமாக, எழுதுவது மிகச் சீரிய முறையில், அமைந்திருக்கிறது; கப்பலிலேயே ஏறிப் பழக்கமில்லாதவர்களுக்குக் கூட அவர்களுடைய கட்டுரை, கப்பல் பிரயாணத்தைப் பற்றி அறிய நல்லதொரு வாய்ப்பினைத் தருகிறது. சின்னஞ்சிறு சம்பவங்களையும் விடாமல், வாசகர்களுக்கு ஒவ்வொரு விஷயமும் நன்கு விளங்க வேண்டும் என்ற நோக்கத்தோடு, எழுதுவது பாராட்டுதற்குரியது.

கும்பகோணம்
12—9—57 — என். குஞ்சிதபாதம் பி.ஏ.

## நெஞ்சைத் தொடும் கதை

“ பாவை விளக்கு ” தொடர்கதையைப் படிக்கும் வாசகர்களில் நானும் ஒருவன். அகிலனின் இக் கதை ஒவ்வொரு வாரமும் புது மெருகுடன் வெளி வருகிறது. இவ் வாரம் “ விருந்தில் விஷம் ” “ செங்கமலம் ” என்ற இரு அத்தியாயங்களும் நெஞ்சைத் தொடுவதாயுள்ளது. ஒவ்வொரு பாராவிலும் ஒவ்வொரு பொன்மொழி உண்டு. “எதை எதையோ இந்த உலகில் பாவம் என்று சொல்லுகிறார்கள். ஆனால் ஏழையாக இருப்பதைப் போலப் பாவம் வேறெதுவுமே இருக்காது.” இந்த ஒரு பொன்மொழி ஏழைமை வாழ்க்கையை எவ்வளவு அற்புதமாகச் சித்திரிக்கிறது, பார்த்தீர்களா?

பம்பாய்
13—9—57 — பி. ஜே. சங்கரன்

## குடிதண்ணீரில் சாக்கடை

பரமக்குடி நகரம் சுமார் முப்பத்தி ஐயாயிரம் மக்களைக் கொண்ட மேஜர் பஞ்சாயத்தாகும். இப் பஞ்சாயத்துக்கு வருடம் ஒன்றுக்குச் சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய் வருமானம் வருகிறது. இங்கே வைகை ஆறு உண்டு! அத்தி பூத்ததுபோல் ஆற்றில் எப்போதாவது ஒருமுறை தண்ணீர் வரும்! இதனால் ஜனங்கள் ஆற்று மணலைத் தோண்டி எடுத்து, தகரத்தொட்டிகள், ஊற்று, ஓடுகால் முதலியன வைத்து அன்றாடம் குளிப்பதும் குடிதண்ணீர் எடுப்பதும் வழக்கம்.

சுமார் நாலு வருட காலமாக ஊரின் சாக்கடை முழுதும் வைகை ஆற்றின் கிழக்குப் பகுதியில் வந்து விழுகிறது. இதனால், கொடிய பல தொத்து நோய்கள் பரவுகின்றன. ஆறு முழுதும் ஒரே சாக்கடை நாற்றமும் எடுத்து, சுத்தமான நல்ல தண்ணீர் ஊற்றுடன் சாக்கடை ஊற்றும் கலந்து கெட்டு விடுவதால், ஜனங்கள் குளிப்பதற்கும் குடிதண்ணீர் எடுப்பதற்கும் முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறது.

பல பொது ஸ்தாபனங்களிலிருந்து சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் இது சம்பந்தமாக நேரிலும், கடிதம் மூலமாகவும் தெரிவித்தும் கவனிக்கப்படாமல் இருக்கிறது.

பஞ்சாயத்திலிருந்து பதினைந்து வருடங்களாகத் தண்ணீர் “குழாய் வரி” வசூலிக்கப்பட்டு வருகிறது. இந்த வகையில் சுமார் ஒரு லட்சம் ரூபாய் தனியாக இருந்து கொண்டிருக்கிறது. ஆனால், தாய்மார்கள் இன்றும் ஒரு மைல் தூரம் நடந்து வந்து சுடு மணலில்

தவித்துக் கொண்டே தண்ணீர் எடுத்துச் செல்லும் நிலைமைதான் நீடிக்கிறது.

முதலாவது ஐந்தாண்டு ஸ்தல அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் சுமார் நாற்பதாயிரம் ரூபாய் செலவில் இரண்டு ஆற்றுத் துறையில் "ஊற்றுக் குடி தண்ணீர்க் குழாய்" திறக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் ஒரு சமயத்தில் பதினைந்து பேர்களே தண்ணீர் எடுக்கும் படியாகக் குழாய் அமைக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து எல்லா மக்களுக்கும் தண்ணீர் வசதி பெற முடியாமல் இருக்கிறது.

ஆகையால், எல்லாப் பகுதி மக்களுக்கும் தெருக்கள்தோறும் குடி தண்ணீர்க் குழாய் வசதி கிடைக்க வேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பரமக்குடிக்கு இரண்டு லட்ச ரூபாய் குடி தண்ணீர்த் திட்டத்துக்குச் சென்னை சர்க்காரால் பணம் ஒதுக்கியுள்ளதைப் பெற்று, உடனடியாகக் குடி தண்ணீர்த் திட்டத்தையும் நாற்பதினாயிரம் ரூபாய் சாங்ஷன் செய்யப்பட்டுள்ள சாக்கடைத் திட்டத்தையும் நிறைவேற்ற வேண்டுமாய்ச் சர்க்காரையும் பஞ்சாயத்துச் சபையினரையும் வேண்டுகிறேன்.

பரமக்குடி
11-8-'57

தாஸ். கு. ராகவன்

## அரசியலார் கவனிப்பார்களா?

எங்கு சென்றாலும் எந்த அலுவலகத்திலும் சம்பளம் கட்டவில்லை, வேலை நிறுத்தம் என்ற பேச்சாகவே இருக்கின்றன. சாதாரண ஓர் தாலூக்கா அலுவலகக் குமாஸ்தாவுக்கும் ரூபாய் எழுபத்தைந்துக்குக் குறையாமல் அரசியலார் ஊதியம் அளிக்கின்றனர். மத்திய அரசாங்க அலுவலகங்களில் தபால்காரரும், ரயில்வே போர்ட்டரும் கூட மேற்கண்ட குமாஸ்தாவை விட அதிக ஊதியம் பெறுகின்றனர். இந்நிலையில் இவர்கள் 'சம்பளம் குறைவாக இருக்கிறது. சம்பள உயர்வளிக்க வேண்டும்' என்று வேலை நிறுத்தம் செய்கின்றனர். இக்கிளர்ச்சிக்காரர்களுக்கு ஊதிய உயர்வளிக்கவும், மற்றும் இதர உபரிச் செலவுகளை ஈடு செய்யவும் நிலவரி செலுத்துபவர்கள் தலையில் கை வைக்கின்றனர் அரசியலார்.

1950ம் வருஷத்தில் நில வரியும், வரியில் ரூபாய்க்கு 3 அணா 5 பை செஸ்ஸும் செலுத்தி வந்தனர். 1956ம் வருஷத்திலிருந்து ரூபாய்க்கு ஐந்தணா செஸ்ஸும், அதுவும் போதாதென்று இப்பொழுது ரூபாய்க்கு 2 அணா உபரி வரி (Surcharge)யும் வசூல் செய்கின்றனர். அரசாங்கச் சிப்பந்திகளின் ஊதிய உயர்வுக்குச் சிபார்சு செய்யும் அரசியலார் நாட்டின் அச்சாணி போல் விளங்கும் விவசாயிகளுக்கும் நிலச்சுவான்தார்களுக்கும் வசதி செய்து கொடுக்காமல் இருப்பதன் நோக்கம் என்னவோ? நிலச்சுவான்களுக்கும் விவசாயிகளுக்கும் இடையே உள்ள பூசல்களைத் தீர்த்து அவர்களுடைய இன்னல்களை ஆராய்ந்து வரி வசூல் செய்ய வேண்டியது மிக அவசியம்.

தங்கவாசம்
13—8—57

ஆர். திருமலைசாமி

# இந்தியாவில் முதல்...

28 ஆண்டுகளுக்குமுன் பிரபாத் கிபாஸ் விளக்கு திரிகள் உற்பத்தியுடன் ஆரம்பித்தனர் சடுதியில் ஆயில் பிரஷர் விளக்குகள், ஸ்டவ்கள் செய்யத் தொடங்கினர். இன்று பிரபாத் பொருள்கள் உயர்தரத்தின் சின்னங்கள் - உலகில் எந்தேசமும் பெருமை கொள்ளக்கூடிய தரம்.



# பிரபாத்

ஸ்டவ்கள் · ஊது விளக்குகள் · லாந்தர்கள் · மாண்டில்கள்

## ஆனாலும் சிறந்தது!

# பாவை விளக்கு

அத்தியாயம் 11

## சிரித்த செந்தாமரை

செங்கமலம் அந்த இடத்தை விட்டுச் சென்று கால்மணி நேரமான பிறகும் அவள் கொடுத்த பத்திரிகைகளை அவன் பிரிக்கவில்லை. அவளுடைய நீண்ட விழிகளும் அடர்த்தியான புருவங்களுமே அவன் மனக்கண் முன் நின்றன. இது அவனுக்கு ஆச்சரியமாகத் தோன்றியது. பல மாதங்கள் பழகிய தேவகியிடம் இல்லாத சக்தி, பல வருடங்கள் பழகிய கௌரியிடம் இல்லாத சக்தி, இந்தப் பெண்ணிடம் அப்படி என்ன இருக்கிறது? மின்னலைப் போல் தோன்றி மறைந்தவள் இப்படி ஒரு அழுத்தமான சலனத்தை ஏற்படுத்துவானேன்?— பெண்களைப் பற்றி நினைக்க வேண்டாமென்று உபதேசம் செய்திருந்த பெரியவரால் இப்போது அவனுக்குக் கை கொடுத்து உதவ முடியவில்லை.

தன்னைத்தானே இதற்காக நொந்து கொண்டு அவள் கொடுத்த பத்திரிகை ஒன்றைப் பிரித்தான். பத்திரிகையின் மேலட்டை என்ன பளபளப்பாக இருக்கிறது! அவளுடைய மென்கரத்தின் தளிர் விரல்கள் பட்ட பத்திரிகையல்லவா? முதல் கதையைப் படிக்கத் தொடங்கினான். உள்ளம் அதில் ஒட்டிக் கொள்ளப் பார்த்தது. அபூர்வமான ஒரு பெண்ணை அதில் அந்தக் கதாசிரியர் வர்ணித்திருந்தார்: ''வாளிப்பான மெல்லுடல், மின்னலிடை, வண்ணக் குழல்; ஒடிந்து விழும் பூங்கொடிபோல் அவள் துவளத் துவள நடந்து போனாள். கூர்மையான பார்வையால் கொல்லத் துடிக்கும் விழி அம்புகள் என்று சொல்கிறார்களே,

அகிலன்

அந்த வேல் விழிகள் அவளுக்கு. இன்னும்...''

தணிகாசலத்தின் படிப்பு இங்கே தடைபட்டது. இந்தக் கதாசிரியர் எப்போது செங்கமலத்தைப் பார்த்திருக்கிறார்? கற்பனையைத் தூண்டி விடக்கூடிய அழகி என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அவளைப் பற்றிய நினைவுகளை அப்படியே நம்மால் எழுத முடிந்தால்.... எழுதிப் பார்த்தால் என்ன? விசுவாமித்திரருடைய தவத்தைக் கலைப்பதற்கென்று, அவர் நடுக்காட்டுக்குப் போன பிறகும் ஒரு மேனகை வந்தாளாம். பட்டணக்கரைகளை விட்டு விட்டு இந்தப் பட்டிக்காட்டுக்கு வந்தால் இங்கேயும் ஒரு செங்கமலம்...

அவள் மீது என்ன குற்றம்? அவள் அழகே உருவாய்க் காட்சி யளிக்கிறாள். குற்றமில்லையா அது!

மாலையில் கண்ணுச்சாமியின் வீட்டுக்குப் போய்க் கணக்கெழுத உட்கார்ந்த போது கணக்கு தப்பும் தவறுமாக வந்தது. அடித்துத் திருத்திக் கணக்கு நோட்டைச் சின்னாபின்னப் படுத்தினான். பிறகு தாமரைக் குளத்தில் இறங்கிக் கைகால் கழுவி விட்டுக் கோயிலுக்குள் நுழைந்தான். வழக்கமாக அந்த நேரத்தில் அங்கு யாரும் வருவதில்லை; சுவாமி சந்நிதியில் கண்களை மூடிக்கொண்டு தியானத்தில் உட்கார்ந்தான்.



'காமனை எரித்த கருணை வள்ளலே! என்னுடைய மனத்தை ஒரு நிலைப் படுத்தி இந்த முட்டாள்தனத்திலிருந்து என்னைக் காப்பாற்று. வயிற்றுச் சோற்றுக்கு வழியில்லாமல் குடும்பம் அங்கே ஆலாய்ப் பறக்கிறது. இங்கே அடுத்த வீட்டுப் பெண் செங்கமலம் ஒரே கணப் பார்வையில் என்னைப் படாத பாடு படுத்துகிறாள். பத்திரிகை மட்டும் அவள் இரவல் கொடுத்தால் போதும். என் முகத்தில் அவள் விழிக்க வேண்டாம். விழிக்கவே வேண்டாம்.'

பிறகு எழுந்து ஒன்பது தோப்புக் கரணங்கள் போட்டு விட்டு, ஒன்பது முறை தரையில் விழுந்து விழுந்து கும்பிட்டான். தணிகாசலத்துக்குப் பக்தியிலும் நம்பிக்கை உண்டு; பகுத்தறிவிலும் நம்பிக்கை உண்டு. பக்திப் பெருக்கால் தம்மை இப்படி வணங்குவதாகக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் நினைத்துக் கொள்ள வேண்டும்; ஒன்பது 'பஸ்கி'யும் ஒன்பது 'தண்டா'லும் போட்டதாகத் தனக்குத் திருப்தி ஏற்பட வேண்டும்! உள்ளத்துக்குப் பக்தி; உடலுக்குப் பகுத்தறிவு.

தணிகாசலம் ஏரிக்கரைப் பக்கம் நடந்து, மறு நாள் குளிப்பதற்கு வேண்டிய புற்று மண் எடுப்பதற்காகப் புற்றுக்குள் கையை விட்டான். ஏரிக்கரையில் பாம்புப் புற்றுகளுக்குப் பஞ்சமில்லை; புதுப்பட்டியில் பாம்புகளுக்கும் பஞ்சமில்லை. எப்போதும்போல் சுயநினைவோடு இருந்தால் மிகவும் ஜாக்கிரதையுடன் நடந்து கொள்வான். சுய நினைவு சுந்தரிக்குப் பின்னால் சென்று விட்டதால், பாம்புப் புற்றின் மறு புறத்திலிருந்து 'புஸ்,...ஸ்!' என்று சத்தம் கேட்டவுடன்தான் அவனுக்கு விழிப்பு வந்தது. முழங்கை நீளத்துக்குப் படமெடுத்த கரு நாகம் ஒன்று சீற்றத்துடன் எட்டிப் பார்த்தது.

மின் வெட்டும் நேரம் கூட இல்லை. பிடித்தான் ஓட்டம்.

அவன் அப்போது பிடித்த ஓட்டத்தில் உலகத்தின் ஓட்டப் பந்தய நிபுணன்கூட அவனிடம் பிச்சையெடுத்திருக்க வேண்டும். ஒரு பர்லாங் தூரம் வந்தவுடன் ஒரு முறை திரும்பிப் பார்த்து விட்டு, திரும்பவும் ஓடினான். 'டங், டங், டங்' என்று இருதயம் வெளியே வெடித்துச் சிதறுவதுபோல் அடித்துக் கொண்டது. ஆனால் இத்தனைக்கும் கையில் அகப்பட்ட ஒரு பிடி மண்ணை அவன் விடவில்லை. சிறிய தாயாரிடம் வந்து விஷயத்தைச் சொன்னான். அவள் கொழுமோர் காய்ச்சிக் கொடுத்து விட்டு, மறு நாளே புற்று மண்ணுக்கும் சேர்த்துத் தாமரைக் குளத்தில் ஒரு முழுக்குப் போடச் சொன்னாள். இந்தப் புத்திமதியை மட்டிலும் அவன் கேட்பதாக இல்லை.

இரவில் கனவில் நல்ல பாம்புகளும் படமெடுத்துக் கொண்டு வந்தன; செங்கமலமும் பத்திரிகை எடுத்துக் கொண்டு வந்தாள். பாம்புகளைக் கண்டு படபடத்த நெஞ்சு பாவையைக் கண்டவுடன் பரவசத்தில் ஆழ்ந்தது. பூசை பலிக்கவில்லை; அவளுடைய நினைவை அகற்ற முடியவில்லை.

காலையில் தாமரைக் குளத்தை நோக்கிக் குளிக்கச் சென்றான். அந்த



நேரத்தில் யாரும் அங்கே குளிக்க வருவதில்லை. பெரும்பாலான கிராமவாசிகள் எதிர்க்கரைக்குப் போய் விடுவார்கள். கோவிலை ஒட்டியிருக்கும் படித்துறைகள் பெரிய மனிதர் குடும்பங்களுக்காக ஒதுக்கப்பட்டவை.

காவித் துண்டைக் கட்டிக் கொண்டு தண்ணீரில் இறங்கினான். இடுப்பளவுத் தண்ணீரில் தலை முழுகி, வெளியில் வந்து புற்று மண்ணைக் கரைத்துப் பூசிக் கொண்டான். திரும்பவும் முழுகும் போது, செங்கமலத்தைப் பற்றிய நினைவுகளுக்கு அறவே முழுக்குப் போட வேண்டும்போல் தோன்றியது. இரும்பாக இருந்த மனம் எப்படிப் பாகாய் உருகிப் போய்விட்டது!

ஒன்பதாவது முழுக்கை முடித்துத் தலையைத் தூக்கிக் கரையைப் பார்த்தவுடன் அவனுக்குப் பகீரென்றது. அப்



படியே நீரோடு நீராகக் கரைந்து போய் விடக்கூடாதா என்று அவன் பரிதவித்தான்.—கரையில் செங்கமலம் தங்கச் சிலைபோல நின்று கொண்டிருந்தாள்!

இடுப்பில் குடத்தை எடுத்து ஒயிலாக வைத்துக் கொண்டு, பழைய பட்டுப் புடவை ஒன்றைத் துவைப்பதற்காகத் தோளில் போட்டுக் கொண்டு அவள் அவனை வேடிக்கை பார்த்தாள்.

அவனுடைய புற்று மண் கோலத்தின் புனிதத் தன்மை தண்ணீரில் இன்னும் கரையாத நிலையில், அதைக் கண்டு பரிகசிப்பதுபோல், புன்முறுவல் செய்து கொண்டே அவள் ஒவ்வொரு படியாகக் கீழே இறங்கினாள். தணிகாசலம் பதறிப் போய் விட்டான். கடவுளே! இளம் பக்தனின் மீது இரக்கமில்லையா?! இப்படிக் காட்டிக் கொடுத்து விட்டாயே!

வெட்கம் பிடுங்கித் தின்னக் குபுக்கென்று தண்ணீருக்குள் மறைந்து உடம்பு மண்ணைச் சுத்தமாகக் கழுவிக் கொண்டான். தண்ணீரில் அவனைச் சுற்றிலும் ஒரே செம்மண் படலம்.

"குளத்தையே ஒரு கலக்குக் கலக்கி விட்டீர்களே! வேறு யாரும் குளிக்க வேண்டாமா?"

அவன் பதில் பேசவில்லை. 'ஏன், அடுத்த துறையில் போய்க் குளிப்பது தானே?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான்.

"இது என்ன புதுமாதிரி வாசனைத் தூள்? உங்கள் ஊரிலிருந்து கொண்டு வந்தீர்களா?" என்று கேட்டாள்.

'இது என்ன புதுமாதிரிப் பெண்? வெட்கமில்லாமல் பேசுகிறாள்?'—அவன் மனம் கேட்டது.

"வாய் திறந்து பேச மாட்டீர்களா?" என்றாள் செங்கமலம்.

விடமாட்டாள் என்று தோன்றி விட்டது. பத்திரிகை இரவலை முன்னிட்டாவது அவளுக்கு மதிப்பு கொடுக்க வேண்டும். இந்தப் பட்டிக்காட்டில் இப்படி ஒரு வம்புக்காரி எங்கிருந்து வந்து முளைத்தாள்?

"ஆமாம்! கண்ணபுரத்தில் வாங்கிய வாசனைத் தூள்" என்றான் சுருக்கமாக.

"உங்கள் சின்னம்மா என்னிடம் சொன்னார்கள். கொழுமோர் காய்ச்சிக் கொடுத்தார்களாமே! நேற்றுச் சாயங்காலம் நல்ல பாம்பு உங்களைத் துரத்தியதா? நீங்கள் அதைத் துரத்தினீர்களா!" கலகலவென்று தன் பல் வரிசை தெரியச் சிரித்து விட்டு, "காட்டில் உள்ள புற்றையெல்லாம் கலைத்துப் பாம்புகளை வீட்டுக்குள் விரட்டி விடுவீர்கள் போலிருக்கிறதே!" என்றாள்.

அவசரம் அவசரமாய்த் தலையைத் துவட்டிக் கொண்டு அந்த இடத்தை விட்டு நழுவப் பார்த்தான் தணிகாசலம்.

'நல்ல பாம்பு இப்போது காட்டுக்குள் இல்லை. குளத்தங்கரையில் குடத்தைச் சுமந்து கொண்டு நிற்கிறது. அந்தப் பாம்பு துரத்தக்கூட இல்லை. இதுவோ அடுத்த வீட்டிலிருந்து அரட்டையடித்துக் கொண்டே காலைச் சுற்றிக் கொள்ளும் போலிருக்கிறதே! இதனிடமிருந்து எப்படித் தப்புவது?'

மளமளவென்று தன் அலுவல்களில் முனைந்தாள் செங்கமலம். துணிகளை நனைத்துப் படிக்கட்டில் போட்டுவிட்டுத் தண்ணீரில் இறங்கினாள். நீருக்குள் அவள் தலை மறைந்தவுடன் குபீரென்று பல கருநாகங்கள் தெளிவாக மேலே மிதந்தன. செங்கமலத்தின் இந்தக் கூந்தல் அழகைக் கண்டு விட்ட தணிகாசலத்துக்கு மேலே நடக்க மனமில்லை.

அவள் தலை வெளியில் வந்தது. நெற்றியில் படிந்த கேசத்தை ஒதுக்கிக்கொண்டு

வாய் நீரைக் கொப்பளித்துக் காற்றில் விட்டான். பிறகு அவன் பக்கம் திரும்பி, அவன் நிற்பதைக் கண்டு, "இந்த ஊரில் படித்த பெண் கூட இருக்கிறாளா என்று கேட்டீர்களாமே? ஏன், பெண்கள் படிக்கக் கூடாதா?" என்றாள்.

தபால்காரத் தாத்தா தன்னைக் காட்டிக் கொடுத்து விட்டார் என்பதைத் தெரிந்து கொண்டான். அவனுடைய முகத்தில் அசடு வழிந்தது.

"தாராளமாய்ப் படிக்கலாம்; நான் கூடப் பெண் கல்வி பற்றிக் கல்லூரிக் கூட்டத்தில் பேசியிருக்கிறேன்" என்று உளறி வைத்தான்.

"உங்களுக்குப் பேசக் கூடத் தெரியுமா?"—அவள் சிரித்தாள். அவனுக்கு ஆண்கள் கூட்டத்தில் பிரமாதமாகப் பேசத் தெரியும். இப்போது பேசத் தெரியாமல் விழித்தான். மெல்லத் திரும்பி இரண்டடி மேலே எடுத்து வைத்தான்.

"எனக்கு ஒரு உதவி செய்கிறீர்களா?"

"என்ன?"

"அதோ, அந்தப் பெரிய தாமரைப் பூ வேண்டும். பறித்து வருகிறீர்களா?"

அவள் கரம் நீண்ட திசையில், முப்பதடி தூரத்தில் பெரிய செந்தாமரையொன்று மலர்ந்து சிரித்துக் கொண்டிருந்தது. விண்மீன் கூட்டத்தின் மத்தியில் சிரிக்கும் முழு நிலவுபோல், கூந்தலின் நீர்த் துளிகளிடையே, சிரிக்கும் செங்கமலத்தின் முகம் போல், கூரம்பு மொட்டுக்களிடையே அது தனி மகராகச் சிரித்தது. தாமரை இலைகள் அதைச் சுற்றிலும் கதிரொளியால் சூலுண்ட நீர் முத்துக்களைச் சுமந்து வர்ணஜாலம் காட்டின.

நீட்டிய கரத்தை அவள் மடக்கவில்லை. தணிகாசலம் நீண்ட பெருமூச்சு விட்டான். அந்த மலரையும் அவள் முக மலரையும் மாறி மாறிப் பார்த்துப் பெருமூச்சு விட்டான்.

"என்ன யோசிக்கிறீர்கள்?"

"ஒன்றுமில்லை....வந்து...."

"அந்த ஒரு பூ போதும்."

"நான் குளித்து விட்டேன். எனக்கு வேலை இருக்கிறது. இன்னொருநாள் பறித்துத் தருகிறேன்."

"ப்பூ? இவ்வளவுதானா ஆண்பிள்ளைச் சமர்த்து?"—முகத்தைத் திருப்பி அவள் தோளில் இடித்துக் கொண்டாள். "எனக்கு இன்றைக்கு வேண்டும்."

தணிகாசலத்துக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. முடியாது என்பது போல் அவன் தலையாட்டினான்.

மின் வெட்டும் நேரந்தான். சுறுமீன் குஞ்சுபோல் அவள் நீருக்குள் பாய்ந்தாள். குழையும் பளிங்காலான அவளுடைய தேகம், தாமரைக் கொடிகளினூடே அலட்சியமாய் நெளிந்து வளைந்து, சுழன்று முன்னேறியது. தாமரையின் அருகில் போய்த் தன் முகத் தாமரையைத் தூக்கினாள். மறு கணம் அந்தப் பெரிய மலரின் செவ்விதழ்கள் ஆடி அசைந்து நடுங்கின. தாமரை தண்ணீரில் மறைந்து அவள் கரத்தில் சிக்குண்டது. திரும்பவும் அதே சுறுமீன் பாய்ச்சல்!

"இந்தாருங்கள்; எனக்கு வேண்டாம். ஒன்று போதுமா? இல்லை, இன்னும் ஒன்பது உங்களுக்குப் பறித்துத்தரட்டுமா?"

"நான் கேட்கவில்லை" என்று ரோஷத்துடன் மறுத்தான் தணிகாசலம்.

"நான் கொடுக்கிறேன், வாங்கிக் கொள்ளுங்கள். பத்திரிகைகளையும்



நீங்களா கேட்டீர்கள்? நீங்கள் சரியான நெஞ்சழுத்தக்காரர்."

"எனக்குப் பூக்களைப் பறித்து வேடிக்கை பார்ப்பது பிடிக்காது. குளத்தில் இருந்தால் அவை எவ்வளவு அழகாயிருக்கும், தெரியுமா? செடியில் உள்ள பூவை..."

"ஓஹோ! கோயிலுக்குள் எதற்காக நந்தவனம் வைத்திருக்கிறார்களாம்? நாங்கள் தலையில் பூ வைத்துக் கொள்வது உங்களுக்குப் பிடிக்காது? சன்யாசிகள் கூடப் பூப்பறித்துச் சாமிக்கு அர்ச்சனை செய்கிறார்கள்."

பிடிவாதமாக அவள் அதை நீட்டியதால் தணிகாசலம் பெற்றுக் கொண்

டான். தன்னை அவள் மறைமுகமாகச் சன்யாசி என்று குத்திக் காட்டியது, அவனுக்கு ஆத்திரத்தைக் கொடுத்தது. சட்டென்று திரும்பிப் பூவைக் கையில் பிடித்துக் கொண்டே நடந்தான்.

பட்டிக்காட்டுப் பெண்பிள்ளையின் முன் அவமானப்பட்ட உணர்ச்சி அவனுக்குத் தாங்கவில்லை. என்னதான் பட்டணக் கரையில் படித்தாலும் பட்டிக்காடு பட்டிக்காடுதான்! நாகரிகம் தெரிந்த பெண்கள் இப்படி வலுவில் வந்து வம்புக்கு இழுப்பார்களா? அல்லது அவர்களுக்கு இப்படிப் பயமில்லாமல் தாமரைக் கொடிகளின் மத்தியில் நீந்தத்தான் தெரியுமா? கடவுள் கொள்ளை அழகைக் கொடுத்து விட்டார்; குறும்புத்தனத்தையும் வாய்த் துடுக்கையும் இவள் விட்டு விட்டால் நல்ல பெண்தான்.

தணிகாசலம் அவள் கேட்டபோது அந்த ஒரு பூவை மட்டுமல்ல, அந்தக் குளத்திலுள்ள அத்தனை பூக்களையுமே பறித்துக் கொண்டு வந்து அவள் காலடியில் போட்டிருப்பான். ஆனால் அவனுக்கு நீந்தத் தெரியாது!

நீந்தத் தெரியாதென்பதை அவளிடம் சொல்லிக் கொள்ளவும் அவன் சுயமரியாதை இடம் கொடுக்கவில்லை.

எனக்கு எத்தனையோ புத்தகங்களைப் படிக்கத் தெரியும். சைக்கிள்விடத் தெரியும். தலைகீழாக நிற்கத் தெரியும். நான் போடுகிற ஆசனங்களில் ஒன்றையாவது இவள் போடுவாளா? இருந்தாலும் என்னை மடக்கி விட்டாள். இனிமேல் இவள் முகத்தில் விழிப்பதே இல்லை. நன்றாக நீந்தக் கற்றுக் கொள்ளும் வரையில் விழிப்பதில்லை.

எத்தனையோ விஷயங்களைத் தபால் மூலமாகவும், புத்தகங்களின் மூலமாகவும் கற்றுத் தரும் ஆசிரியர்கள் இப்படி நீந்தக் கற்றுக் கொள்வதற்கு ஒரு வழி செய்யவில்லையே என்று குறைப்பட்டுக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்தான்.

அவள் கொடுத்த தாமரைப் பூ அவனைப் பார்த்துக் கேலி செய்தது.

## அத்தியாயம் 12

# குளத்தங்கரைப் படிக்கட்டில்....

'ராஜயோக ரகசியம்' என்ற நூலில் அவனுடைய நீந்தும் முயற்சிக்குச் சில முன்யோசனைகள் கிடைத்தன. நீரில் மிதக்கலாம், நெருப்பில் நடக்கலாம், உலகத்தில் மனிதன் செய்ய முடியாத வேலைகள் ஒன்றுமே இல்லை என்று விளக்கியிருந்தார் அதன் ஆசிரியர். தணிகாசலத்துக்கு இப்போதைக்கு நீரில் மிதந்தால் போதும். அப்படி மிதக்காதது நெருப்பில் நடப்பது போலிருந்தது. அடுத்த நாள் பொழுது விடியுமுன்பே குளத்துக்குள் இறங்கி, வாய்வழியாகவும் மூக்கு வழியாகவும் (அந்தப் புத்தகத்தில் சொல்லி யிருந்தபடி) காற்றை உள்ளுக்கு இழுத்தான். காற்றுக்குப் பதில் தண்ணீரே மூக்கில் நுழைந்தது!

மிதக்கும் முயற்சியை அத்துடன் நிறுத்திக் கொண்டு நீந்தும் முயற்சியில் இறங்கினான். செங்கமலம் குளத்துக்கு வருவதற்கு முன்பே, தன் திட்டப்படி, அவள் முகத்தில் விழிக்காமல் வீட்டுக்குத் திரும்பினான்.

நாலைந்து நாட்களாகத் தாமரைக் குளத்தில் அவர்கள் சந்திப்பு நடைபெறவில்லை. சில நாட்களில் எதிர்க்கரைப் படிக்கட்டுக்குப் போய்த் தன்னுடைய சுயபோதனைத் திட்டத்தை நிறைவேற்றிக்கொண்டு வந்தான். விரைவில் பலன் கிடைத்து விடும்போல் தோன்றியது. — விபரீதமான பலன்!

நீச்சுப் பழக்கம் ஓரளவு வந்தவுடன், கரை கடந்த உற்சாகத்தில் பாதிக் குளத்துக்குப் போய் விட்டான் தணிகாசலம். திரும்பும்போது தாமரைக் கொடிகள் காலில் நன்றாகப் பின்னிக் கொண்டன. என்ன செய்வதென்று தெரியவில்லை. கொடிகள் அவனை உள்ளே இழுத்தன.

ஒரு முழுக்கு, ஒரு வாய்த் தண்ணீர்! இரண்டு முழுக்கு, இரண்டு வாய்த் தண்ணீர்! மூன்று முழுக்கு, மூக்கெல்லாம் தண்ணீர்! தணிகாசலத்துக்கு மூச்சுத் திணறியது; கண்கள் இருண்டன; கைகால் சோர்ந்தன. கடைசி கடைசியாகத் தன்னை இந்தப் பரிதாப நிலைக்குக் கொண்டு வந்த படுபாவியை நினைத்துக் கொண்டு, காலை ஒரு வெட்டு வெட்டி வேகமாய் உந்தினான். அடுத்த நிமிஷம் கரையில் கிடந்தான்.

இதற்காக அவனுடைய பிடிவாதம் சிறிதும் தளர்ந்து விடவில்லை. அரை மணி நேரத்தில் ஐந்தாறு தாமரைப் பூக்களைப் பறித்துக் கொண்டுதான் அவன் வீட்டுக்குத் திரும்பினான்.

வெற்றி கிடைத்து விட்ட பெருமையில், நிமிர்ந்து உட்கார்ந்து, திண்ணையில் அவன் ஏதோ படித்துக் கொண்டிருந்தான். நாலைந்து புதுப் பத்திரிகைகள் அவனுக்கு முன்னால் 'தொப்'பென்று வந்து விழுந்தன. ஏறிட்டுப் பார்த்தான். என்னும் கொள்ளும் முகத்தில் வெடிக்க

அங்கு நின்று கொண்டிருந்தாள் செங்கமலம். அவனுக்குச் சிரிப்பு வந்தது.

விர்ரென்று வேகமாய்த் திரும்பிப் போய் விட்டாள் அவள். அதன் பிறகு அவனுக்குப் படிப்பு ஓடவில்லை.

எதிர்பாராத அதிசயம் ஒன்று அடுத்த வீட்டில் நிகழ்வதை அவன் உற்றுக் கேட்டான். அவனைப் பரவசத்தில் மேலே மேலே தூக்கிச் செல்வது போலிருந்தது, அந்த நிகழ்ச்சி. பாட்டொலி ஒன்று மெல்லக் கேட்டது. தாளங்கள் அதற்கு வரம்பு கட்டின. 'ஜல் ஜல்'லென்று குலுங்கும் சதங்கை ஓசை அங்கு யாரோ நடனமாடுவதை அவனுக்கு அறிவித்தது. தணிகாசலத்துக்கு இருப்புக் கொள்ளவில்லை; அடுத்த வீட்டுக்குப் போகவும் அங்கு நடப்பதைப் பார்க்கவும் கேட்கவும் துடியாய்த் துடித்தான்.

உள்ளே ஓடிப் போய்ச் சிறிய தாயாரிடம் விசாரித்தான். "என்ன சித்தி! அடுத்த வீட்டில் பாட்டுச் சத்தம் கேட்கிறதே?" என்றான்.

"கேட்காமல் என்ன செய்யும்? இனிமேல் தினமும் கேட்கும். சித்திரைத் திருவிழாவுக்கு ஒத்திகை நடக்கிறது. இந்த வருஷத்திலிருந்து அந்தக் குட்டி சதிராடப் போகிறாளாம்!"

"யார்?"

"செங்கமலந்தான்."

தணிகாசலத்தின் மனம் செங்கமலத்துடன் ஒன்றிச் சதிராடியது.

அடுத்த நாள் வேண்டுமென அவள் குளித்துக் கொண்டிருந்த நேரம் பார்த்து படிக்கட்டுகளில் நெருங்கினான் தணிகாசலம். அவனுடைய நிமிர்ந்த தலையும் கம்பீர நடையும் அவள் கவனிக்காமல் இருந்திருக்க முடியாது. இந்த ஆண் பிள்ளைச் சிங்கம் அந்தப் புள்ளிமான் குட்டியைப் பார்த்து அலட்சியமாய்ச் சிரித்துக்கொண்டு தண்ணீரில் கால் வைத்தது. மீசையிருந்தால் முறுக்கி விருப்பான்; இப்பொழுதுதான் அரும்பு கட்டிக் கொண்டிருந்தது.

அவள் அவனைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. இவனுடைய முதுகில் அறைவதாக நினைத்துக் கொண்டு தன் புடைவையை ஓங்கி ஓங்கித் துவைத்தாள். ஒன்று கல் உடைய வேண்டும்; அல்லது துணி கிழிய வேண்டும்.

"செங்கமலம்!"

அவள் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

"கோபமா, செங்கமலம்?"

'டப் டப்'பென்று அவள் முன்னைவிட வேகமாக வெளுத்து வாங்கினாள்.

நீர்க்கோழிபோல் குளத்துக்குள் முழுகி இரண்டே நிமிஷங்களில் கையில் ஒரு தாமரையுடன் திரும்பி வந்தான். அவன் அதை நீட்டியபோது அவள் வாங்கிக் கொள்ளவில்லை. பணிவோடு அவள் துவைத்த கல்லின்மேல் வைத்தான். துவைப்பது நின்றது.

"பெண்கள் குளிக்கும் படித்துறைக்கு எதற்காக வரவேண்டும்? வழக்கம்போல் எதிர்க் கரைக்குப் போவதுதானே?"

"உனக்குப் பிடிக்கவில்லை யென்றால் போய் விடுகிறேன்."

"உங்களுக்குத்தான் என்னைக் கண்டால் பிடிக்காது. நீங்கள் தர்மகர்த்தா வீட்டுப் பிள்ளை. பெரிய இடம். நான் தான் வந்து..." அவளுடைய ஆத்திரம் குரலில் ஒலித்தது.

"இல்லவே இல்லை."

"எதற்காக இந்தப் பொய்? உங்கள் சின்னம்மா ஏதாவது சொல்லியிருப்பார்கள்; இல்லாவிட்டால் சித்தப்பா சொல்லி யிருப்பார். அதனால்தான் எனக்குப் புதுப்பட்டிக்கே வரப் பிடிப்ப தில்லை. நான் உங்களுக்கு என்ன கெடுதல் செய்தேன்?"




தணிகாசலம் பரிதாபமாகத் தலையைச் சொறிந்து கொண்டு நின்றான். "யாரும் ஒன்றும் சொல்லவில்லை; யார் சொன்னாலும் கேட்க மாட்டேன். எனக்கே உன்னைப் பார்க்க வெட்கமாக இருந்தது."

"வெட்கமா?"

சுற்றி வளைத்துக்கொண்டு தான் பார்க்காமல் ஒளிந்து கொண்டிருந்த ரகசியத்தை வெளியிட்டான் தணிகாசலம். அவள் விழுந்து விழுந்து சிரித்தாள். சிரித்துவிட்டுப் பூவைக் கையில் எடுத்து அதைக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

"இந்தப் பூவை உனக்குக் கொடுப்பதற்காக என் உயிரையே கொடுக்க இருந்தேன். ஒரு தரம் மூன்று வாய்த் தண்ணீர் கூடக் குடித்து விட்டேன்."

''அடட, பாவமே! இப்படிச் செய்யலாமா?'' அவள் சிவந்த முகம் பயத்தால் வெளுத்து விட்டது.

''செத்தே போயிருப்பேன். அந்தச் சமயத்தில்கூட உன்னை நினைத்துக்கொண்டேன்'' என்றான்.

அவள் கண்களில் நீர் வந்தது. அவனை நெடுநேரம் கண் இமைக்காமல் பார்த்தாள். பிறகு அந்த மலரைத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டாள்.

தணிகாசலத்துக்கு உற்சாகம் பிறந்து விட்டது. கரையில் அவளை வேடிக்கை பார்க்க விட்டு விட்டு, அந்தக் குளத்தையே கலக்கித் திரும்பி வந்தான். திறந்த வாய் திறந்தபடி அவன் சாகஸங்களைப் பார்த்தபடியே நின்றாள் செங்கமலம். இருவரும் சேர்ந்து கலகலவென்று சிரித்தார்கள்.

''உன்னை எப்படி நினைத்துக் கொண்டேன் என்று நீ கேட்கவில்லையா?'' என்றான் அவன். ''நான் சாவதற்கு முன்னால் உன்னைத் தேடிப் பிடித்து, உன் கழுத்தை என் கையால் தண்ணீரில் அழுத்தி விட்டு, நானும் உன்னுடன் சாகலாமென்று பார்த்தேன்.''

''ஏன், இப்போதுதான் அழுத்திக் கொல்லுங்களேன்!'' என்று இறங்கி வந்தாள் செங்கமலம். ''நான் தயார்தான். உங்கள் கையால் சாக எனக்குக் கொடுத்து வைக்க வேண்டாமா?''

அவனுடைய கண்களின் ஒளி அபூர்வமாக மின்னியது. ஒரு பூவைக் கேட்டதற்காக, உயிரையே ஒருவன் விடுவதற்கு முன் வந்தால் அதைவிடத் தனக்கு என்ன பெருமை வேண்டும்?

''என்னுத எண்ணமெல்லாம் எண்ணி விட்டேன். என்னைப் பற்றித் தப்பாக நினைத்துக் கொண்டீர்களோ என்று தவித்தேன். நீங்கள்தான் கோயிலில் பார்த்தால்கூட முகத்தைத் திருப்பிக் கொண்டீர்களே!''

''இதில் தப்பாக நினைப்பதற்கு என்ன இருக்கிறது?''

''எவ்வளவோ இருக்கிறது!'' என்று பெருமூச்சு விட்டாள் செங்கமலம். ''நீங்களே தெரிந்து கொள்வீர்கள். உங்கள் சித்திக்குத் தெரியும், சித்தப்பாவுக்குத் தெரியும், இந்த ஊருக்கே அது நன்றாகத் தெரியும்!''

''நீதான் சொல்லேன்?'' என்று கேட்டுவிட்டு, புற்று மண்ணைத் தண்ணீரில் குழைத்து உடம்பில் பூசிக் கொண்டான். மாவைப்போல் குழைவாக, சந்தனம்போல் மிருதுவாக இருந்தது அந்தப் புற்றுமண்.

'''பைத்தியக்காரப் பிள்ளை' என்று உங்கள் சித்தி சொல்வது சரிதான்!'' என்று சிரித்தாள் செங்கமலம். பிறகு, ''எனக்குக் கொஞ்சம் மண் தருகிறீர்களா? நானும் பூசிக்கொள்ளுகிறேன்!''

''புடவையெல்லாம் கெட்டுப் போகும்; உனக்கு இது வேண்டாம். இந்த முரட்டு உடம்புக்கு இது சரி. உன் தேகம் பட்டுப்போல் இருக்கிறது!''

அவளுடைய தேகம் சிலிர்த்தது. பெருமை தாங்கவில்லை அவளுக்கு.

''முகத்துக்கு மட்டும் போட்டுக் கொள்கிறேன்; கொடுங்கள். இந்தப் பத்து நாட்களாய் நான் பட்ட கஷ்டத்துக்கு நீங்கள் கொடுத்த பூவும், இந்த மண்ணுந்தான் மருந்து!''

செங்கமலம் பிடிவாதமாக அவனிடம் இருந்த மண்ணை எடுத்து முகத்தில் பூசிக் கொண்டாள். அப்போது அவளுடைய விரல்களைக் கவனித்தான். அந்தமாதிரி விரல்களை அதற்கு முன்பு அவன் கண்டதே இல்லை. முகத்தை அவள் கழுவிக் கொண்டவுடன் அது பளிச்சென்று புதுமை காட்டியது. கன்னங்கள் இரண்டிலும் தாமரையின் சிவப்பு படர்ந்தது.

''நேற்று நீதானே நடனமாடினாய்?''

செங்கமலம் தலையசைத்தாள்.

''நான் அதைப் பார்க்க அங்கு வரலாமென்று பார்த்தேன்.''

''வேண்டாம், வந்து விடாதீர்கள்! என் அம்மா யாரையும் அப்போது உள்ளே விடமாட்டாள். பிறகு இங்கே பார்த்துப் பேசுவதுகூட முடியாது.''

தாயாரின் பேச்சை எடுத்தவுடன் அவசரம் அவசரமாகத் துணிகளைப் பிழிந்து கொண்டு புறப்பட்டாள் செங்கமலம். தணிகாசலம் எவ்வளவு தடுத்தும் கேட்கவில்லை. ''நாழிகையானால் இங்கேயே தேடிக்கொண்டு வந்து விடுவாள்; நாளைக்குப் பேசிக் கொள்வோம்.''

''உன்னைப் பற்றி ஏதோ சொல்ல வேண்டும் என்றாயே, அதை மட்டும் சொல்லி விட்டுப் போ.''

''நாலு பேர்கள் நாலைச் சொல்வார்கள். எங்களுக்கு முன்னால் வந்து சிரித்துப் பேசுகிறவர்கள், எங்களுக்குப் பின்னால் அவதூறு சொல்லத் தயங்கமாட்டார்கள். அதற்குக் காரணமும் இருக்கிறது. நீங்கள் என்னைத் தப்பாக நினைக்காமல் இருந்தால் போதும்.''

''முழுவதும் சொல்லிவிட்டுப் போ!''

''நாளைக்கு இதே நேரம், இதே இடம் இதே பேச்சு...சரிதானா?''

செங்கமலம் வேகமாக நடந்து சென்றாள். குடத்தில் நீர் நிறைந்திருந்தது; தோளில் துணிகளைப் போட்டிருந்தாள்; கையில் அவன் கொடுத்த தாமரை மலரை எடுத்துக்கொள்ள மறக்கவில்லை.

அவளுடைய இருதயம்போல் அவளது வலது கரத்தில் அகப்பட்ட தாமரை மலர் ஊசலாடியது. (தொடரும்)

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 12

## திருபுவனி எங்கே?

குடந்தை மக்கள் பழையாறையை நோக்கிப் பெரும் படையைப் போல் திரண்டு வருவதற்குக் காரணம் இருந்தது. மத விஷயத்திலே ஒருவருக்கொருவர் போட்டியும் பூசலும் வளர்ந்தன. நகரத்திலே பஞ்சம் தலைவிரித்தாடியது. பகைவரின் ஆதிக்கத்திலிருந்த புத்த விஹாரத்தையும் ஆராமத்தையும் குடந்தைக் கூத்தனாரின் கோயிலோடு சேர்த்தாகி விட்டது. எல்லா மதவாதிகளுக்கும் இது ஒரு புரட்சிகரமான மாறுதலாகத்தான் தோன்றியது. குடந்தையிலிருந்த சிவனடியார் திருக்கூட்டத்தினரெல்லாம் இது பிறைசூடியபெருமானின் திருவிளையாடல்தான் என்று சொல்லி மகிழ்ந்தனர். குடந்தையில் சைவ சமயம் மிகவும் பலம் பொருந்தியதாகி விட்டாலும் புத்தசமயம் அடியோடு அழிந்து விடவில்லை. பகவரிடமிருந்து பிரிந்த சில பிக்ஷுக்கள் குடந்தைக் காரோணத்திலொரு சிறு புத்த விஹாரத்தை அமைத்து, பகவ முனிவர் செய்த காரியத்தைப் பெரிய துரோகமென்று எடுத்துக் காட்டி மதப் பிரசாரம் செய்யத் தொடங்கினர். பகவ முனிமீது பலவித அவதூறுகளையும் பழியையும் சுமத்திப் பிரசாரம் செய்த புத்தபிக்ஷுக்கள் தஞ்சை மன்னரின் சேனாபதியாக இருந்து புத்தபிக்ஷுவாகி விட்ட கலங்கமாலரையரின் ஆதரவை எதிர்பார்த்திருந்தனர்.

அப்பொழுது குடந்தைக் காரோணத்தில் வைஷ்ணவ பக்தர்களின் பக்திப் பிரசாரங்கள் அதிகமாயிருந்தன. பல வருடங்களுக்கு முன் அந்நகரிலிருந்து பல இனிய செந்தமிழ்ப் பாசுரங்கள் பாடி, பக்தி மார்க்கத்தில் மக்களை ஈடுபடும்படி செய்து அந்நகரிலேயே காவிரிக் கரையில் சமாதி அடைந்த திருமழிசைப் பிரானின் வழிவந்த சீடர்களும், ஆழ்வாராதிகளுள் சிறந்தவராக விளங்கிய திருமங்கை மன்னரிடம் பக்திகொண்ட வைஷ்ணவர்களும் இனிய செந்தமிழ்ப் பாசுரங்களைப் பாடி மக்களைப் பக்திப் பரவசத்துள் ஆழ்த்தி வந்தனர். அவர்களுக்குத் திருவாலி, திருநகரி போன்ற சிற்றூர்களை ஆண்டு வந்த பரம வைஷ்ணவர்களும் திருமங்கை மன்னரின் குலத்தவருமான சிற்றரசர்களின் பேராதரவும் கிடைத்து வந்தது. குடந்தைக் காரோணத்தில் சில புத்தபிக்ஷுக்கள் வந்து விஹாரத்தை அமைத்துக் கொண்டு மதப் பிரசாரம் செய்வது பற்றி வைஷ்ணவர்கள் கவலை கொள்ளவே இல்லை. அவர்கள் அன்பு வழியிலேயே புத்தமதத் துற



விகளை ஒடுக்கிவிட நினைத்தனர். பரந்தாமனின் பல அவதாரங்களில் புத்த அவதாரமும் ஒன்று என்று சொல்லிப் புத்தர் பிரானைக் கொண்டாடுவதற்குத் தலைப்பட்டனர் வைஷ்ணவர்கள்.

வைஷ்ணவர்களின் இத்தகைய பிரசாரம் புத்தபிக்ஷுக்களைத் திணறவைத்தது. புத்தரே நாராயணனின் திருவுருவம் என்றால் அதற்குத் தனியாக மதம் ஒன்று எதற்கு? பௌத்த விஹாரங்கள் எதற்கு? புத்த பிக்ஷுக்களின் தனிக் கொள்கைகளுக்கும் லட்சியங்களுக்கும் மதிப்பில்லாமல் போய் விட்டன. அதோடு மட்டுமல்ல; குடந்தைக் காரோணத்திலிருந்த சில சமண சமயவாதிகளும் புத்த சமயத்தினருக்கு நேர் வைரிகளாக விளங்கி வந்தனர். புத்த சமயத்தினருக்குக் கலங்கமாலரையரின் ஆதரவு இருந்தது என்றால் சமண சமயத்தினருக்குப் பல்லவ மன்னனின் சகோதரன் சிம்மவர்மனின் ஆதரவும், தஞ்சை மன்னரின் ஆதரவும் இருந்தன. பொதுவாகச் சொல்லப் போனால் நாளுக்கு நாள் புத்த சமயத்தினரும் ஜைன சமயத்தினரும் பகைமையை வளர்த்துக் கொண்டனரே தவிர அவர்களுக்குச் சைவ, வைஷ்ணவர்களின் முன்னேற்றம் பற்றிக் கவலையே இல்லை. இந்நிலையில் சைவ சமயத்தினரும் ஒற்றுமையாக இருந்து தங்கள் பலத்தைப் பெருக்கிக் கொண்டனர். இத்தகைய சூழ்நிலையில் தான் நாட்டில் பஞ்சமும் வறுமையும் தாண்டவமாடி மக்களை வாட்டியதோடு, நாட்டுப் பற்றுக் கொண்ட பூதுகனும் சோதிடர் சந்தகரும் காஞ்சியில் அடைந்த கதி மக்களை ஆவேசம்கொள்ள வைத்திருந்தது. தத்துவப் போராட்டங்களில் ஈடுபட்டிருந்த மதவாதிகளும் மக்களின் கொதிப்பான நிலையை உணர்ந்து கொண்டு, அனுதாபம் செலுத்தலாயினர்.

நகர மக்கள் ஆங்காங்கு கூடிப் பேசிக் குமைந்தனரே தவிர, அவர்களுக்கு எவ்வித வழியும் தோன்றவில்லை. எப்படியும் இந்த நிலையில் பல்லவ சாம்ராஜ்யத்தின் கீழும், பதவி ஆசையே பிரதானமாகக் கருதும் சிற்றரசர்களின் ஒழுங்கற்ற அதிகாரத்தின் கீழும் நலமிழந்து அவர்கள் வாழ விரும்பவில்லை. மறுபடியும் சோழ நாட்டை ஒரு குடையின் கீழ் ஆளும் அரசன் ஏற்பட்டால்தான் நல்ல வாழ்க்கை நிலையை அடையலாம் என்பதை அவர்கள் உணர்ந்து கொண்டனர். குழப்பமான நிலையிலுள்ள மக்களிடையே தக்க யோசனைகள் கூறி வழி நடத்தும் ஒரு சிலரும் அப்பொழுது தோன்றினர். அச்சமயத்தில் பழையாறை நகரை ஆளும் சோழ வம்ச இளவல் விஜயாலயனை அண்டிக் குறைகளைச் சொன்னால் தான் ஏதேனும் வழி பிறக்கும் என்று அவர்களுக்குப் பட்டது.

குடந்தை மக்கள் ஒன்றுகூடிப் படையெடுத்துச் செல்பவர்கள் போலப் பழையாறை நகரை நோக்கிச் சென்றனர். அப்பொழுதுதான் கொடும்பை மாநகரிலிருந்து வந்த விஜயனும் அவன் சகோதரி அருந்திகையும் குடந்தை மாநகரிலிருந்து படையெடுத்தாற்போல் வந்திருக்கும் மக்களின் பெருங்கூட்டத்தைக் கண்டு வியப்படைந்தனர். சில நாட்களாகச் சோழ மண்டலத்தையே பிடித்து வாட்டும் பஞ்சத்தின் காரணமாகத்தான் தங்களிடம் அவர்கள் குறைகளைச் சொல்ல வந்திருக்க வேண்டும் என்று அவர்கள் எண்ணினர்.

விஜயன் அந்தக் கூட்டத்தில் முன்னணியில் நிற்கும் ஒருசிலரைத் தனியே அழைத்து. "அவர்கள் பெருங் கூட்ட



மாக வந்திருக்கும் காரணம் யாது?'' என்று அனுதாபத்தோடு விசாரித்தான்.

அவர்களில் ஒருவன் ஆத்திரத்தோடும் துடிப்போடும், ''இந்நாட்டை மிகவும் உன்னத நிலையில் ஆண்ட சோழப் பரம்பரையில் உதித்தவர்கள் தாங்கள். இந்நாட்டை ஒருகுடையின் கீழ் ஆளத் தகுதியுடையவர்கள் தாங்கள்தான். காஞ்சியிலிருந்து எங்களையாளும் பல்லவ சக்கரவர்த்தியின் கீழும், தங்கள் சுகமே பெரிதென்று கருதும் சிற்றரசர்களின் கீழும் இச் சோழவளநாடு சிதறுண்டு பஞ்சத்திலும் பட்டினியிலும் பரிதவிக்கும் நிலையைத் தாங்கள் அறியவில்லையா? உங்களுக்குள்ள வீரத்தைக் கேட்டு நாங்கள் பெருமையடைந்துள்ளோம். இத்தகைய நிலையில் நீங்கள் எங்களுக்கு வழி காட்டுவதை விட வேறு கதியில்லை. இனி எங்களால் சகிக்க முடியாது'' என்றான்.

விஜயன் சிறிது யோசனையில் ஆழ்ந்தவன் போல் இருந்து விட்டு அலட்சியமாகச் சிரித்தான். ''நான் ஒன்றையும் அறியாமலில்லை. என் கை வாள் சிறிது பொறுமையை வேண்டுகிறது. சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருக்கிறது. எதிராளிகளின் பலமும் நாம் அறிந்ததே. சோழ நாட்டின் சிதறுண்ட நிலையையும் மக்களின் அவல நிலையையும் போக்காத வரையில் இந்த விஜயனுக்கும் அவன் கைவாளுக்கும் தூக்கம் வராது. இருக்கட்டும். இத்தனை நாட்களாகப் பல துயரங்களை அனுபவித்தும் வாளாவிருந்த நீங்கள் இன்று ஏன் திடீரென்று இவ்வளவு ஆவேசம் கொண்டவர்களாகக் கூடி வரவேண்டும்?'' என்று கேட்டான் மிகவும் ஆச்சர்யத்தோடு.



மற்றொருவன் ஆவேசத்தோடு பேச ஆரம்பித்தான்: "சோழ நாட்டிலுள்ளவர்கள் பஞ்சம் பட்டினி என்று காதால் கூடக் கேட்டு அறிந்தவர்கள் இல்லை. மன்னர்கள் நீதி முறை தவறினால்தான் பஞ்சமும், வறுமையும் ஏற்படும். பஞ்சமும் நோயும் ஒருபுறமாயிருக்க நாட்டுப் பற்றுள்ள உன்னதயான மனிதர்களையும் பகைவர்களின் சூழ்ச்சிக்குப் பலி கொடுப்பதென்றால் யாரால்தான் சகித்திருக்க முடியும்? நாஸ்திகராயினும் நேர்மையும், மக்களிடம் அனுதாபமும் கொண்ட பூதுகரைக் காஞ்சிமா நகரில் சில வஞ்சகர்கள் கொலை செய்திருக்கிறார்கள். அதோடு மட்டுமல்ல; கோடீச்சுவரத்துச் சோதிடர் சந்தகரையும் அவர்கள் சிறைப் பிடித்திருக்கிறார்களாம். இதை நாங்கள் எப்படிப் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்?"

விஜயன் சிறிது அலட்சியமாகச் சிரித்தான். "எல்லாம் எனக்குத் தெரியும். கவலைப் படாதீர்கள். எதிராளிகளின் கையில் சிக்கி உயிரைப் பலி கொடுக்கப் பூதுகர் அவ்வளவு அசடரல்ல. ஏமாந்தவருமல்ல. பூதுகரை யாரும் எதுவும் செய்துவிட முடியாது. அவர் உயிரோடுதான் இருக்கிறார். சந்தகரும் சிறைப்படவில்லை. எனக்கும் பூதுகரைப் பற்றிக் கவலையுண்டு. என்னைவிடக் கொடும்பாளூர் மன்னருக்கு அவரைப் பற்றி அதிகக் கவலை யுண்டு. இதெல்லாம் எதிரிகள் கிளப்பி விடும் பொய் வதந்திகளாகத் தானிருக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது யாரோ ஒருவர் பரபரப்போடு வந்து தணிவான குரலில் விஜயனிடம் ஏதோ சொன்னார். விஜயனும் அவனுக்குச் சமீபமாக நின்று கொண்டிருந்த அவன் சகோதரி அருந்திகையும் அந்த மனிதர் கூறிய வார்த்தைகளைக் கேட்டுச் சிறிது திகைப் படைந்து நின்றனர்.

விஜயனும் அருந்திகையும் திகைப் புறும் வண்ணம் வந்த மனிதர் கூறிய செய்திதான் என்ன? 'நந்திபுர நகரத்தில் இருக்கும் பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தாரின்மகள்திருபுவனியைக் காலையிலிருந்து எங்கோ காணவில்லை' என்ற செய்திதான் அது. உண்மையில் இச் செய்தி அவ்விருவரையும் சிறிது திகைப்புற வைத்தாலும் சிறிது நேரத்தில் அவர்கள் தெளிவடைந்து விட்டனர்.

"எனக்குத் தெரியும், ஒருநாள் அவள் எங்கேயாவது போய் விடுவாள் என்று. துறவறத்தில் நாட்டம் கொண்ட ஒரு பெண்ணைக் கட்டுப்படுத்திக் குடும்ப வாழ்க்கைக்குத் திருப்புவது என்பது அவ்வளவு எளிதான காரியமா?" என்றான் அருந்திகைப் பிராட்டி.

குடந்தையி லிருந்து வந்திருப்பவர்களின்எதிரே இவ்விஷயத்தைப்பற்றி அருந்திகையோடு பேச விரும்பவில்லை விஜயன். அவன் அவர்களுக்குத் தக்கபடி சமாதானப்படுத்தி அனுப்பி விட்டு, அருந்திகையிடம் "இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திடீரென்று எங்கேயோ மறைந்து விட்டாள் என்பது வியப்படையக் கூடிய விஷயமாக எனக்குப் படவில்லை. முரடனும் அசடனுமான கோளாந்தகனுக்கு எந்தப் பெண்தான் மனைவியாக விரும்புவாள்? அவனைக் கல்யாணம் செய்து கொள்வதைவிட எங்கேயாவது ஓடிவிடலாம் என்றுதான் எந்தப் பெண்ணுக்கும் தோன்றும். அதுவும் துறவறத்தில் பற்றுக்கொண்ட ஒரு பெண்ணைப் பற்றிக் கேட்க வேண்டுமா?" என்றான்.

"அதோடு மட்டுமல்ல; அவள் உண்மையாகவே இடங்காக்கப் பிறந்தாரின் மகளாக இருந்தாலல்லவா அவருடைய வீட்டில் இருக்க மனம் இடங் கொடுக்கும்? வேடிக்கைதான்; இசைக்கணிகை மாலவல்லியைக் கொண்டு வந்து தங்கள் மாளிகையில் அடைத்து வைத்துவிட்டு, 'தங்கள் பெண் திருபுவனி அவள்தான்' என்று சொல்லி அவளுக்கு ஒரு முரடனையும் மணம் செய்து வைக்க முயற்சி செய்தால்...? இதை அவள் சகிப்பாளா? அவளுக்குத் தன் வாழ்க்கை நிலை தெரியாதா? ஏதோ ஒரு காரணத்துக்காக வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டு துறவறத்தில் பற்றுக் கொண்ட அவளை எப்படித் திருப்ப முடியும்?' என்றான் அருந்திகைப் பிராட்டி.

"சிலகாலம் வரையில் அவள் மாலவல்லி என்ற ரகசியம் நமக்கு மாத்திரம் தெரிந்ததாக இருக்கட்டும். அந்த ரகசியத்தை இப்பொழுது நாம் வெளியிடுவது அவ்வளவு நலமல்ல. பெண்கள் வாய் எந்தச் சமாசாரத்தையும் காப்பாற்றுவது கடினமாயிற்றே? அதனால் சொன்னேன்" என்றான் விஜயன் குறும்பாகச் சிரித்துக் கொண்டே.

விஜயனின் வார்த்தையைக் கேட்டதும் அருந்திகைக்குச் சிறிது கோபம் ஏற்பட்டது. "மற்றப் பெண்களைப் போல என்னையும் நினைத்து விட்டாயா? எனக்கு எல்லாம் தெரியும். உன்னைவிட இந்தக் காரியத்தில் நான் மிகவும் சாமர்த்தியமாகத்தான் நடந்துகொள்வேன். ஆனால் தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளியார் கொடும்பாளூருக்கு வந்தபோது அவருக்குத் திருபுவனியைப் பற்றிய எல்லா ரகசியங்களும் தெரிந்து விட்டன என்பதை நீ மறந்து விடாதே. அப்படியிருக்

# தக்ஷிண ரயில்வே

## நோட்டீஸ்

### தசரா, தீபாவளி மற்றும் கிறிஸ்துமஸ் விடுமுறைகளில் மலிவான ரிட்டர்ன் டிக்கட்டுகள் வெளியீடு

வரும் தசரா, தீபாவளி, கிறிஸ்துமஸ் விடுமுறைகளில் முதலாவது இரண்டாவது மற்றும் மூன்றாவது வகுப்புகளுக்கு ஒத்தைப் பிரயாணக் கட்டணங்களில் 1⅓ மடங்கு விலையில் மலிவான ரிட்டர்ன் டிக்கட்டுகள் பின்கண்ட நிபந்தனைகளின் பேரில் வழங்கப்படும்.

(i) ரிட்டர்ன் டிக்கட்டுகள், குறைந்தபட்சக் கட்டணம் விதிக்கக் கூடிய 150 மைல்கள் தூரத்திலுள்ள ஸ்டேஷன்களுக்கு வழங்கப்படும்.

(ii) திரும்பும் பிரயாணத்தில் இடையில் பிரயாணத்தை நிறுத்திக் கொள்ள அனுமதிக்கப்பட மாட்டாது. ஆனால் ஆரம்பப் பிரயாணத்தில் ஒத்தைப் பிரயாண டிக்கட் வைத்துள்ளவர்களுக்கு சகஜமான விதிகள் பிரகாரம் இடையில் பிரயாணத்தை நிறுத்திக்கொள்ள அனுமதிக்கப்படும்.

(iii) பிரயாணிகள் திரும்பும் பிரயாணத்தைத் தொடங்கும்போது ரிட்டர்ன் டிக்கட்டுகளின் பாதித் துண்டை மேற்படி பிரயாணம் தொடங்கும் ஸ்டேஷனில் புக்கிங் ஆபீஸில் கொடுத்து டிக்கட்டில் திரும்பும் பிரயாணம் தொடங்கும் தேதியைக் குத்திப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

இவ்விதம் தேதி குத்தப் பெறாத டிக்கட்டுகளை வைத்திருக்கும் பிரயாணிகள் டிக்கட் இல்லாமல் பிரயாணம் செய்வதாகக் கருதப்படும்.

(iv) இந்த ரிட்டர்ன் டிக்கட்டுகள் வழங்கப்படும் காலங்கள் பின்வருமாறு :

(a) தசரா விடுமுறைகள் : 20-9-57 முதல் 3-10-57 வரை
(b) தீபாவளி விடுமுறைகள் : 19-10-57 முதல் 24-10-57 வரை
(c) கிறிஸ்துமஸ் விடுமுறைகள் : 15-12.57 முதல் 5-1-58 வரை

இந்த டிக்கெட்டுகளில் திரும்பும் பிரயாணத்தை டிக்கட் வழங்கப்பட்ட தேதியிலிருந்து பதினைந்து நாட்களில் பூர்த்தி செய்துவிட வேண்டும்.

(v) அட்வான்ஸ் புக்கிங் செய்யக்கூடிய இடங்களில் எல்லாம் டிக்கட் செல்லுபடி காலம் ஆரம்பப் பிரயாணம் தொடங்கும் தினத்தின் நள்ளிரவிலிருந்து கணக்கிடப்படும்.

சீப் கமர்ஷியல் சூபரின்டெண்டண்ட்

கும்போது நாம் இந்த ரகசியத்தை மறைக்க முயற்சி செய்வதில் என்ன பயன்?'' என்றாள் அருந்திகை.

''இல்லை. புலிப்பள்ளியாருக்கு இந்த உண்மை விளங்கி விட்டாலும் அதை எளிதில் நம்ப மாட்டார்கள். தவிர, பிடிவாதக்காரர்கள் நிலைமையான காரியம் என்று தங்கள் மனத்தில் பட்டாலும் அதைப் பிடிவாதத்தோடு செய்து அதனால் ஏற்படும் நிலைமையையும் அனுபவிப்பார்கள். புலிப்பள்ளியாருக்குத் திருபுவனியைப் பற்றிய உண்மை தெரிந்து விட்டதானாலும் அவர் பிடிவாதத்தோடு அவளைத் தம் மகனுக்கு மணம் முடித்து வைக்கத்தான் பிரியப்படுவார். அதோடு மட்டுமல்ல; இந்தச் சூழ்ச்சிகளெல்லாம் ஏதோ காரணத்துக்காகக் கலங்கமாலரையரினால் செய்யப்படுகிறது என்பதை மறந்து விடாதே. அவருக்கு மாலவல்லியின் வாழ்க்கைச் சரித்திரம் தெரியாமலிருக்காது. வேண்டுமென்றேதான் மாலவல்லியை ஒருவருக்குக் கல்யாணம் செய்துவைக்க நினைக்கிறார். சாம்ராஜ்யப் பித்துக் கொண்டவர்கள் எதைவேண்டுமானாலும் செய்யத் துணிந்திருப்பார்கள். பௌத்தத் துறவி போல் இருந்துகொண்டு அவர் செய்யும் சூழ்ச்சிகளெல்லாம் நாம் அறிந்தவை தானே? அவர் எதைப்பற்றியும் கவலைப்படாமல் மாலவல்லியைக் கோளாந்தகனுக்கு மணம் முடித்து வைக்கத் தான் முயற்சி செய்வார். நாம் இதைப் பொறுத்திருந்து பார்ப்பதுதான் நலம்'' என்றான் விஜயன்.

''நீ சொல்வதும் சரிதான்! இந்த உண்மை வெளியாகாமல் இருக்கவேண்டுமென்பதற்காகத்தான் மாலவல்லியைப் பார்க்க என்னோடு பழையாறை வருவதாகச் சொன்ன வைகைமாலையையும் சுதமதியையும் வரவேண்டாம் என்று சொல்லிப் பூம்புகாருக்கு அனுப்பி விட்டேன். அதோடு மாலவல்லியும் தன்னை யாரென்று காட்டிக் கொள்ள விரும்பவில்லை என்று எனக்குத் தெரிந்தது. அப்படியிருந்தால் அவள் இடங்காக்கப் பிறந்தாரிடம் ஆரம்பத்திலேயே சொல்லி இருக்க மாட்டாளா...? அவள்தான் எங்கோ மறைந்து விட்டாளே.. அவளை எப்படிக் கோளாந்தகனுக்கு மணம் முடிப்பது..?'' என்றாள் அருந்திகை.

''அவள் எங்கே போனால் என்ன? அவளை எங்கிருந்தாவது தேடிக் கண்டு பிடித்து வந்து தங்கள் எண்ணத்தை நிறைவேற்றிவிட மாட்டார்களா? கலங்கமாலரையரும் புலிப்பள்ளியாரும் சாதாரண மனிதர்களா?''

''அப்படிப் பலவந்தமாக அவர்கள் ஒரு காரியத்தைச் செய்யத் துணிவார்களானல் அதை நாம் எப்படியாவது தடுத்துத்தாஞக வேண்டும்!''

''அதற்கில்லாமல் நாம் வேறு எதற்காக இருக்கிறோம்? அவர்கள் அந்தப் பெண்ணைத் தேடிக்கொண்டு வரட்டும், பார்ப்போம்'' என்றான் விஜயன்.

''எல்லாவற்றுக்கும் நான் இப்பொழுதே நந்திபுர நகரம் சென்று இடங்காக்கப் பிறந்தாரைச் சந்தித்துச் சில விவரங்களைத் தெரிந்து கொண்டு வரலாம் என்று நினைக்கிறேன்'' என்றாள் அருந்திகை.

''சரியான யோசனைதான். போய்வா. எச்சரிக்கை. தட்பித் தவறிக்கூட இடங்காக்கப்பிறந்தாரிடம் இரகசியங்களைச் சொல்லி விடாதே.''

''மறுபடியும் எச்சரிக்கை செய்கிறாயே? பயப்படாதே. எதையும் சொல்லிவிட மாட்டேன்'' என்றாள் அருந்திகை.

அருந்திகைப்பிராட்டி நந்திபுர நகருக்குச் செல்லப் பல்லக்குப் பரிவாரங்களை ஏற்பாடு செய்யச் சொல்லி உத்தரவிட்டான் விஜயன். சில கணங்களில் பல்லக்குப் பரிவாரங்கள் சித்தமாயின. அவளும் புறப்பட்டாள். அருந்திகைப் பிராட்டி நந்திபுர நகரத்து மாளிகையை அடைந்த பொழுது, மாளிகை வாசலில் பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தார் சோகமே உருவாக உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்தில் அவர் மகன் பொற்கோமன் ஏதோ கோபமும் துடிப்பும் கொண்டவன்போல நின்று கொண்டிருந்தான். அவருக்கு அந்தரங்க யோசனை கூறும் சிலர் மிகவும் மனக்கலக்கம் அடைந்தவர்கள் போலச் சுற்றிலும் அமர்ந்திருந்தனர். அருந்திகைப் பிராட்டியின் பல்லக்கைக் கண்டதும் பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தார் எழுந்து நின்றார். மற்றவர்களும் மிகவும் வணக்கத்தோடு எழுந்து நின்றனர்.

அருந்திகை பல்லக்கிலிருந்து இறங்கி வந்து மிகவும் அனுதாபம் கொண்டவள் போல், ''காலையில்தான் செய்தி அறிந்தோம். நெடுநாட்களுக்குப் பிறகு காணாமல் போன உங்கள் அருமை மகளைத் தேடிக் கண்டு பிடித்து அழைத்துக் கொண்டு வந்தீர்கள். ஆனல் துர்ப்பாக்கியம். அவள் இப்படிப் போய்விடுவாள் என்று நான் நினைக்கவில்லை. என்றோ ஒரு நாள் திருந்தி மற்றக் குடும்பப்பெண்கள் போலாகி விடுவாள் என்றுதான் நினைத்தேன். காந்தம் போன்ற சக்தியுள்ள புத்தர் பிரானின் திருவருள் தான் அவளைப் பிடித்து இழுத்திருக்க வேண்

டும். மேலே என்ன செய்வதாக யோசனை செய்திருக்கிறீர்கள்?'' என்றான்.

பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தார் வியாகுலத்தோடு, ''என்ன செய்வது? அவளை எப்படியாவது தேடிக் கண்டுபிடித்துக்கொண்டு வருவதற்குப் பல திசைகளிலும் பல வீரர்களை அனுப்பி இருக்கிறேன்'' என்றார்.

''ஆம், என்ன செய்வது? நம்முடைய வயிற்றில் பிறந்த பெண்ணை விட்டுவிட முடியுமா? அவளுக்கு எப்படியாவது சிறப்பான முறையில் மணம் முடித்து வைப்பீர்கள் என்றுதான் நினைத்தேன். தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளியாரும் தங்கள் குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்ள வேண்டுமென்று துடியாக இருந்தார். துரதிருஷ்டம்! இப்படி நேர்ந்து விட்டது. மறுபடியும் அவள் அகப்பட்டாளானால் தாமதம் செய்யாமல் அவளைக் கோளாந்தகருக்கே மணம் முடிக்க ஏற்பாடு செய்யுங்கள்'' என்றாள்.



சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்டின் டைரக்டர் ஸ்ரீ கே. கே. ராமனின் குமாரர் ஸ்ரீ ஆர். சேஷசாயி, எம்.ஏ., வர்த்தக நிர்வாகத்தில் விசேஷப் பயிற்சி பெற லண்டன் சென்றுள்ளார்.

''திருமணத்துக்குவேண்டிய ஏற்பாடுகளெல்லாம் சித்தமாயிருக்கின்றன. அவள் கிடைத்து விட்டால் உடனே கல்யாணம்தான். நேற்றுகூடப் புலிப்பள்ளியார் இங்கு வந்து 'திருமணத்தை விரைவில் முடிக்க வேண்டும்' என்றார்'' என்று பொற்கோமன் சொன்னான்.

''நேற்று புலிப்பள்ளியார் இங்கு வந்தாரா? நேற்று அவர் இங்கே வந்தபோது திருபுவனி இருந்தாளல்லவா?'' என்றாள் அருந்திகைப் பிராட்டி.

''இருந்தாள். இன்று காலையில்தான் அவளைக் காணவில்லை. நேற்றுகூடப்புலிப்பள்ளியார் அவளிடம் தனித்துச் சில வார்த்தைகள் பேச வேண்டுமென்று சொல்லிப் பேசிக் கொண்டிருந்தார். அவர் போகும்பொழுது, 'உங்கள் மகளுக்கு என் குமாரனைக் கல்யாணம் செய்து கொள்ளப் பூரண விருப்பம் இருக்கிறது. இனிமேல் அவள் துறவற மார்க்கத்தில் பற்றுக் கொள்ளாத வண்ணம் நான் செய்து விட்டேன். கவலைப்படாதீர்கள்' என்றார். புலிப்பள்ளியார் சென்றபின் அவளும் நேற்று நடந்துகொண்ட விதத்திலிருந்து அவள் முற்றிலும் மனம் மாறிவிட்டாள் என்று தான் நம்பினேன். என் மனம் என்றுமில்லாத வண்ணம் நேற்று மிகவும் ஆறுதல் அடைந்திருந்தது. அவள் எங்கேனும் போய் விடுவாளோ என்று பயந்து வைத்திருந்த கட்டுக் காவலை யெல்லாம் கூட நீக்கிவிட்டேன். நேற்று நான் கொண்டிருந்த மன ஆறுதலையும் சந்தோஷத்தையும் இன்று ஏற்பட்ட நிகழ்ச்சி குலைத்து நொறுக்கி விட்டது'' என்றார் பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தார் மிகவும் குழப்பமும் துயரமும் அடைந்தவராக. சிறிது நேரம் அங்கே துயரம் சூழ்ந்த அமைதி நிலவி இருந்தது.

அருந்திகைப் பிராட்டி ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருப்பவள் போல் இருந்தாள். அவள் மனதில் பலவிதமான சந்தேகங்களெல்லாம் எழுந்தன. ''சரிதான். புலிப்பள்ளியார் திருபுவனியைப் பார்த்துப் பேசிவிட்டு வந்த பின் உங்களிடம் ஏதாவது சொன்னாரா....?'' என்று கேட்டாள் அருந்திகை.

''சிறிது நேரம் வேறு ஏதேதோ அரசாங்க விவகாரங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். அவர் கொடும்பாளூர் சென்று வந்ததைப் பற்றிச் சொன்னார். கொடும்பாளூர் மன்னர் தங்கள் சகோதரியைத் தஞ்சை இளவரசருக்கு மணம்செய்து கொடுக்கச் சம்மதிக்காதது பற்றியும், அதோடு அவர்கள் தஞ்சை மன்னரையும், பல்லவ சக்கரவர்த்தியையும் மிகவும் இழிவாகப் பேசியது பற்றியும் சொல்லி மனம் நொந்து கொண்டார். அதோடு காஞ்சிமாநகரில் பூதுகன் என்னும் நாஸ்திகவாதி கலங்க மாலரையரால் கொல்லப்பட்டதையும், அதனால் குடந்தைமா நகரத்து மக்கள் மிகவும் கொதிப்படைந்திருப்பதையும் பற்றிச் சொன்னார். இதைத் தவிர அவர் வேறு எதுவுமே சொல்லவில்லை'' என்றார் பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தார் மிகவும் ஆயாசத்துடன்.

''உங்களிடம் எவ்வளவு பொய் சொல்ல முடியுமோ அவ்வளவையும் சொல்லி விட்டார் போலிருக்கிறது ஆனால் நீங்கள் அவரைத் திருபுவனியோடு தனித்துப்பேச அனுமதித்திருக்கக் கூடாது. அவர் திருபுவனியிடம் என்ன சொன்னாரோ?'' என்று கூறினாள் அருந்திகைப் பிராட்டி. (தொடரும்)

# கலை கண்ட மலேயா ④

நெடுங் கடலில் கப்பல் நிம்மதியாகச் சென்று கொண்டிருக்கிறது. கடலுக்கு அடியிலிருந்து பயங்கரமான உடலமைந்த விலங்கு ஒன்று அட்டகாசத்தோடு வருகிறது. கப்பலைத் தாக்குகிறது. கப்பல் நாயகரும் அதிகாரிகளும் பரபரப்படைகின்றனர். அரக்க குணம் படைத்த அந்த விலங்கின் அட்டூழியத்தால் மரக்கலம் கவிழ்ந்து விடுகிறது! உலகப் பிரளயம் வந்ததுபோலே உயிருக்காகப் போராடிய பிரயாணிகள் ஏராளம்! கப்பல் அதிகாரிகள் அந்தக் கடல் விலங்குடன் துணிவோடு போராடுகின்றனர். கட்டுக்கடங்காத ஆவேசத்துடன் அந்த விலங்கு கரையிலுள்ள நகரத்தின் மீதும் மோதுகிறது. பாலங்கள் நொறுங்குகின்றன! அதன் வாலினால் நசுக்கப்பட்டுக் கட்டடங்கள் தவிடுபொடியாகின்றன! கடைசியாகப் பற்பல உபாயங்களைக் கையாண்டு அந்தக் கடல் விலங்கைக் கொன்று வீழ்த்துகின்றனர் அதிகாரிகள்!....

வாசக அன்பர்களே! மருட்சியடைய வேண்டாம்! இது நாங்கள் சென்ற கப்பலுக்கு நேர்ந்த விபத்தல்ல என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள்! வேறு எந்தக் கப்பலுக்கும் இந்த விபத்து உண்மையாக நடைபெறவில்லை! எங்களில் யாரும் இது போன்ற கனவையும் காணவில்லை! "பின்னே என்ன?" என்று கேட்கிறீர்களா?

கப்பலிலே எங்களுக்குக் காட்டப்பட்ட திரைப்படத்தின் கதைச் சுருக்கமே மேலே தரப்பட்டுள்ளது. "அது கடலின் அடியிலிருந்து வந்தது!" என்பதே அந்த ஆங்கிலப் படத்தின் பெயர்.

இந்தப் படத்தைப் பார்த்ததும் எங்களுக்கும் மருட்சி ஏற்படத்தான் செய்தது. கப்பலுக்கு எந்த நேரத்தில் ஆபத்து வரும் என்று சொல்ல முடியாது என்பதைக் காட்டுவதற்காகவே இந்தப் படத்தைக் கற்பனை செய்தார்கள் போலிருக்கிறது! ஆபத்து நேரங்களில் பிரயாணிகள் அத்தனை பேரையும் இயன்றவரையில் பத்திரமாக வெளியேற்றிய பிறகு கடைசியாகவே கப்பல் நாயகர் தப்பிக்க முயற்சி செய்வார் என்பதையும் இந்தப் படம் எடுத்துக் காட்டியது. எனினும் நடுக்கடலில் செல்கிறோமே என்ற நடுக்கம் புதைந்துள்ள நெஞ்சத்தில் சஞ்சலத்தை உண்டாக்கும் இத்தகைய படங்களைப் பிரயாணிகளுக்குக் காட்டுவது அவ்வளவு சரியானதென்று சொல்ல முடியாதல்லவா?

ஆயினும் கப்பலிலே திரையிடப்பட்ட "தஞ்சாவூர்" என்னும் செய்திப் படமும் வேறு சில படங்களும் பிரயாணிகளுக்கு உற்சாகம் ஊட்டுவனவாக இருந்தன என்பதையும் குறிப்பிடத்தான் வேண்டும்.

நாகப்பட்டினத்தை விட்டுப் புறப்பட்ட பின் பினாங்குத் துறைமுகத்தைக் காணும் வரையிலும் சுமார் நாலரை நாட்கள் (ஏப்ரல் பதினைந்தாம் தேதி இரவு முதல் பத்தொன்பதாம் தேதி இரவு முடிய ஐந்து இரவுகளும் நான்கு பகற் பொழுதும்) கப்பலிலே வெளியுலகத் தொடர்பு எதுவும் இல்லாமலே இருக்க வேண்டியதாயிற்று.

மேலே நீலவானம்; சுற்றிலும் அலைகடல்; அலையைக் கிழித்துக் கொண்டு முன்னேறிய கப்பலின் நிலையை என்னவென்று சொல்வது? மிதந்து வளர்ந்த தீவு என்பதா? நகர்ந்து சென்ற நகரம் என்பதா?

அகண்ட வானத்தைப் பிரதானமாகவும் அலைகடலைத் "தன்னு மேடை" யாகவும் கொண்ட அரங்கத்திலே கப்பல் என்னும் கட்டழகி களிநடம் புரிந்து சென்றாள் என்று கலையழகோடு சொல்வதா? எப்படிப் புகழ்ந்தாலும், கற்பனை புரிந்தாலும் பொருந்துவதாக இருந்தது கப்பலின் போக்கு.



சுற்றிலும் கரையையே காணாமல் இந்த நாலவரை நாட்களும் எப்படிப் பொழுது போயிற்று என்பதை நினைக்க நினைக்க விந்தையாகவே இருக்கிறது.

கடிதப் போக்குவரத்துக்கு வழியில்லை; அன்றாடச் செய்திகளைத் தரும் பத்திரிகைகளைப் பெற முடியாது; வானொலி நிகழ்ச்சிகளும் சரியாக ஒலிபரப்பமுடியாத நிலை ஏற்பட்டது. எனவே ஏதோ கனவு உலகத்தில் இருப்பது போன்றே தோன்றியது. மனமகிழ்ச்சி ஊட்டுவதற்காக இசைத்தட்டுகள் மட்டும் அடிக்கடி ஒலிபரப்பப்பட்டன.

உண்ணும் நேரமும் உறங்கும் நேரமும் தவிர மற்ற வேளைகளில் உல்லாசமாக அமர்ந்து மகிழ்வதற்கு வசதியான பொழுது போக்கு மண்டபம் கப்பலில் அளவற்ற ஆறுதலைத் தந்தது. புத்தக அலமாரியும், பியானோ இசைக் கருவியும், சுந்தரமான 'சோபா'க்களும், கலையழகு மிளிரும் 'பார்வதி'யின் சிலையொன்றும் பொழுதுபோக்கு மண்டபத்துக்குப் பொலிவு தந்தன. கூப்பிட்ட குரலுக்கு ஏனென்று கேட்கப் பணியாள் ஒருவர் மண்டபத்தில் எப்போதும் ஆயத்தமாக இருந்தார். சீட்டாட்டம், சதுரங்கம் முதலிய விளையாட்டுக்கள் சுறுசுறுப்பாக நடைபெற்று வந்தன. உயர் வகுப்புப் பிரயாணிகளுக்காகச் சினிமாப் படங்களும் கலை நிகழ்ச்சிகளும் இந்த மண்டபத்திலேதான் நிகழ்ந்தன.

எங்களுடன் கப்பலில் கல்லூரி மாணவ மாணவிகள் சிலர் பிரயாணம் செய்தனர். மலேயாவைத் தாயகமாகக் கொண்ட இவர்கள் இந்தியாவில் உள்ள கல்லூரிகளில் படிப்பவர்கள் என்று தெரிந்தது. கோடை விடுமுறைக்காகத் தாயகம் திரும்பிக் கொண்டிருந்த இவர்களுக்கு எந்த நேரத்தில் கும்மாளம் பிறக்கும் என்று சொல்ல முடியாமல் இருந்தது. அடிக்கடி கப்பலின் வெளித் தாழ்வாரத்தில் கூடிக்கொண்டு இவர்கள் பாட்டு பாடியும் சீட்டியடித்தும் ஆரவாரம் செய்தனர்; வெறும் ஆரவாரத்தோடு நில்லாமல் 'ரோங்கின்' என்று சொல்லப்படும் மலேயா நடனமும் ஆடிப் பாடினர். இந்த ஆட்டங்களைக் காணப் பெருங் கூட்டம் கூடியது. இந்த மாணவர்கள் தாம் மட்டும் ஆடிப் பாடியது போதாதென்று வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்ற நகைச்சுவை நடிகர் 'குண்டு' கருப்பையாவையும் தம்முடன் இழுத்து ஆடும்படி தூண்டினர். 'ஆட்டி வைத்தால் யாரொருவர் ஆடாதாரே!' திரு கருப்பையாவும் சற்றும் சளைக்காமல் கப்பல் அதிரும்படியாக ''டப்பாக் குத்து'' ஆட்டம் போட்டு அனைவருக்கும் உள்ளக் கிளர்ச்சியை ஊட்டினார்.

எந்தவிதமான கேளிக்கையிலும் ஈடுபாடில்லாத சிலர், அயர்வில்லாமல் கோயில் பிராகாரத்தைச் சுற்றும் பக்தர்களைப் போல வெளித் தாழ்வாரத்தில் வேகமாகச் சுற்றிச் சுற்றித் தேகப்பயிற்சி செய்தனர்.

கப்பல் நாயகர் திரு கப்ராஜி எவரையும் எளிதில் கவரும் இதயம் படைத்தவர். சிரித்த முகத்துடன் எல்லோருடனும் பழகினார். இவர் பார்ஸி வகுப்பைச் சேர்ந்தவர். பூனா நகரத்தில் பிறந்தவர். பரம்பரையாகச் செல்வாக்குள்ள குடும்பத்திலே தோன்றியவர்; இவருடைய மைத்துனர் திரு குண்டேவியா இலங்கையில் இந்தியத் தூதராகப் பணியாற்றி வருகிறார்.

திரு கப்ராஜி கலையார்வம் மிகுந்தவர். எங்கள் கலைக் குழுவைச் சேர்ந்த நடனச்



# போனது எப்படியோ?



பி. கே. சண்முகம் - புத்தகனேரி சுப்பிரமணியம்

சிறுமி சந்தோஷ், பாடகர் டி. பி. சங்கர நாராயணன் ஆகியோருடைய கலை நிகழ்ச்சிகளைக் கப்பலிலே நடத்துமாறு செய்து, கண்டு மகிழ்ந்து பாராட்டினார். இது போன்ற காரியங்களில் உற்சாகமாக முன்னின்று கப்பல் நாயகருக்கு உதவியாக ஏற்பாடுகளைக் கவனித்தவர் பொதுநல அதிகாரியான திரு கே. எஸ். ராமநாதன். பிரயாணிகளின் உற்ற நண்பர் இவர்.

கப்பல் நாயகரான திரு கப்ராஜி ஆர்வத்தோடு தமிழ்மொழியைக் கற்கவும் முயற்சி செய்தாராம். ''முதிய புலவர் ஒருவரை என்னுடன் கப்பலிலே கூட்டி வந்து அவரிடம் தமிழைக் கற்க முற்பட்டேன்...ஆயினும் எனக்கு வெற்றி கிடைக்கவில்லை!'' என்றார் அவர். டாக்டர் கால்டுவெல், ஜி. யு. போப், வீரமாமுனிவர் போன்ற ஆங்கிலேய அறிஞர்கள் தமிழிலே புலமை பெற்ற வரலாற்றை அவருக்கு விளக்கி ஊக்கம் அளித்தோம்.

இடையில் ஒரு நாள் கப்பலின் மேல் தட்டுக்குச் சென்று 'ஸ்டீயரிங்', 'புரோபெல்லர்' முதலான இயக்கும் கருவிகளைப் பார்வையிட்டோம். இக் கருவிகளுக்கும் கப்பலின் தளத்தில் இருந்த எஞ்சின்களுக்கும் உள்ள தொடர்பை உணர்ந்தோம்.

கப்பல் செல்லும் பாதையில் தடையான பொருள் ஏதேனும் தென்பட்டால், வெகு தொலைவில் இருக்கும்போதே அதனை நிழலாட்டம் போல் காட்டக் கூடிய விந்தையான இயந்திரத்தையும் கண்டு வியந்தோம்.

கப்பல் இயங்குவதற்கு உதவியாக ஆறு எஞ்சின்கள் அடித்தட்டில் உள்ளன. எஞ்சின்கள் உள்ள பகுதிகள் கடல் மட்டத்துக்கு முப்பது அடிக்குக் கீழே இருக்கின்றன. அந்தப் பகுதிகளுக்குச் செல்வதற்கு இரும்பு ஏணிகள் பொருத்தப்பட்டுள்ளன.

என்ஜின்களைப் பார்க்கப் புறப்பட்ட நாங்கள் இரும்புஏணியின் முதற்படியிலே அடியெடுத்து வைத்தவுடனேயே திடுக்கிட்டு விட்டோம். ஏணியின் சூடு தாங்க முடியவில்லை. எனவே, இறங்கத் துணிவில்லாமல் திரும்பி விடலாம் என்றுகூட எண்ணினோம்.

''இந்தச் சூடு தாங்கமாட்டாமல் தவிக்கிறீர்களே! என்ஜின்களிலேயே வேலை செய்யும் தொழில் நிபுணர்களை எண்ணிப் பாருங்கள்!'' என்றார் எங்களை அழைத்துச் சென்ற நண்பர் திரு கே. எஸ். ராமநாதன்.

தகிக்கும் அறைகளுக்குள்ளேயும் தயங்காமல் பாடுபடும் தொழில் நிபுணர்களின் சக்தி எங்களுக்கும் துணிவைத் தந்தது.

கையிலே துணியைச் சுருட்டி வைத்துக் கொண்டோம். மெதுவாகப் படிகளைப் பிடித்துக் கொண்டு இறங்கினோம். வெப்பம் மேனியைத் தாக்கியது; விசைப் பொறிகள் இயங்கும் பேரொலி செவிகளைத் துளைத்தது. வெப்பத்துக்கு மத்தியில் ஓரிடத்தில் மேலேயிருந்து பெரிய குழாய் வழியே ''குபு குபு'' என்று காற்று பொழியும்படி செய்துள்ளதைக் கண்டோம். அருவி போல் பொழிந்த அந்தக் காற்றின் வேகம் வெப்பத்தின் கொடுமையைத் தணித்தது.

நீராவிக் கொப்பரைக்கு உதவியான என்ஜின்களோடு காணப்பட்ட இணைப்புப் பொறிகளும், குழாய்களும், சக்கரங்களும் எங்களுக்கு அதிசயப்பை அளித்தன. ஒவ்வொன்றையும் கண்டு வியந்தோமே தவிர அவை எவ்வாறு இயங்குகின்றன என்பதைப் புரிந்து கொள்ளக் கூடிய சக்தியோ பொறுமையோ எங்களுக்கு இல்லை.

ஏதோ என்ஜின்களையும் பார்த்துவிட்டோம் என்ற மன அமைதியோடு திரும்பினோம். இத்தகைய மகத்தான இயந்திர அமைப்பிலே ஒரு சிறு திருகு ஆணிகூடப் பிசகாமல் கவனித்துக்கொண்டு வரும் தொழில் நிபுணர்களின் பணியை மனமார வாழ்த்தினோம்.

எங்களில் சிலர் டெக் பிரயாணிகளும் 'பங்க்' பிரயாணிகளும் தங்கிய அடித்தட்டுக்கு அடிக்கடி சென்று அவர்களோடு அன்பாகப் பழகுவது உண்டு. 'டெக்' பிரயாணிகளுக்குக் குறிப்பிட்ட இடம் ஒதுக்குவது கிடையாது. அவரவர் சாமர்த்தியத்துக்குத் தக்கவாறு தரையிலே இடம் பிடித்துக் கொள்ள வேண்டும்.

ஏராளமான மூட்டை முடிச்சுகளுடன் 'கால் மாடு—தலைமாடு' என்று பார்க்காமல் நெருக்கிக் கொண்டு படுத்து உறங்கும் 'டெக்' பிரயாணிகளைக் காணும்போது மிகவும் இரங்கத் தக்கதாகவே இருக்கும்.

'பங்க்' பிரயாணிகளுக்கு 'டெக்' பிரயாணிகளைவிடக் கொஞ்சம் கட்டணம் அதிகம். எனவே இவர்களுக்குக் கொஞ்சம் வசதியும் அதிகம். ஒவ்வொரு 'பங்க்' பிரயாணிகளுக்கும் தனியே இடம் உண்டு. இரண்டு தட்டுகளுடன் அலமாரிபோல் உள்ள கட்டிலையே 'பங்க்' என்று சொல்லுகிறார்கள். இந்தக் கட்டிலில் ஒவ்வொரு பிரயாணிக்கும் ஒரு தட்டு ஒதுக்கப்பட்டிருக்கும்.

இந்தக் கீழ் வகுப்புப் பிரயாணிகளுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களில் எப்போதும் வெங்காய வாடை வீசிக்கொண்டிருக்கும். இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் வெங்காய மூட்டைகள் கப்பலின் பாதாள அறைகளிலே ஏற்றப்படுவது வழக்கம். இத்தகைய சரக்குகளை அடுக்கும் இடத்தை அடுத்தாற்போல் மூக்கைத் துளைக்கும் முடை நாற்றம் தவிர்க்க முடியாத தொல்லையாக இருக்கிறது. போதாக் குறைக்குப் பிரயாணிகளில் பலர் ஊதித் தள்ளும் புகை வேறு 'டெக்'கிலே கப்பிக் கொண்டு மூச்சுத் திணறலை உண்டாக்கும். சுத்தத்துக்குப் பகைவர்களாக இருக்கும் பிரயாணிகள் எத்தனையோ பேர்கள் உண்டு. தந்திரமான பிரயாணிகள் சிலர் இந்தத் தொந்தரவெல்லாம் வேண்டாமென்று மிகத் துணிவோடு உயர்வகுப்புப் பிரயாணிகள் தங்கும் இடங்களிலேயே பொழுதுபோக்க நாகரிகமாக வந்து விடுவார்கள்!

நூற்றைம்பது உயர்வகுப்புப் பிரயாணிகளுக்கும், இருநூற்றி முப்பத்தொன்று 'பங்க்' பிரயாணிகளுக்கும், எழுநூற்று முப்பத்தாறு 'டெக்' பிரயாணிகளுக்கும் ''சென்னை ராஜ்ய''க் கப்பலில் இடவசதி உண்டு.

கப்பல் அதிகாரிகளின் எண்ணிக்கை இருபத்தைந்து. ஏனைய சிப்பந்திகளின் எண்ணிக்கை நூற்றுமுப்பது.

ஆகவே, கப்பலில் செல்லும் மக்களின் மொத்த எண்ணிக்கை 1,272. கப்பல்கொள்



காலம் மாறினும்
தரம் நிலைத்திருக்கிறது

## பேவர் - லூபா

கடிகாரத் தொழிலில் கடந்த 140 ஆண்டுகளுக்கு மேலாகப் பெற்றுள்ள அநுபவத்தின் பயனாக பெருமையுடன் வழங்குவது இப் புதுநாகரீக

# SANDOW

**சாண்டோ சிறிய சைஸ் கைக்கடிகாரம்**



Ref. 3043 அழகிய கைக்கடிகாரம், 8¾''' அளவு. 15 ஜுவல்கள் லிவர் இயக்கம், அதிர்ச்சியால் பாதிக்கப் படாதது. காந்த எதிர்ப்பு. சென்டர் செகண்ட் ஹாண்ட் முள்ளுடன் கூடியது. தண்ணீரால் பாதிக்கப்படாத முழு எக்கு கேஸ் தேவையான நவீன டயல்களில் தேர்ந்தெடுக்கலாம். ரூ.188/-

Ref. 3042 மேலிருப்பதுபோலவே ஆனால் 20 மைக்ரோன், ரோல்டு கோல்டு முகப்பும் பின்புறம் எக்கு கேஸும் கொண்டது. ரூ. 194/-



# FAVRE-LEUBA

**AND COMPANY PRIVATE LIMITED**

பேவர்-லூபா & கம்பெனி பிரைவேட் லிட்.

த. பெ. 845, பம்பாய் - த. பெ. 474, கல்கத்தா

C 67



லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷனின் ஆண்டு விழா சென்ற வாரம் சென்னை அடையாறில் நடைபெற்றது. இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் சிப்பந்திகள் பல விளையாட்டுகளையும், கேளிக்கைகளையும் நடத்தினர். இந்த விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்த பிராந்திய மானேஜர் திரு கே. பாலசுப்பிரமணியம் பேசுவதை மேலே உள்ள படத்தில் காணலாம்.

---

எக்கூடிய பாரத்தின் மொத்த எடை சுமார் 8,560 டன்கள் என்று தெரிகிறது.

அடித்தளத்தில் எவ்வளவுக் கெவ்வளவு சரக்குகளின் பளு அதிகமாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு கப்பலின் ஆட்டம் குறைவாக இருக்கும்.

"இப்போது நாம் எங்கே இருக்கிறோம்?" என்ற கேள்வி ஒவ்வொரு பிரயாணியின் உள்ளத்திலும் உதிப்பது இயல்புதானே? இந்தக் கேள்விக்குப் பதில் அளிப்பது போல் ஒவ்வொரு நாளும் அறிவிப்புப் பலகைகளில் ஒரு முக்கியமான செய்தியை அதிகாரிகள் வெளியிட்டு வந்தார்கள். கப்பலின் வேகம், அது செல்லும் திசை, பிரயாணம் செய்த தூரம், இன்னும் கடந்து செல்ல வேண்டிய தூரம் முதலிய விவரங்கள் அந்த அறிவிப்பில் அடங்கியிருந்தன. இந்த அறிவிப்பு பிரயாணிகளுக்கு எவ்வளவோ ஆறுதலாக இருந்தது.

ஒவ்வொரு நாளும் அதிகாலையிலிருந்து அந்திப் பொழுது வரையிலும் கதிரவன் ஒளி வானத்திலும் கடலிலும் பலவித நிற பேதங்களை உண்டாக்கி இயற்கையின் விசித்திரங்களைக் காட்டிக் கொண்டிருந்தது.

காட்சியில் ஏற்பட்ட மாற்றங்கள் மட்டுமல்லாமல் கப்பல் கடிகாரத்திலும் மாற்றங்கள் செய்ய வேண்டியதாயிற்று. நாகையிலிருந்து சுமார் மூந்நூறு மைல் தூரம் பயணம் செய்த பின்னர், ஏப்ரல் பதினாறும் தேதி இரவு பன்னிரண்டு மணிக்கு, கடிகாரத்தில் அரை மணி நேரம் முன்னே தள்ளிவைக்கப்பட்டது. அதாவது இந்திய நேரம் பன்னிரண்டு மணி என்றால் அந்த நேரத்தில் கப்பலில் மணி பன்னிரண்டரை.

இவ்வாறு 24 மணி நேரத்துக்கு ஒரு தடவை கப்பலில் நேரம் அரைமணி விதம் முன்னேக்கிச் சென்றதால் பினங்கு செல்வதற்கு முன்பாகவே கப்பல் கடிகாரம் இந்திய நேரத்தை விட ஒன்றரை மணி நேரம் முன்னே தள்ளி வைக்கப்பட்டது. அதாவது இந்தியாவில் நாலரை மணியென்றால் கப்பல் கடிகாரத்தில் மணி ஆறு. சிங்கப்பூர் செல்வதற்குள் இந்தக் 'கால வித்தியாசம்' இன்னும் அரைமணி கூடுதலாகும் என்று தெரிந்து கொண்டோம்.

சென்னையில் கப்பல் புறப்பட்ட தேதியிலிருந்து ஐந்தாவது நாள் (ஏப்ரல் பதினெட்டாம் தேதி) காலையில் நிகோபார் தீவுகளும் மாலை ஆறுமணியளவில் சுமத்ரா தீவும் எமது கண்களுக்குத் தென்பட்டன.

மண்ணின் கனவை கண்டு அதை விழுங்கி ஏப்பமிடும் சக்தி கடலுக்கு நெடுங்காலமாகவே இருந்து வருகிறது என்று இலக்கியங்கள் பேசுகின்றன அல்லவா? குமரி முனைக்குத் தெற்கே லெமூரியா என்னும் கண்டம் இருந்ததாகவும் அதன் நிலப்பரப்பை யெல்லாம் முதல் ஊழியின் இறுதியில் கடலானது பொங்கி எழுந்து தன் அடி வயிற்றிலே அடக்கிக் கொண்டதாகவும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனரே! அந்த லெமூரியாக் கண்டத்தில் கடலில் மூழ்காமலிருக்கும் பகுதிகள்தாம் நக்காவரம், சாவகம் போன்ற தீவுக் கூட்டங்களாக இருக்குமோ என்றெல்லாம் இலக்கியச் சிந்தனைகள் எங்கள் உள்ளத்திலே எழுந்தன.

மறுநாள் பகல் பன்னிரண்டு மணிக்குக் 'குருவிமலை' என்று சொல்லப்பட்ட நிலப் பகுதியைக் கண்டோம். அந்த மலை வெறும் பாறைதான் என்றும் மக்கள் வாசம் செய்வதில்லை யென்றும் சிலர் சொன்னார்கள். குருவி மலைக்கும் பினங்குத் துறைமுகத்துக்கும் இடையில் எழுபத்தெட்டு மைல் தூரமே உள்ளதென்றும் தெரிந்து கொண்டோம்.

இரவு 6-15 மணிக்குப் பினங்கு நன்றாகத் தெரிந்தது. துறைமுகத்தின் கரை கண்டு விட்டோம் என்று கரைகாணு மகிழ்ச்சிக் கடலில் மிதந்தோம். (தொடரும்)

# மாதர்குலதிலகங்கள்

# ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன்



டில்லியில் காலை ஆறு மணிக்கு ஒரு மந்திரி வீட்டுக்குள் நுழைவோம். மேஜையில் ஒரு சகோதரி உட்கார்ந்து எழுதிக் கொண்டிருப்பார். சுற்றிலும் பரப்பப்பட்ட காகிதத் தொகுதிகள். வாசலில் நான்கு பேர் காத்திருப்பார்கள். மேஜைக்கு எதிரே சிலர் உட்கார்ந்திருப்பார்கள். ஒருவர் கோவாப் பிரச்னையைப் பற்றிக் கேட்பார். இன்னொருவர் எல்லைப் புறத்தகராறுகளைப் பற்றிக் கவலையுடன் விசாரிப்பார். மற்றொருவர் காமன்வெல்த் சபையில் இந்தியாவின் உறவு முறையைப் பற்றிக் கேள்விகளை அடுக்குவார். இதற்குள் டெலிபோன் அலறும். ஒரு புன்சிரிப்புடன் அந்தச் சகோதரி போனை எடுத்துக் கேட்பார். போனில் கவியரசி சரோஜினி தேவி ஞாபகார்த்தம் நிறுவ வேண்டிய விஷயமாக இருக்கும். எல்லாவற்றுக்கும் சிரித்த முகத்துடன் தெளிவாகப் பதில் சொல்லும் சாதுர்யம் உள்ளவர் ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன் என்பதைச் சொல்ல வேண்டுமா?

கேரள நாட்டுப் பெண்களைப் பற்றிக் காந்தி மகான் மிகவும் பெருமைப் படுத்திப் பேசியிருக்கிறார். அவர்களுடைய கல்வி அறிவு மட்டுமல்ல. சளியாத உழைப்பு, எளிமையான வாழ்க்கை இவைகள் தான் அவர்களை மேன்மேலும் சிறப்பிக்கின்றன.

திருமதி லக்ஷ்மி மேனன் 1899-ம் ஆண்டு திருவாங்கூரில் பிறந்தார். இந்தக் காலத்தைப் போல் அப்பொழுது பெண்கள் கல்லூரியில் படிப்பது கேரள நாட்டில் கூடச் சகஜமாக இல்லை. திருமதி லக்ஷ்மி மேனன் அந்தக் காலத்திலேயே எம். ஏ பரீட்சையில் தேர்ச்சி பெற்றார். பிறகு சென்னை லேடி வெலிங்டன் கல்லூரியில் எல். டி. பட்டம் பெற்றார். அதன் பிறகு சட்டப் பரீட்சையில் தேறி எல்.எல்.பி. பட்டமும் பெற்றுவிட்டார்.

அகில இந்திய மாதர் மகாநாட்டின் பத்திரிகையான 'ரோஷனி'யின் ஆசிரியையாக அமர்ந்து பெண்குலத்துக்கு மிகச் சிறந்த முறையில் தொண்டாற்றி வந்தார். அவரது அரசியல் கட்டுரைகளைப் படித்தவர்கள் எல்லோரும் அபாரமாகப் புகழ்ந்துள்ளனர்.

ஐ. நா. சபையில் பெண்கள் நிலைமையைப் பற்றி ஒரு பிரிவு இருக்கிறது. அதன் தலைவியாகச் சில காலம் தொண்டாற்றினார். அந்தச் சந்தர்ப்பத்தில் ஐரோப்பியப் பெண்களுடன் பழகும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. இவருடைய அபார சாமர்த்தியத்தையும் தொண்டு புரியும் ஆற்றலையும் கண்டு ஆங்கிலேயர்களே வியந்தார்கள். ஆக்ஸ்போர்ட் யுனிவர்ஸிடி பிரஸ் வெளியீட்டில் திருமதி லக்ஷ்மி மேனன் ஒரு விரிவான கட்டுரை எழுதி இருக்கிறார். அதில் அநேக அரிய கருத்துக்கள் இருப்பதை அறிஞர்கள் பாராட்டியிருக்கிறார்கள்.

குவாலியரில் நடந்த மாதர் மகாநாட்டில் 'பெண்களுக்குக் கல்வி வசதிகள்' என்பதைப் பற்றி அவர் நிகழ்த்திய பிரசங்கம் பாரத நாட்டின் பெண் குலத்தையே உயர்த்தி விட்டது. 1948-ம் ஆண்டில் இந்திய கோஷ்டிப் பிரதிநிதியாக ஐ. நா. சென்று மிகச் சிறப்பாகப் பணி புரிந்தார்.

அகில இந்திய மாதர் மகாநாட்டின் உபதலைவியாக அவர் இருக்கிறார். ஒரு வேலையை எடுத்துக் கொண்டால் செய்து முடித்தே தீருவார். அதற்கு வேண்டிய உறுதியும் உழைப்பும் அவரிடம் பூரணமாக இருக்கின்றன.

பெண்கள் முன்னேற்றம் அவருடைய குறிக்கோள். பெண்களுக்குரிய கௌரவத்துக்குப் பங்கம் நேர்ந்தால் அதைக் கட்டிக்காட்டிச் சண்டை போடத் தயங்க மாட்டார்.

அவருடைய தோற்றம் வயதைக் குறைத்து இளமையாகக் காட்டும். அது அவர் அகத்தின் பிரதி பலிப்பு என்று சொல்லலாம். அதைப் போல அவருடைய எண்ணங்களிலும் ஒரு பசுமை இருக்கிறது.

அவர் சாதாரணப் பெண்ணல்ல; அருள் பெற்ற சக்தி வாய்ந்த சகோதரி என நாம் பழகினால் அறிந்து கொள்ளலாம். சிநேகத்துக்குப் பாத்திரமானவர். மத்திய சபையில் இன்று ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன் வெளி நாட்டு விவகார மந்திரியாக இருக்கிறார். நேருஜியின் அபாரச் செயல்களுக்கு வலது கையாக இருந்து பெரும் பொறுப்பை வகிக்கிறார்.

ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன் பெண் குலத்தைச் சிறப்பித்து உயர்த்துவதற்குப் பல்லாண்டு வாழப் பிரார்த்திக்கிறோம். —வசுமதி ராமசாமி



கோழிக்கோடு பிரபல அட்வகேட் திரு டி. கே. லக்ஷ்மண ஐயரின் புதல்வன் திரு டி. எல். விசுவநாதனுக்கும், சென்னை திரு ராமநாராயணனின் புதல்வி திருமதி ரஜனிக்கும் திருமணம் நடைபெற்றது.



தமிழ் நாடு அருள்நெறித் திருக்கூட்டச் செயலாளர் திரு எஸ். கண்ணனின் மைத்துனி திருமதி பரிமளாவுக்கும் திரு கே. எல். நரசிம்மனுக்கும் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

# வாழ்க



'லா வீக்லி' பத்திரிகையின் அதிபர் திரு வாசுதேவன் அவர்களின் குமாரி திருமதி காந்தாவுக்கும், பர்மாஷெல்லைச் சேர்ந்த திரு திருவேங்கடத்துக்கும் மயிலாப்பூரில் திருமணம் நடந்தது.



திரு பட்டு அவர்களுக்கும் திரு ரங்கநாதன் அவர்களின் புதல்வி திருமதி குருதாவுக்கும் ஆகஸ்டு மாதம் 21ந் தேதி விவாகம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



பென்னுகாரம் பிரபல மிராசுதார் திரு ஜி. சொக்கலிங்கம் செட்டியாரின் குமாரர் திரு கெ. சுப்பிரமணியத்துக்கும், திருமதி சரோஜாவுக்கும் தர்மபுரியில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தது.



இந்திய சர்க்கார் திட்டக் கமிஷன் கூட்டுக் காரியதரிசி திரு எம். ஆர். கோதண்டராமன் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி ராதாவுக்கும் சிரஞ்சீவி ரங்கராஜனுக்கும் சிங்கப்பெருமாள் கோவிலில் விவாகம் நடந்தேறியது.



தியாகராயநகர் ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் திரு டி. என். சுந்தரம் அவர்களின் புதல்வி திருமதி விஜயலக்ஷ்மிக்கும், திரு டி.ஏ. ராமகப்பனுக்கும். சென்னையில் விவாகம் விமரிசையாக நடைபெற்றது.

# மணமக்கள்



இண்டோ கமர்ஷியல் பாங்கியின் அக்கௌண்டெண்ட் திரு ஆர் பஞ்சாபகேசனின் குமாரி சௌபாக்கியவதி வசந்த லக்ஷ்மி ஆகஸ்டு 22ந் தேதி சிரஞ்சீவி ஆர். ஜகதீசனை மணந்து கொண்டார்.



செம்மங்குடி ஆரம்ப உயர்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர் ஸ்ரீ என். கிருஷ்ண மூர்த்தி அய்யர் புதல்வன் சிரஞ்சீவி ராம சாமிக்கும் பாலையூர் திரு கிருஷ்ணமூர்த்தி அய்யர் புதல்வி சௌ. மங்களத்துக்கும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.



ஷா அண்டு கம்பெனி பிராஞ்ச் மானேஜர் ஆர். ராஜகோபால் அவர்களின் குமாரத்தி சௌ. புஷ்பவல்லிக்கும் ஆமதாபாத் அரவிந்த் மில்லைச் சேர்ந்த சிரஞ்சீவி ஏ. சேஷாத்திரிக்கும் சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடந்தது.

# பாரதி விழா

"தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்" என்று முரசறைந்த பாரதியாருக்கு இவ்வாண்டும் வழக்கம் போல் பாரதி விழா கொண்டாடினார்கள். பாரதியார் சங்கத்தின் ஆதரவில் சென்னை, தியாகராயநகர் வாணி மகாலில் இரண்டு தினங்கள் பாரதி விழா நடைபெற்றது. விழாவுக்கு டாக்டர் சிதம்பரநாதன் செட்டியார் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். கல்வி மந்திரி திரு சுப்பிரமணியம், சபாநாயகர் திரு கிருஷ்ணராவ், திரு ம. பொ. சிவஞான கிராமணியார், திரு ப. ஜீவானந்தம், திரு. கி. வா. ஜகந்நாதன், திரு டி. கே. ஷண்முகம், ஸ்ரீமதி சகுந்தலா பாரதி முதலிய பல அறிஞர்கள் விழாவில் கலந்துகொண்டு அருமையான சொற்பொழிவாற்றினர். இவ்விழாவில் பழம்பெரும் தேசபக்தர்களும் பாரதி பக்தர்களுமான திருவாளர்கள் பரலி சு. நெல்லையப்பர், ஹரிஹர சர்மா, சீனிவாசவரத அய்யங்கார், ஈ. கிருஷ்ணய்யர் ஆகியவர்களுக்குப் பாரதியார் சங்கம் விருதுகள் அளித்து, கேடயம் வழங்கிக் கௌரவித்தது.

இரண்டு தினங்கள் கோலாகலமாக நடைபெற்ற பாரதி விழாக் காட்சிகளையும் விருது பெற்ற தேசபக்தர்களையும் இந்தப் பக்கத்திலுள்ள படங்களில் காணலாம்.

போட்டோ: விச்சு

# வளையல் வேணுமா?

வளையல் வேணுமா? நல்ல
வளையல் வேணுமா?

வையத்தை ஆளும் வெண்ணிறக் கைக்கு
வளையல் வேணுமா—அம்மா
வளையல் வேணுமா?

பச்சை வளையல்! நீல வளையல்!
பளபளப்பான பட்டு வளையல்!
கண்ணைப் பறிக்கும் கண்ணாடி வளையல்
கல கல வென்று சிரிக்கும் வளையல்!

வளையல் வேணுமா—நல்ல
வளையல் வேணுமா?

வீணை மீட்டும் கைக்கு—நல்ல
வெள்ளை நிறத்து அழகு வளை!
குதித்து வரும் குட்டிப் பாப்பாவுக்கு
குங்குமச் சிவப்பு நிறத்தில் வளை!

வளையல் வேணுமா—நல்ல
வளையல் வேணுமா?

கமலாவின் கைக்குழந்தைக்கு—நல்ல
கறுப்பு வளையல் இருக்குது!
விமலாவின் நாத்திக்குப் பல
விதத்தில் இருக்கு முத்துவளை!

வனஜாவின் வளைகாப்புக்கு—வந்து
வாங்கலையோ வளையல்கள்?
பக்கத்தில் வந்து பாருங்கோ
பாங்காய்ப் 'போணி' பண்ணுங்கோ!



# மாயப் பந்து

## 25. யார் முட்டாள்?

கலா மந்திர ஜமக்காளத்தில் முன்னேறிக் கொண்டிருந்தாள். அவள் முன்பக்கமே பார்த்துக் கொண்டிருந்ததால் மால்கோஷைக் கார்கூர் இழுத்து விட்டது அவளுக்குத் தெரியவில்லை.

"அண்ணா, கார்கூர் ஒழிந்தான்! இல்லையா? இன்றைக்கு நாம் தப்ப முடியும் என்று நான் நினைக்கவே இல்லை.... ஏன் அண்ணா, அவன்...!" என்று கலா ஏதோ பேசிக்கொண்டே போனவள் பதில் வராதது



கண்டு மால்கோஷ் பக்கம் திரும்பினாள். அவன் இல்லாதது தெரிந்ததும் அவளுக்குச் 'சொரேல்' என்றது.

ஜமக்காளத்தைத் திரும்பி வந்தவழியே பறக்க விட்டாள். நாலாபக்கமும் பார்த்தாள். அப்போது அவள் பார்த்த காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது. அவள் உயரப் பறந்து கொண்டிருந்ததால் கார்கூர் மால்கோஷைத் தூக்கிச் சென்றதை நன்றாகப் பார்க்க முடிந்தது.

"ஐயோ மாலகோஷ்! என்னை விட்டு விட்டா போய்விட்டாய்? நான் இனிமேல் தனியாக என்ன செய்வேன்? உன்னை மறுபடியும் எப்படிக் கண்டு பிடிப்பேன்?" என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது முத்துமாலையிலிருந்த அவளது கை நழுவிற்று. மாலை கழுத்தில் தொங்கிற்று. ஜமக்காளம் தடால் என்று கீழே விழுந்தது. ஜமக்காளம் கீழே விழுந்த இடம் ஒரு அடர்த்தியான காடு. மிகவும் கொடிய மிருகங்கள் வசிக்கும் காடு. எதிர்பாராத விதமாகக் கீழே விழுந்ததைத் தெரிந்து கொண்டாள். மந்திர ஜமக்காளம் கீழே வந்தவுடன் அந்தச் சத்தத்தைக் கேட்டு இரண்டு சிங்கங்கள் பாய்ந்து வருவதைப் பார்த்த கலா மூர்ச்சையுற்று விழுந்தாள். ஆனால் கீழே விழும்பொழுது நல்ல வேளையாக அவளுக்கு அதிகம் காயம்படவில்லை.

* * *

மால்கோஷ் தூங்கி எழுந்தவன்போல எழுந்தான். சுற்று முற்றும் பார்த்தான். அவனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. பூமியில் மூர்ச்சையுற்று விழுந்தவன் ஒரு கட்டிலில் மெத்தையின் மேல் படுத்துக் கொண்டிருந்தான் என்றால் அவனுக்கு ஏன் ஆச்சரியம் உண்டாகாது?

அவன் படுத்துக் கொண்டிருந்த அறையின் கதவு




வெளியிலே தாளிட்டிருந்தது. அவன் இருந்த அறையிலே மற்றொரு சிறிய அறையும் இருந்தது. ஆனால் அது சற்று இருட்டாகவே இருந்தது. அந்த இருட்டு அறைக்குள் சென்று பார்த்தான். அங்கு இருந்த சாமான்களைப் பார்த்தவுடன் தான் அது மந்திரவாதியின் வீடு என்று தெரிய வந்தது. உடனே அவனுக்குத் தான் மூர்ச்சையடைந்து கீழே விழுவதற்கு முன்பு நடந்த சம்பவங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக ஞாபகம் வந்தன.

'இந்த வீட்டில் இப்பொழுது கார்குர் இருக்கிறானா, பார்க்கலாம்' என்று அறையில் உள்ள ஜன்னல் வழியாகப் பார்த்தான். ஒன்றும் தெரியவில்லை. பிறகு தான் இருந்த அறையின் கதவுகளின் இடுக்குகள் வழியாகப் பார்த்தான். அடுத்த அறையிலே பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. அறை முழுவதும் நிரம்ப மருந்துகள் வைக்கப்பட்டிருந்தன. மால்கோஷ் பார்த்த சமயத்தில் கார்குர் ஒரு பெரிய மேஜையில் பல மருந்துகளை வைத்துக் கலந்துகொண்டிருந்தான். கார்குருவுக்கு உதவியாக அவன் பக்கத்தில் இரண்டு சீடர்களும் இருந்தார்கள்.

'என் சகோதரியிடமிருந்து என்னைப் பிரித்ததற்கு அவனுக்குத் தகுந்த பாடம் கற்பிக்க வேண்டும். இந்த அறையிலேயே உள்ள மற்றொரு இருட்டு அறையில் ஒரு மந்திரக் கோலையும், மந்திரங்கள் அடங்கிய ஒரு புஸ்தகத்தையும் பார்த்தேன். அந்தப் புஸ்தகத்தில் உள்ள மந்திரங்களைப் படித்துவிட்டு அங்கு இருக்கும் மந்திரக் கோலின் உதவியால் இப்பொழுதே கார்குருவைத் தவளையாக மாறச் செய்துவிட்டு வெளியே செல்லுகிறேன்' என்று மால்கோஷ் மனத்துக்குள் நினைத்தான்.



பிறகு வெகு வேகமாக இருட்டு அறைக்குள் சென்று அந்த அறையிலே மேஜையின்மீது வைத்திருந்த மந்திரக்கோலை எடுக்கப் போனான். உடனே அந்த மந்திரக் கோல் அவனது கைகளுக்கு அகப்படாமல் நகர்ந்தது. மறுபடியும் அதை எடுக்க யத்தனித்தான். மேஜையின் மீது இருந்த மந்திரக்கோல் இப்பொழுது 'விர்' என்று மேலே பறந்து மால்கோஷின் முதுகு பக்கம் வந்தது. பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் பையன்களை முன்காலத்தில் பிரம்பினால் அடிப்பதுபோல அந்த மந்திரக்கோல் மால்கோஷின் முதுகை விடாமல் அடித்துக்கொண்டே இருந்தது. மால்கோஷ் பயந்தான். 'ஓ'வென்று அலறினான். கீழே உட்

கார்ந்தான்; ஓடினன்; படுத்துக் கொண்டான். ஒன்றும் பிரயோசனப்படவில்லை. மந்திரக் கோல் அவனை அடித்துக் கொண்டே இருந்தது. வலி பொறுக்க முடியாமல் அறையின் கதவைத் தடதடவென்று தட்டினன். விஷயத்தை அறிந்த கார்குர் கதவைத் திறந்தான். மந்திரக்கோல் மால்கோஷை அடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து "ஹா ஹா" என்று அவன் கைக்கொட்டிச் சிரித்தான்.

கார்குர் அந்த மந்திரக்கோலைத் தன் கைகளினல் பற்றிக் கொண்டு அது இருந்த இடத்திலேயே மேஜையின்மீது வைத்தான். பிறகு அவன் "மால்கோஷ்! யாரிடம் உன் குற்றத்தை மறைக்கிறாய்? நீ மறைத்தாலும் அந்த மந்திரக்கோல் மறைக்காது. என் அறையில் உள்ள மந்திரக்கோலை நீ ஏன் தொட்டாய், சொல்!" என்றான்.

உடனே மால்கோஷ், "உமக்குத் தீங்கு புரியும் நோக்கத்துடன்தான் நான் அந்த மந்திரக்கோலை எடுக்கப் போனேன். அது உண்மையே. அதுவுமல்லாமல் உங்கள் அறையிலிருந்த மந்திரக்கோலை நான் எடுத்து உபயோகிக்க நினைத்ததும் தவறே. அதற்குத் தகுந்த தண்டனையும் உடனே அடைந்து விட்டேன்" என்றான் கண்ணீர் மல்கும் கண்களுடன்.

"நீ உண்மையை ஒப்புக்கொண்டது பற்றி மிகவும் சந்தோஷம். என்னுடன்வா. வாசற் பக்கம் நிழலில் உட்கார்ந்து கொள்ளலாம். இந்தா, உன் பந்து. எனக்கு எதற்காக அது வேண்டும்?" என்று கார்குர் பந்தை மால்கோஷினிடம் கொடுத்தான். தன்னை விட்டுப் போய்விட்டது என்று நினைத்திருந்த பந்தைத் திரும்பிப் பெறவே மால்கோஷ் மகிழ்ச்சி கொண்டு கார்குருவுடன் வாசற் பக்கம் வந்து திண்ணையில் உட்கார்ந்தான்.

"மால்கோஷ்! உனது தகப்பனார் உனக்குக் கொடுத்திருக்கிறாரே, அந்தப் பந்து நீ நினைத்ததெல்லாம் சாதிக்குமா?" என்று கேட்டான் கார்குர்.

"ஆமாம். அது உண்மை. நீங்கள் எது வேண்டுமானாலும் கேளுங்கள். அதை இந்தப் பந்தின் உதவியால் நிரூபித்துக் காட்டுகிறேன்" என்றான்.

"அப்படியா? மிகவும் சந்தோஷம். இன்று பகல் சுமார் பன்னிரண்டு மணிக்கு நான் வீடு திரும்பும்பொழுது என் நிழலைக் காணவில்லை. இது ஏதோ அபசகுனம் என்று கருதுகிறேன். அந்த நிழலை உன் பந்தின் உதவியால் நீ வரவழைத்துக் கொடுக்க முடியுமா?" என்று ஆவலுடன் கேட்டான் கார்குர்.

கார்குர் கூறியதைக் கேட்டவுடன் எப்படியாவது அவனுக்கு உபகாரம் செய்து தான் அங்கிருந்து தப்பிவிட வேண்டும் என்று முடிவு செய்தான் மால்கோஷ். "இதோ அரை நொடியில் நிழலை வரவழைத்துக் கொடுக்கிறேன்" என்றான்.

பந்தை எடுத்துக் கீழே போட்டுப் பிடித்துக்கொண்டே, "ஏ பந்தே! உடனே நிழலை கொண்டு வா" என்று அவசரமாகக் கூறினன்.

கார்குர் மால்கோஷின் செய்கைகளையே கவனித்தான். பிறகு சிரித்துக் கொண்டே, "ஏ. மால்கோஷ்! நீ உனது மாயப் பந்தை உபயோகிக்கும் பொழுது நிழலைக் கொண்டு வா என்று சொன்னயே தவிர என் நிழலைக் கொண்டு வா என்று சொல்லவில்லையே. அந்தப் பந்து எப்படித் தனது காரியத்தைச் செய்து முடிக்கும்?" என்று கேட்டுவிட்டுக் கார்குர் அவன் இருந்த ஊரே அதிரும்படி 'ஹா ஹா ஹா' என்று பெரிதாகச் சிரித்தான். அதைப் பார்த்த மால்கோஷ், "ஏன் என்னைப் பார்த்து ஏளனமாகச் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"இல்லை. இல்லை. நான் ஏளனமாகச் சிரிக்கவில்லை. உன் முட்டாள்தனத்துக்காகத்தான் சிரித்தேன்" என்றான் கார்குர்.

"யார் முட்டாள்? நானா முட்டாள்?" என்று கேட்டான் மால்கோஷ்.

"ஆமாம். நீதான் முட்டாள். இல்லாவிட்டால் என் நிழல் காணமற் போய் விட்டது என்று கூறியதை நம்புவாயா?" என்றான் கார்குர். (தொடரும்)

SY 101a

# பின்னியின் காட்ஸ்வால்

உங்கள் சருமத்திற்கு சம சீதோஷ்ணநிலை யளிக்கும் அதிசயத் துணி!



"இஷ்டப்படி விளையாடலாம், குழந்தைகளே! காட்ஸ்வால் குளிரிலிருந்து பாதுகாக்கும். அணிவதற்கும் அழகாக இருக்கும்."

**காட்ஸ்வால் விசேஷ மதிப்புடையது:**

அது உயர்ந்த ரகக் கம்பளியும் பருத்தியும் கலந்து அதி ஜாக்கிரதையுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது.

கிழித்து உழைப்பதுடன் என்றும் மென்மையாக இருக்கிறது.

அது எல்லா குழந்தைகளுக்கும் ஏற்றது. மிக்க மென்மையான சருமத்தைக்கூட உறுத்தாது.

சீதோஷ்ண நிலையில் ஏற்படும் திடீர் மாறுதல்களிலிருந்து பாதுகாக்கிறது.

அது எப்போதும் பார்க்க நேர்த்தியாக இருக்கும். எந்த பருவ காலத்துக்கும் ஏற்றது.

காட்ஸ்வால் சுருங்காதென உத்தரவாதம். காட்ஸ்வால் துணியை வீட்டிலேயே சலவை செய்யலாம்.

பலவித கலர்களிலும் டிஸைன்களிலும் கிடைப்பதால் உங்களுக்கு வேண்டிய ரகத்தைத் தேர்ந்தெடுக்கலாம்.

**காட்ஸ்வாலுக்கு ஈடு எதுவும் இல்லை**

**அதிகக் குளிரிலிருந்து பாதுகாக்க பின்னியின் அங்கோலாவை அணியுங்கள்**

**இலவசம்**

படங்களடங்கிய பின்னியின் காட்ஸ்வால் புஸ்தகம். 13 நயே பைஸே ஸ்டாம்பு அனுப்பவும். டிபார்ட்மெண்ட் Y, தபால் பை 2701, சென்னை-6.



**தி பங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் லிட்.**

மானேஜிங் ஏஜெண்டுகள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிட்.

# மலைச்சாரல் மாதவி

அத்தியாயம் 55

## "குற்றவாளி யார்?"

சிவசங்கரன் வாக்குமூலம் கொடுத்து இரண்டு வாரங்கள் சென்று விட்டன. இந்த வழக்கே புது மாதிரியாக இருந்தபடியால் போலீஸாருக்குச் சற்றுக் குழப்பத்தை விளைவித்தது.

டி. எஸ். பி. சட்டர்ஜி ஒருவாறு சிவசங்கரன் குற்றவாளியாக இருக்கலாம் என்று ஊகித்திருந்தபோதிலும் இப்படித் தாமே குற்றத்தை ஒப்புக் கொள்வாரென்று எதிர்பார்க்கவில்லை. அதனால் அவர் மனம் கொஞ்சம் கனிந்து போயிருந்தது.

மேலும் புதரில் கிடந்த துப்பாக்கி ரவையின் மர்மம் என்னவென்று அவருக்குச் சரியாக விளங்கவில்லை.

சிவசங்கரனை அவரும் அமர்நாத்தும் 'பல முறை விசாரித்தும் அவர் ஒரே மாதிரி தான்' பதில் சொல்லி வந்தார். குற்றம் நடந்த தினத்தன்று தான் மொத்தம் நான்கு தடவைகள் துப்பாக்கியினால் சுட்டதாகக் கூறினார். மூன்று தடவைகள் ஆகாயத்தைப் பார்த்து வேட்டுத் தீர்த்திருந்தார். ஒரு தடவைதான் புதரை நோக்கிச் சுட்டிருந்தார். அதையே அவர் திரும்பத் திரும்பக் கூறினார். அவர் கூறுவதில் சட்டர்ஜிக்குச் சந்தேகம் ஏற்படவில்லை. துப்பாக்கியிலும் அதே அளவு ரவைகள்தான் குறைந்திருந்தன என்பதைக் கவனித்தார்.

'அப்படியானால் புதரில் ஒரு ரவை கிடந்ததே. அது எப்படி அங்கே வந்திருக்க முடியும்?' என்பது அமர்நாத்துக்கும், அவருக்கும் விளங்கவில்லை. சீனிவாச மூர்த்தி போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்த போது இதைப் பற்றி அவரை விசாரித்தார்கள்.

"மிஸ்டர், மூர்த்தி! சிவசங்கரன் கூறுவதில் எங்களுக்குச் சந்தேகம் ஏற்படவில்லை. துப்பாக்கியிலிருக்கும் ரவைகளும் அதை ஊர்ஜிதம் செய்கின்றன. ஆனால் புதரிலிருந்த ரவை எங்கிருந்து வந்ததென்று எங்களுக்குப் புரியவில்லை. உங்களுக்கு இது விஷயமாக ஏதாவது தெரியும் என்றால் அதைச் சொல்லி விடுங்கள். எனக்கும் சிவசங்கரன் குற்றமே செய்





திருக்க மாட்டாரோ என்று தோன்று கிறது'' என்றார் சட்டர்ஜி.

''இது உங்களுக்குப் புரிவதற்கு இவ்வளவு நாட்களாயிற்றே என்பதுதான் எனக்கு வியப்பாக இருக்கிறது, மிஸ்டர் சட்டர்ஜி! நான் முதலிலேயே ஊகித்து விட்டேன். புதரில் ரவை கிடந்தது என்றால் அது கருணாகரனின் உடலில் பாயவில்லை என்றுதானே பொருள்?'' என்றார் சீனிவாஸ மூர்த்தி.

''அப்படியானால் யாரோ 'ஆ' வென்று அலறிய சத்தம் கேட்டதாக இவர் வாக்குமூலம் கொடுத்திருக்கிறாரே! குண்டு மேலே பட்டிருக்காவிட்டால் கருணாகரன் கத்தியிருப்பானா? அல்லது அவன் முன்பே இறந்து போய் உடல் அங்கே கிடந்திருந்தாலும் சத்தம் போட்டிருக்க முடியாதே!'' என்றார் அமர்நாத், ஒரு கேலிப் புன்னகையுடன்.

ஆனால் சட்டர்ஜி சிரிக்கவில்லை. மௌனமாக இருந்தார்.

சீனிவாஸ மூர்த்தி அமர்நாத்தைப் பார்த்து, ''உங்கள் டி. எஸ். பி. சிரிக்கவில்லை, அமர்நாத். அவருக்கு விஷயம் புரிந்து விட்டது'' என்று கூறிவிட்டு எழுந்து சென்றார்.

அதன் பிறகுதான் அமர்நாத்துக்கும் அவர் என்ன கூறியிருக்க வேண்டும் என்பது புரிந்தது.

''எப்படியாவது இந்தக் குற்றம் செய்தவனைக் கண்டு பிடித்தே ஆக வேண்டும். இப்படிப்பட்ட பயங்கரமான குற்றத்தைச் செய்தவனைச் சும்மா விட்டால் நமது இலாகாவுக்கு அழியாத அவமானம் ஏற்பட்டுவிடும். அதை நாம் அனுமதிக்கவே கூடாது'' என்றார் டி. எஸ். பி. சட்டர்ஜி.

''இந்தக் குற்றத்தைச் செய்தது யாராக இருந்தாலும் அவன் மிகவும் சாமர்த்தியசாலி என்பதில் சந்தேகமே இல்லை'' என்றார் அமர்நாத்.

''அது சரி! முதலில் கருணாகரனின் உடலில் பாய்ந்திருந்த துப்பாக்கி ரவையையும், இந்த ரவையையும் பரிசோதனை செய்து, இரண்டும் ஒரே துப்பாக்கியிலிருந்து வெடித்திருக்கக் கூடுமா என்று பார்க்கச் சொல்லுங்கள். கருணாகரனின் துப்பாக்கியையும், சிவசங்கரனின் துப்பாக்கியையும் வெடிக்கச் செய்து அதையும் பரிசோதனை செய்து பார்த்துச் சீக்கிரம் 'ரிபோர்ட்' பண்ணச் சொல்லுங்கள். ஸி.ஐ.டி. ஆட்களிடம் சொல்லிக் கருணாகரன் இறந்த இரண்டு நாட்களுக்குள் அடிபட்டவர்கள் யாருக்காவது வைத்தியம் செய்தார்களா என்று இந்த வட்டாரத்திலுள்ள வைத்தியர்களையெல்லாம் விசாரிக்கச் சொல்லுங்கள்'' என்று மள மள வென்று உத்தரவு போட்டார் டி. எஸ். பி.

அமர்நாத் அவைகளை நிறைவேற்றி வைப்பதற்குச் சென்றார்.

* * *

அன்று மாலையே இரண்டு துப்பாக்கிகளையும் பரிசோதனை செய்து பார்த்து விட்டார்கள். பரிசோதனையில் வெளியான விஷயம் எல்லாரையும் திகைக்கச் செய்வதாக இருந்தது. கருணாகரனின் உடலிலிருந்து எடுக்கப்பட்ட துப்பாக்கி ரவை சிவசங்கரனின் துப்பாக்கியிலிருந்து வெடித்திருக்க முடியாது என்பது ஊர்ஜிதமாயிற்று. புதரில் கிடந்த ரவை சிவசங்கரனின் துப்பாக்கியிலிருந்து வெடித்திருக்க வேண்டும் என்பதும் சந்தேகமில்லாமல் நிர்ணயமாயிற்று.

டி. எஸ். பி. சட்டர்ஜிக்கும், இன்ஸ்பெக்டர் அமர்நாத்துக்கும் மிகவும் ஏமாற்றமாக இருந்தது. சிவசங்கரனைக் கைது செய்து லாக்கப்பில் வைத்ததற்காக மிகவும் மனம் நொந்தார்கள். அவரை உடனே அழைத்துவரச் சொல்லி ஆளை அனுப்பினார் சட்டர்ஜி.

சிவசங்கரனிடம் அவர்கள் விஷயத்தைக் கூறியபோது அவரால் அதைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. கருணாகரனின் முடிவுக்குத் தாமே காரணம் என்று நினைத்து நினைத்து அவர் மனத்தில் அது ஊர்ஜிதமாகிப் போயிருந்தது.

அதனால் டி. எஸ். பி. சட்டர்ஜி, "நீங்கள் அவனை ஏதும் செய்யவில்லை. அவன் முன்பாகவே இறந்து போயிருக்க வேண்டும். உங்கள் துப்பாக்கி ரவை புதரில் கிடந்தது" என்று கூறியபோது, அவரால் அதை நம்பக்கூட முடியவில்லை.

"அது எப்படிச் சாத்தியம்? கருணாகரனின் அலறலை நான் கேட்டேனே!" என்றார் சிவசங்கரன்.

அவருடைய வெகுளித் தன்மையைக் கண்டு சட்டர்ஜிக்குக் கூடப் பரிதாபம் ஏற்பட்டது. பிறகு என்ன நடந்திருக்க வேண்டும் என்பதை அவருக்கு விளக்கமாகச் சொன்னார்.

"உண்மைக் குற்றவாளி யார் என்பதைக் கண்டு பிடிப்பதற்குத்தான் உங்கள் உதவி வேண்டும், மிஸ்டர் சிவசங்கரன்! நீங்கள் நன்றாக யோசித்துப் பார்த்துச் சொல்லுங்கள். அலறல் குரல் கேட்ட உடனே நீங்கள் புதர் அருகில் ஓடினீர்களா?" என்று கேட்டார் டி. எஸ். பி. சட்டர்ஜி.

"குரல் கேட்டதும் எனக்கு உடலில் நடுக்கமும், பயமும் ஏற்பட்டன. ஒரு நிமிட நேரம் என்ன செய்வது என்று புரியாமல் திகைத்து நின்றேன். ஆனால் ஒரு நிமிஷம்தான் நின்றேன் என்று என்னால் சாதிக்க முடியாது."

"குரல் கேட்டதும் அந்த உயரமான புதரில் அசைவுகளோ வேறு ஏதாவது சத்தமோ கேட்டதா?"

"ஏதோ சுள்ளிகள் முறிவது போலவும் உலர்ந்த சருகுகளின் மேல் நடந்தால் சர சரவென்று ஒலி கேட்குமே, அது போலவும், இலேசாகச் சத்தம் கேட்டது ஞாபகம் வருகிறது. ஆனால் அந்தமாதிரி ஒலி முதலிலும் கேட்ட மாதிரி தோன்றுகிறது. எனக்கு அவை மனத்தில் தெளிவாக இல்லை."

"புதரில் வேறு யாராவது இருந்திருந்தால் நீங்கள் அருகில் செல்வதற்குள் பின்பக்கமாகச் சென்று பதுங்கிக் கொள்ள நேரம் இருந்திருக்கிறது."

"இருக்கலாம், ஆனால் நிச்சயம் சொல்வதற்கில்லை."

"வேறு எப்படியும் நடந்திருப்பதற்கில்லை, மிஸ்டர் சிவசங்கரன்!" என்றார் டி. எஸ். பி. சட்டர்ஜி.

இவைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சீனிவாஸ மூர்த்தியின் முகத்தில் களிப்புத் தாண்டவமாடியது.

"இவைகளை நீ முதலிலேயே ஊகித்திருந்தாயா, மூர்த்தி? அதனால்தான் அவ்வளவு தைரியமாக இருந்தாயா?"

"ஆமாம். நீ இவ்வளவு அவசரப்பட்டுப் போலீஸில் வாக்குமூலம் கொடுத்து விடுவாய் என்று எதிர் பார்க்கவில்லை. இல்லாவிட்டால் முன்னாலேயே கூறியிருப்பேன். தவிர நான் கூறியிருந்தாலும் நீ நம்பியிருக்க மாட்டாய். போலீஸார் கூறும் சாட்சியங்கள் என்னிடம் இல்லையல்லவா?" என்றார் மூர்த்தி.

சிவசங்கரனும் அதை ஆமோதித்தார். "இப்பொழுதுகூட என்னால் அதை நம்பமுடியவில்லையே?" என்றார்.

அந்தச் சமயத்தில் போலீஸ் ஸ்டேஷனின் வாசலில் ஏதோ கலவரமான சத்தம் கேட்டது. ஒரு போலீஸ் வண்டி வந்து நின்றதும், நாலைந்து பேர்கள் குதித்தபோது உண்டான சத்தமும், இன்ஸ்பெக்டர் அமர்நாத்தின் அதிகாரக் குரலும் கேட்டன.

"அமர்நாத்தின் குரலைக் கேட்டாலே ஏதோ முக்கியமான சம்பவம் நிகழ்ந்திருக்கிறதென்று தெரிகிறது" என்றார் டி. எஸ். பி.

அடுத்த நிமிஷம் அமர்நாத் உள்ளே வந்தார். அவர் பின்னால் கையில் விலங்குடன் அழைத்து வரப்பட்ட மணிதரைக் கண்டதும் சிவசங்கரனுக்கு மூச்சே நின்றுவிடும் போலிருந்தது.

"இது என்ன பைத்தியக்காரத்தனம்? கோவிந்தனைக் கைது செய்து வந்திருக்கிறீர்களே? எதற்காக?" என்று சத்தம் போட்டார் சிவசங்கரன்.

"அப்படிக் கேளுங்கள், மிஸ்டர் சிவசங்கரன்! என்னை அநாவசியமாக இம்சை செய்கிறார் இந்த அமர்நாத். ஒரு குற்றம் நடந்ததற்காக வரிசையாக மூன்று பேரைக் கைது செய்யும் உங்கள் அற்புதமான திறமையை மெச்சி அரசாங்கத்தில் பிரமோஷன் உடனே கொடுத்து விடுவார்கள், மிஸ்டர் அமர்நாத்!" என்று கத்தினார் கோவிந்தன். அவர் எவ்வளவு ஆத்திரப்படுகிறார் என்பது பட படவென்ற அவருடைய பேச்சிலிருந்து நன்கு தெரிந்தது.

"இரண்டு தடவைகள் ஏமாந்துதான் போனேனும். ஆனால் இந்தத் தடவை ஏமாறவில்லை, மிஸ்டர் கோவிந்தன்!" என்றார் அமர்நாத்.

டி. எஸ். பி. சட்டர்ஜியின் முகத்தில் எந்தவிதமான மாறுதலும் தென்படவில்லை. அவர் இதை எதிர்பார்த்தவராகவே காணப்பட்டார்.

## அத்தியாயம் 56

# மனம் குளிர்ந்தது

சிவசங்கரனின் வீட்டில் கலகலப்பு குடிகொண்டிருந்தது. அன்று மாதவியும் அங்கே இருந்தபடியால் எல்லோருமே உற்சாகமாகக் காணப்பட்டார்கள்.

திடீரென்று சிவசங்கரன் சீனிவாஸ மூர்த்தியைப் பார்த்து, "கோவிந்தன் என்ன செய்கிறான்?" என்று கேட்டார்.

"நேற்றிரவு அவன் குற்றத்தை ஒப்புக் கொண்டு விட்டானாம்" என்றார் சீனிவாச மூர்த்தி.

"அது சரி! கோவிந்தன்தான் குற்றவாளி என்பதை எவ்வாறு நிரூபிக்க முடிந்தது?" என்று வியப்புடன் கேட்டாள் சுபாஷிணி.

"இது தெரியாதா உனக்கு? கோவிந்தன் எல்லாக் காரியங்களையும் மிகவும் சாமர்த்தியமாகவே செய்தான். ஆனால் ஒரு தவறு மாத்திரம் செய்தான். சிவசங்கரனின் துப்பாக்கியினால் பட்ட காயத்தை ஒரு நாள் மறைத்து வைக்க முடிந்தது. பிறகு ரணம் அதிகமாகி விடவே டாக்டர் நாயரிடம் வைத்தியம் செய்து கொண்டிருக்கிறான். அப்போதே அவர் கொஞ்சம் சந்தேகப்பட்டாராம். 'இது துப்பாக்கிக் காயம் மாதிரி இருக்கிறதே' என்று கூடச் சொன்னாராம். ஆனால் கோவிந்தன் இல்லை என்று சாதித்திருக்கிறான். டாக்டருக்குக் கருணாகரனையும் கோவிந்தனையும் பற்றி எந்தவிதமான சமாசாரமும் தெரியாது. ஆகவே இதை மறந்து விட்டார்.

"ஸி. ஐ. டி. உத்தியோகஸ்தர் விசாரித்தபோதுதான் அவருக்குத் தாம் சந்தேகப்பட்டது ஞாபகம் வந்திருக்கிறது. கோவிந்தனுக்குத் தாம் வைத்தியம் செய்ததைக் கூறியிருக்கிறார். உடனே கோவிந்தனை விசாரணை செய்திருக்கிறார்கள். அவன் காயம்பட்ட தினத்தை மாற்றி முதலில் பொய் சொல்லியிருக்கிறான். டாக்டரிடம் போலீஸார் விசாரித்தது அவனுக்குத் தெரியாது.

"பிறகு இன்னொரு விஷயமும் வெளியாயிற்று. அச்சுதன் மலையிலிருந்து இறங்கி வந்ததைக் கண்ணால் பார்த்ததாக ஒரு சாட்சி சொன்னான் அல்லவா? அவன் உண்மையில் கோவிந்தனின் ஆள் என்பதும், கோவிந்தன் அடிக்கடி அவனுக்குப் பணம் கொடுப்பதுண்டு என்பதும் தெரியவந்தன. கடைசியில் அவனை ரொம்பவும் மிரட்டி விசாரித்த பிறகு தன்னைக் கோவிந்தன்தான் போய் மலை அடிவாரத்தில் இருக்கச் சொன்னதாகவும், மலையிலிருந்து யார் இறங்கி வந்தாலும் உடனே தன்னிடம் வந்து சொல்ல வேண்டுமென்று கூறியிருந்ததாகவும், அதற்காகப் பத்து ரூபாய் பணம் கொடுத்ததாகவும் ஒப்புக் கொண்டான்.

"மேலும் வேலாயுதத்தைத் தூண்டித் தூண்டி விசாரித்ததிலிருந்து, ஆலையில் ஏற்பட்ட குழப்பங்களுக்கே கோவிந்தன் தான் காரணம் என்பதும் தெரிந்தது. கருணாகரனிடம் விஜயராகவன், ஜயந்தி இருவரும் பிரியமாக இருந்ததனால் அவன் உள்ளத்தில் வெகு நாட்களாகவே பொறாமை வளர்ந்து வந்திருக்கிறது. ஜயந்தியைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாவிட்டாலும், ஆலையிலாவது தனக்குப் பங்கு வேண்டுமென்று ஆசைப்பட்டான். கருணாகரன் மீது விஜயராகவனுக்கு வெறுப்பு ஏற்படுவதாகத் தெரியவில்லை. ஆகவே அச்சுதனும், அவனும் சண்டை போட்டுக் கொண்ட சந்தர்ப்பத்தைப் பார்த்துக் கருணாகரனைத் தீர்த்து விட்டான். அச்சுதன் மீது சந்தேகம் உண்டாகும் என்பது அவனுக்குத் தெரியும். எதிர்பாராத விதமாகச் சிவசங்கரனும் இதில் அகப்பட்டுக்கொண்டு விட்டார்" என்றார் சீனிவாசமூர்த்தி.

மாதவியின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் சிந்தின. சுபாஷிணி அவளுடைய கரத்தைப் பிடித்துக் கொண்டு தேறுதல் கூறினாள்.

"நான் ஜயந்தியை நினைத்துக் கொண்டேன், சுபாஷிணி. அதனால்தான் கண்ணீர் வந்து விட்டது. அவள் எப்படிப் பட்டவள்? அவளிடம் கூட எனக்குக் கோபம் வந்ததை நினைத்தால் துயரமாக இருக்கிறது. அவளைப் பார்த்து நான் மன்னிப்பு கேட்டுக் கொள்ள வேண்டும்" என்றாள் மாதவி.

"ஆகட்டும்! நாம் இருவருமே விஜயராகவன் வீட்டுக்குப் போகலாம்" என்றார் சிவசங்கரன்.

"நாங்களும் நாளை ஊருக்குப் புறப்படலாமென்றிருக்கிறோம்" என்றார் சீனிவாசமூர்த்தி.

"அப்படி உடனே அனுப்பி விட மாட்டேன் மூர்த்தி. இங்கே சமீபத்தில் நடக்கப் போகும் திருமணத்தை நடத்தி வைத்து விட்டுத்தான் நீங்கள் கிளம்ப வேண்டும்" என்றார் சிவசங்கரன்.

மாதவி இதைக் கேட்டுத் தலையைக் குனிந்து கொண்டாள்.

"மனம் ஒத்து நடக்கும் இந்தத் திருமணத்தைப் பார்க்க எங்களுக்குக்

கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!'' என்றாள் சுபாஷிணி.

''நேரமாகி விட்டது'' என்று புறப்பட்டாள் மாதவி. சிவசங்கரனும் அவளைக் கொண்டு போய் வீட்டில் சேர்த்து விட்டு வருவதாகக் கிளம்பினார்.

மலைச்சாரல் பங்களாவை அடையும் வரை இருவரும் மௌனமாக நடந்தார்கள். இருவருடைய நெஞ்சமும் நிறைந்திருந்தது.

மலைப்பாதையைப் பார்த்ததும் மாதவி, ''இந்தப் பாதையில் நாம் எத்தனை தடவைகள் கைகோத்துக் கொண்டு ஏறி யிருக்கிறோம்? எவ்வளவு ஆனந்தமாகப் பொழுது போக்கி யிருக்கிறோம்? நமக்கு அளவில்லாத இன்பத்தை அளித்த அதே மலைப் பாதை இப்போது முடிவில்லாத துன்பத்தை அளிப்பதாக அல்லவா மாறி விட்டது? எனக்கு இதைப் பார்த்தாலே துயரம் உண்டாகிறது'' என்று கூறினாள்.

''வாழ்க்கையில் பொதிந்து கிடக்கும் ஒரு மகத்தான உண்மையை நீ இப்போது மறைமுகமாகக் கூறி விட்டாய், மாதவி. நாம் இன்பம் என்று நினைப்பதே துன்பமாக மாறுவதைத் தினந்தோறும் பார்த்துக் கொண்டே இருக்கிறோம். ஆனாலும் நமக்கு அது விளங்குவதில்லை. உண்மையில் பார்த்தால் இந்த மலைப்பாதையில் துன்பமோ இன்பமோ இருக்கிறதா? நம்முடைய மனத்தில் தானே இருக்கின்றன? நம்முடைய மனோ விகாரங்களை உலகத்துடன் சம்பந்தப் படுத்திப் பார்ப்பதாலேயே இன்பமும், துன்பமும் வெளிப் பொருள்களில் இருப்பதாகத் தெரிகிறது. இரண்டும் நம் உள்ளத்தில்தான் இருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்வதுதான் வாழ்க்கையில் நாம் கற்கவேண்டிய முதல் பாடம்'' என்றார் சிவசங்கரன்.

அவருடைய வார்த்தைகளில் பொதிந்திருந்த உண்மையை உணர்ந்துகொண்ட மாதவியின் மனம் கனிந்தது. உடனேயே அவளுக்கு மலைப்பாதையின் மீது ஏற்பட்டிருந்த வெறுப்பு மாறியது. ''கொஞ்ச தூரம் மலைமீது ஏறிப் போய் வருவோமா?'' என்று கேட்டாள் மாதவி.

இருவரும் கைகோத்துக் கொண்டு மலைப்பாதையின் மீது ஏறிச் சென்றார்கள். இலேசான மேகத்திரை ஒன்று, பன்னீர் தெளிப்பது போல் தண்ணீர்த் துளிகளை வாரி இறைத்து மலைச்சாரலைக் குளிரச் செய்தது. மாதவி, சிவசங்கரன் இருவருடைய மனமும் வெளிச் சூழ்நிலையைப் போலவே தண்ணென்று குளிர்ந்து அமைதி யடைந்தது.

ஜயந்தியின் நிலைமை விவரிப்பது மிகவும் கடினம். அவள் கிட்டத்தட்ட ஒரு துறவியின் மனநிலையை அடைந்திருந்தாள். சிவசங்கரன் குற்றவாளி அல்ல என்று தெரிந்து கொண்டபோது அவளுக்குப் பெரிதும் மன நிம்மதி உண்டாயிற்று.

சிவசங்கரனும் மாதவியும் சௌக்கியமாக இருக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்தாள்.




விஜயராகவன் அவளைப்பற்றி முதலில் மிகவும் கவலையடைந்திருந்தார். நாளடைவில் ஜயந்தி கலைமகளின் சந்நிதியில் அமைதியும், திருப்தியும் அடைவதைக் கண்டு அவருக்கு மன நிம்மதி ஏற்பட்டது. அவள் தனக்கு விவாகம் வேண்டாம் என்று மறுத்தபோது அவர் வற்புறுத்த வில்லை. அவளுக்கு ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து ஜயந்தியுடைய மனம் விடுபட்டபோது பரிசுத்தமாகிவிட்டது. விருப்பு வெறுப்பு இவற்றுக்கு அவள் நெஞ்சில் இடமில்லாமல் போய்விட்டது. அந்தப் பயங்கரச் சம்பவம் ஜயந்தியின் வாழ்க்கையை அடியோடு மாற்றி அமைத்து விட்டது. உலகத்தின் மீது அவள் கொண்டிருந்த நம்பிக்கை சிதறிப் போனபடியால் மறுபடியும் சாதாரண வாழ்க்கையில் அவளுக்கு ஈடுபாடு ஏற்பட வில்லை.

இலக்கியப் பூஞ்சோலையில் அவள் எப்போதும் உலாவி வந்தாள். அதற்கும் மேலாக ஆத்மா என்பது என்ன? அதற்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு என்ன? என்பதையெல்லாம் தெரிந்து கொள்ள அவளுக்கு ஆவல் ஏற்பட்டது. பல தத்துவப் புத்தகங்களைப் படிப்பதும், அவற்றிலிருந்து குறிப்புக்கள் எழுதிக் கொள்வதுமே அவளுக்குப் பொழுது போக்காயிற்று. முதலில் தன் வேதனையை மறப்பதற்காக இந்தப் புத்தகங்களைப் படித்து வந்தாள். பிறகு அதிலேயே இன்பம் காணத் தொடங்கினாள்.

நாளடைவில் ஜயந்தியின் மனமும் பரிபூரண அமைதி பெற்றது. (முற்றும்)

# தலைமுறை சொத்து

இந்தியாவெங்குமுள்ள ஆயிரக்கான வீடுகளிலும் தகப்பனாரிடமிருந்து பையனுக்கு ஒரு வெஸ்ட் எண்ட் வாச்சு தலைமுறை சொத்தாக வழங்கப் படுகிறது. வெஸ்ட் எண்ட் வாச்சு, ஒரு தலை முறைக்கு மேற்பட்ட காலம் உழைப்பு அளிக்கும் நம்பகத் தன்மை வாய்ந்தது. மற்றும் வெஸ்ட் எண்ட் வாச்சுகள் இந்தியாவின் கடும் சீதோஷ்ண நிலைகளைச் சமாளிப்பதற்கென்றே கைதேர்ந்த சுவிஸ் தொழில் நிபுணர்களால் தயாரிக்கப் பட்டுள்ளன. மட்டு மின்றி, நம்பகமான சேவைக்கு ஒவ்வொரு வாச்சும் முழு உத்திரவாதம் கொண்டுள்ளது. ஒரு வெஸ்ட் எண்ட் வாச்சில் முதலீடு செய்யுங்கள்.



ஸோவார் பிரைமா
10½''' லைன்
ஸ்டீல்...ரூ. 178

# WEST END WATCH CO.

BOMBAY · CALCUTTA

WEW-57-3 ATM

வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

## மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ வாயில் நறுமணம்!
✓ ஒளிவீசும் பற்கள்!
✓ சொத்தைகுறையும்!




வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள்.

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பற்களை 2 நிமிஷம் பிரஷ் கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல் நுனி நோக்கி தேய்க்கவும்.

*மேற்கண்ட முறையை இன்றே கையாளுங்கள்!*

பெரிய சைஸ் வாங்கி பணத்தை மிச்சப்படுத்துக

**பல்டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**

---

ருசி இல்லை வாசனை இல்லை முற்றிலும் சுத்தமானது




சுவஸ்திக் மெடிஸனல் காஸ்டர் ஆயில் சுகாதார முறைப்படி தயாரிக்கப்பட்டிருக்கிறது. எப்பேர்ப்பட்ட வயிற்றுக் கோளாறுகளுக்கும் நிச்சயமான நிவர்த்தி அளிக்கும் மருந்தாகக் கருதி டாக்டர்கள் இதை சிபாரிசு செய்கிறார்கள்.

உங்கள் மருந்து வியாபாரியிடம் விசாரியுங்கள்

## சுவஸ்திக் மெடிஸனல் காஸ்டர் ஆயில்

ஸ்ரீ சுவஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்

நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 31. நேயர் கடிதம்

"தனக்கு மிஞ்சித்தான் தான தருமம்."

"அறஞ்செய விரும்பு" (அறம்-தருமத்தை; செய—செய்ய; விரும்பு-நீ ஆசைப்படு)

ஆகவே, தருமம் செய்யவேணுமென்று ஆசை யிருத்தல் வேணும். செய்யாவிட்டால் பரவாயில்லே. செய்துதானுகவேண்டுமென்ற நிர்ப்பந்தமுமில்லே.

அட, அப்படி இருக்கமுடியுமா? செய்ய வேண்டும் என்பதற்காகத்தானே இவ்வாறு சொன்னது?

நல்லது. நமக்குள் சண்டை எதற்கு? நீ தருமத்தைச் செய். அதை ஏற்கவும் ஒருவர் வேண்டுமே? அந்தப் பொறுப்பு எனக்கு இருக்கட்டும்.

அட சட்! இப்படியா அர்த்தம் சொல்வது?

ஐயா! ஐயா! கோபிக்காதீர்கள். ஆறுவது சினம்.

பேஷ்! பேஷ்! உபதேசபரமான மொழிகளெல்லாம் பிறநுக்குத்தானு? ஏன் அவனவனுக்கும்.....

அது சமயோசிதம் போல் அவனவனுக்கும் விட்டு விடவேண்டிய விஷயம்.

இவ்விதமாக அர்த்தம் செய்வோரை என்னவென்பது?

'இரு மலம்-அறுநீர்' என்று எங்கோ சொல்லி இருக்கிறதாம். தினம் இரண்டு வேளே மலங் கழிப்பதும், ஆறுதரம் சிறுநீர் கழிப்பதும் ஒருவன் ஆரோக்கிய நிலேயில் இருப்பதைக் குறிக்கும் என்று இதற்குப் பொருளாம்.

அப்படியே இருக்கட்டும்.

ஒரு வேளேயாவது தாராளமாகக் காலேயில் எழுந்ததும் மலம் போக வேண்டாமோ?

உம்.......

அதுதானே இல்லே. இந்த 'கான்ஸ்டிபேஷன்' இருக்கிறதே! அது பெரிய தொல்லே. பெரிய தொல்லே.

கடிதம் 268ல் புஷாவல் நண்பர் தமது 'கான்ஸ்டிபேஷன்' மல பந்தத்தைப் பற்றி எழுதுகிறுர். கடிதம் என்பதை விடக் கட்டுரை என்பது பொருந்தும். சராசரியில் பக்கத்துக்கு 40 வரிகள் வீதம் ஏழு பக்கங்கள் எழுதி யுள்ளார். எட்டாவது பக்கத்திலும் சில வரிகள். யாவும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருப்பவை. தாள்களின் இடது புறத்தில் ஒரு அங்குலம் ஒதுக்கி விடப்பட்ட இடத்தில் மறுபடியும் மடக்கி எழுதியும் நிரப்பி யுள்ளார். இவ்வளவு பெரிய புராணத்தின் விஷயம் யாதெனில் நாட்பட்ட மலபந்தம்—அவ்வளவுதான்.

இதற்காகச் சென்ற 14 வருஷங்களில் இந்த நண்பர் என்ன என்ன வைத்தியங்கள் செய்து கொண்டார், இவரது தினசரி பழக்க வழக்கங்கள் என்ன என்பதை விவரிக்கிறுர். இவற்றின் சாராம்சம் வருமாறு:

காலேயில் விழிப்புற்றதும் கடவுளே ஒரு நிமிஷம் சிந்திப்பார். பிறகு கைகால்களே மடக்கி, நீட்டி, உடலே வளேத்து, பிறகு நிமிர்த்தி — இப்படி யெல்லாம் ஏதோ சில அப்பியாசங்களேச் செய்வார். ஒரே நிமிஷம் பல் தேய்ப்பார். பிறகு 2 டம்ளர் வெந்நீர் குடிப்பார். பிறகு வெற்றிலே, பாக்கு, சுண்ணும்பு மற்றும் ஒன்று ஆகிய நான்கையும் மென்று குதப்பத் தொடங்குவார். குதப்பிக் கொண்டே கூண்டிலடைபட்ட சிங்கத்தைப் போல இங்கு மங்குமாக நடைபோடுவார். இப்படி தவங் கிடந்த பின் சிரமத்துடன் ஒரு தரம் மலம் போகும். மிகவும் கெட்டியாயுமிராது, இளகியுமிராது. சாதாரணமாகப் போகும்.

நண்பர் ஒரு விஷயத்தைச் சொல்ல மறந்து விட்டார். அதையும் சேர்த்து நான் சொல்லி விடுகிறேன். காலேயில் எழுந்ததும் எழுந்திருக்காததுமாக "ஓ, பொழுது புலர்ந்ததா? இன்று நல்லபடி எப்படியாவது வெளிக்குப் போக வேண்டுமே?" என்ற கவலேதான் முதன் முதலில் இவர்மனத்தில் தோன்றும். கடவுள் நிவேவெல்லாம் அப்புறம்தான்.

இப்படியாகத்தானே மாபெரும் முயற்சிகளுக்குப் பிறகு காலேக்கடன் முடிந்த பிறகாவது மனிதனுக்கு நிம்மதி யுண்டா? அதுவும் இல்லே.

இன்னும் கொஞ்சம் போக வேண்டுமோ என்ற கவலே. வயிற்றில் சொல்லத் தெரியாத ஒரு வகை சங்கடம். மறுபடியும் முயன்ருல் வெளிக்குப் போகாது. காற்றுத்தான் பிரியும். பிறது ஏதாவது ஆகாரம்—காப்பி போன்றது கொஞ்சம் சாப்பிட்டால் சற்று நேரத்துக்கெல்லாம் இந்த வயிற்றிலுள்ள சொல்லத் தெரியாத வகைப்பட்ட சங்கடம் குறையும். (இது ஒரு முக்கியமான தடயம்.)

சாப்பாடு, ஆபீசுக்கு யாத்திரை என்பதுதானே தினசரியில் அடுத்த திட்டம்! சாப்பிட்டால் வயிற்றிலுள்ள சங்கடம் சிறிது குறையும். படிப்படி

யாகக் குறைந்து கொண்டே வரும். ஆனால் சாப்பாடு கழிந்த ஒரு மணி நேரம் வரையில் குறிப்பிட்ட காரியத்தில் மனத்தை நிலைநிறுத்தி வேலை செய்ய முடியாது. பிறகு யாவும் சரியாகி விடும். (இதுவும் மற்றொரு தடயம்)

பிற்பகல் 1-30 மணிக்குப் பசி எடுக்கும். ஆனால் சாப்பிட்டால் இரவு பசிக்காதே என்று எண்ணெய்ப் பசை போன்றவை இன்றி வறட்சி மிக்கதான பலகாரத்தைச் சாப்பிட்டு மோரைக் குடிப்பார். மாலை வீடு திரும்பினால் காப்பி சாப்பிடுவார். மறுபடியும் வெளிக்குப் போக வேண்டுமென்ற எண்ணம்; அதற்கான வீண் முயற்சி. பிறகு ஒன்றிரண்டு மைல் நடந்து வருவார். பிறகு இராப் போசனம். வயிற்றிலுள்ள சங்கடம் குறையும். இரவு பத்து மணி முதல் காலை ஆறு மணி வரை நல்ல தூக்கம். கனவு முதலிய காரணங்களினால் இந்தத் தூக்கத்துக்கு ஒருவித பங்கமும் ஏற்படாது. (இதுவும் ஒரு முக்கியமான தடயம்.)



‘தனக்கு மிஞ்சித்தான் தான தருமம்’ என்னும் பழமொழியை நண்பர் அறியாவிட்டாலும் அவருடைய குடல்-அதிலும் பெருங் குடல் நன்றாய் அறிந்திருக்கிறது.

குடலில் ஓரளவு மலம் இருந்தே தீர வேண்டும். இதை நிறுத்திக் கொண்டு உபரியாக உள்ளதைத்தான் வெளியே செல்லக் குடல் சம்மதிக்கும்.

ஹங்கரி பவல்—என்றும் கிரீடி பவல் என்றும் மேல்நாட்டு வைத்தியம் பயின்றவர் சொல்லும் நிலையில் நண்பரின் குடல் இன்று இருந்து வருகிறது. ‘‘கொண்டு வா, கொண்டு வா ; இன்னும் கொண்டு வா’’ என்று கேட்கிறதாம் இந்தக் குடல். எதை? ஆகாரத்தை ; ஜீரணமான ஆகாரத்தின் கழிவுப் பொருளை. உபரியாகக் கழிவுப் பொருள்கள் சேருமானால்தான், தனக்குத் தேவையானது பூர்த்தியாகி மிஞ்சுமானால்தான், இக்குடல் மலத்தை வெளியிடச் சம்மதிக்கும்.

ஆகாராதிகள் சாப்பிட்டால் வயிற்றின் சங்கடம் குறைந்தது என்று நண்பர் தெரிவிப்பதன் நுட்பமான தத்துவம் இப்போது விளங்குகிறதல்லவா? இவற்றைத்தான் முக்கியமான தடயம் என்று மூன்று இடங்களில் குறிப்பிட்டிருக்கிறேன். இதை ஒரு வகைப் பசி என்று அழைத்தது எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது, பாருங்கள்!] பசி தீரும் வரை குடல் என்ன செய்யும்? தன்னிடம் வந்து சேரும் பொருள்களை வெளியே போக விடாமல் பிடித்து நிறுத்தத்தான் செய்யும். இது இயற்கையின் போக்கு. இதை நண்பர் உணரவில்லை. ஏற்கும் ஆகாரங்களோ வறட்சி மிக்கவை, ஏன்? நெய், எண்ணெய்ப் பசையுள்ளவை குடலில் அதிகக் காற்று சேரக் காரணமாகுமாம். மலம் நெகிழப் போதுமான பசையாவது வேண்டாமா? போதுமான மலம் இல்லை என்பதால் குடல் ஜீரணத்துக்குப் பின் ஏற்படும் கழிவுப் பொருள்களைத் தடுத்து நிறுத்திக் கொள்கிறதல்லவா? அப்போது அங்கு தடைபட்டு நிற்கும் பொருள்களிலுள்ள திரவாம்சத்தைக் குடல் உறிஞ்சிக் கொள்ளவாய்ப்புஉண்டாகிறது. இரவில் பொருள் உறிஞ்சப்படுவதால் அதில் கரைந்து நின்றிருந்த வாயு விடுபடுகிறது. மலம் மேலும் வறட்சி பெற்றுக் கெட்டியாகி விடுகிறது. அளவிலும் கனத்திலும் குறைந்து விடுகிறது. மலத்துக்காக ஏற்பட்ட குடலின் பசி அதிகமாகிறது. ஜீர்ணமான பொருளின் கழிவுகளைத் தடுத்து நிறுத்திக்கொள்ளும் முயற்சியில் குடல் முன்னிலும் அதிகத் தீவிரமாக முனைகிறது. குடலைப் பிழிந்து ஹடத்தால் மலத்தைப் போக்க நண்பர் முயலுவது இன்னலை அதிகப் படுத்தக் காரணமாகுமே யன்றி, தவிர்க்க உதவாது. இதற்கு நண்பர் செய்யத் தக்கது என்ன? முதலாவதாகப் பலாத்காரத்தில் வெளிக்குப் போக முயல்வதை நிறுத்தி வி. வேண்டும். ஜலாம்சம் அதிகமுள்ள கீரைகள் போன்றவற்றைத் தாராளமாகச் சாப்பிட வேண்டும். மலம் எளிதில் நெகிழ்வதற்குக் கழிவுப் பொருள்களில் நெய்மை வேணுமாதலின் எள்ளுப் பொடி போன்ற சாதனங்களையும், நெய், பால் ஆகியவற்றையும் அளவோடு கூட்டி உண்ண வேண்டும். காராமணிக்காய் உளுத்தம் வடை போன்றவற்றைச் சாப்பிட்டால் ஜீரணமான பொருள், கழிவுப் பொருள் என்னும் நிலையையடையும்போது ‘புஸ— புஸ—’ என்று உப்பிக் கழிவுப் பொருளின் அளவையும் பளுவையும் அதிகமாக்கி மலம் தாராளமாகப் போகச் செய்யும்.

# ஜம்ஷெட்பூர் வழியே

அரசாங்க எஃகுத்தொழிற்சாலைகள் மூன்றையும் நிர்வகிக்க விருக்கும் நானூறு இள இன்ஜினீயர்கள் அயல் நாடுகளில் பயிற்சி பெறச் செல்லுமுன் ஜம்ஷெட்பூரில் ஆறுவாரம் தங்குவார்கள்.

இந்திய எஃகுத் தயாரிப்பின் அடிப்படை முறைகளை இவர்கள் எஃகு நகரமாகிய ஜம்ஷெட்பூரில் அறிந்து கொள்வார்கள். அத்துடன் டாடா ஸ்டீல் நிபுணர்களிட மிருந்து பல தொழில் நுணுக்கங்களையும் கேட்டறிவார்கள்.

வருங்கால எஃகு உற்பத்தியில் ஈடுபட விருக்கும் இவ்வின்ஜினீயர்களை வர வேற்பதில் ஜம்ஷெட்பூர் பெருமை கொள்கிறது.

## டாடா ஸ்டீல்

**இரு மில்லியன் டன் உற்பத்திக்கு**

தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்.

# கன்றின் குரல்



வேதனையே உருவாகக் கட்டிலின் அருகில் உட்கார்ந்திருந்தாள் சுந்தரி. வாடி வதங்கிக் கிடக்கும் தன் மதலையைக் காண அவள் பெற்ற வயிறு குமுறியது. சுருண்டு நெற்றியில் புரளும் அழகிய கேசம். எட்டு நாட்களாகப் படுக்கையிலேயே கிடப்பதால் சடை பிடித்திருந்தது. வண்டு போன்ற அழகிய கண்கள் சோர்ந்து செருகிக் கிடந்தன. தளதளக்கும் அந்தப் பசும்பொன் மேனி ஜுர வேகத்தால் கன்றிப் போயிருந்தது. கண்களில் கண்ணீர் மாலை மாலையாக வழியக் குழந்தையின் கைகளை வருடியவாறு அமர்ந்திருந்தாள்.

குழந்தைக்கு இலேசாக உடம்பு காய்ந்த அன்று சுந்தரி கை வைத்தியமாக, நெற்றிக்குப் பற்றுப் போட்டு, கஷாயமும் கொடுத்தாள். மறுநாளும் ஜுரம் நிற்காமல் போகவே, டாக்டரிடம் காண்பித்தான் சுந்தரியின் கணவன் சிவகுமார். டாக்டரும்தான் ஒரு வாரமாக வைத்தியம் செய்கிறார். உடம்பு குணமாவதற்குப் பதில் அதிகமாக ஆகிக் கொண்டிருந்தது. இன்று அவராலும் ஒன்றும் சொல்ல முடியாத நிலைக்கு வந்து விட்டது. இருபத்தி நான்கு மணி நேரம் கெடு வைத்து விட்டுப் போய் விட்டார். சுந்தரியின் பெற்றோருக்குத் தந்தி பறந்தது. தங்கள் வாழ்க்கையின் 'வாழ்விக்க வந்த செல்வம்' படுத்து விட்டது கண்டு சுந்தரியின் மனம் சொல்லொணா வேதனையுற்றது. 'கண்ணன் உடம்பு தேறி எப்போதும்போல் தவழ்ந்து விளையாட மாட்டானா?' இதை நினைக்கவே இயலவில்லை சுந்தரிக்கு. திடீரென்று உள்ளத்தில் ஒரு மின்சாரத் 'தாக்குதல் போன்ற ஓர் எண்ணம்.

ஒருவேளை பசுவின் சாபமாக இருக்குமோ?

பயம் நெஞ்சைக் கவ்வ, சிந்தனை பின்னோக்கிச் சென்றது.

* * *

சுந்தரிக்குப் பத்தொன்பதாவது வயது ஆனபோதே

அவன் தந்தை பரகராமன் அவனுக்கு வரன் பார்ப்பதில் முனைந்தார். பல வரன்களைப் பார்த்தார். அவர் இஷ்டப்படி ஒரு வரனும் இருக்கவில்லை. குணவதியான தம் பெண்ணை நல்ல வரன் ஒருவனுக்கு மணம் முடிக்க வேண்டுமென்பது அவர் எண்ணம். அவர் விரும்பிய வரனாக இருந்த சிவகுமாரைப் பரகராமனுக்கு அறிமுகப்படுத்தினார் அவர் நண்பர். 'கைநிறைய' சம்பாதிக்கும் மருமகனாகப் பரகராமனுக்கும் 'கண்நிறைந்த' கணவனாகச் சுந்தரிக்கும் தோன்றிய சிவகுமார் சுந்தரியின் மணாளனானான்.

மணமான இளம் தம்பதிகள் சென்னையில் தனிக் குடித்தனம் வைத்து மிக இன்பமாகவே வாழ்ந்து வந்தனர். சிவகுமார் மனைவியின் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலும், சுந்தரி கணவனின் கருத்தறிந்து காரியம் செய்வதிலுமாக இருவரும் சந்தோஷ வாழ்க்கையையே நடத்தி வந்தனர். மணமான மூன்று ஆண்டுகளுக்குப் பிறகே சுந்தரி கருத்தரித்தாள்.

"அம்...மா!"

சிந்தனையைத் தடை செய்தது கொட்டிலிலிருந்து கத்திய பசுவின் குரல்.

சுந்தரி கருத் தரித்தபோது நல்ல ஆரோக்கியத்துக்குப் பசும் பால்தான் அதிகம் கொடுக்க வேண்டுமென்று டாக்டர் கூறினார். ஒரு வாரத்துக்குள் ஒரு நல்ல நாட்டுப் பசுவை வாங்கி வந்து கொட்டில் அமைத்துக் கட்டி விட்டான் சிவகுமார். இளந்துளிர் போன்ற அழகான சிவந்த பேனியும், நெற்றியிலே வளைந்து காணும் வெண்ணிற ரோமங்களுடன் கூடிய அந்தப்பசு, இளம்பிறையுடன் கூடிய சிவந்த அந்தி வானம் போல் அழகாக இருந்தது. அதற்குக் 'காமு' என்று பெயர் வைத்தனர் தம்பதிகள்.

அன்று மாலை மாடு கறக்க வந்த ஆதிமூலம், "என் சாமீ! கன்றுக்குட்டி இப்பவே இம்மாம் பெரிசு இருக்குதே; மாடு கருக்க மறந்துடுமே" என்றான்.

சிவகுமாருக்கு இது விஷயம் ஒன்றும் தெரியாது. பசு கன்றுக்கு உஷணமாயிருந்தது. இரண்டு வேளை கறந்து காண்பித்தனர். பாலும் கணிசமாகவும், ருசியாகவும் இருந்ததால் வாங்கி விட்டான்.

"என், ஆதி! இது எவ்வளவு நாட்கள் கறக்கும்?" என்று கேட்டான் சிவகுமார்.

"நாலு மாசம், தப்பினால் அஞ்சு மாசம் கறக்கும், சாமீ!" என்றான் ஆதிமூலம்.

சிவகுமார் அருகிலிருந்த சுந்தரியைப் பார்த்து விஷமமாகச் சிரித்துக் கொண்டே "ஐந்து மாதத்துக்குப் பிறகு இந்த அம்மாவும் ஊருக்குப் போவாங்க" என்றான்.

சுந்தரி நாணத்தால் முகம் சிவக்கப் பொய்க் கோபத்துடன் கணவனை நோக்கி விட்டு, "ஐயா சும்மாச் சொல்கிறார், ஆதி" என்றாள்.

நாட்கள் நகர்ந்தன, மாதங்கள் மறைந்தன. இரண்டு நாட்களாகக் காமு இடைவிடாமல் கத்திக் கொண்டே இருந்தது. பாலும் மிக மிகக் குறைவாகக் கறந்தது. சிவகுமாருக்கும் சுந்தரிக்கும் காரணம் ஒன்றும் புரியவில்லை. காமு கத்தும்போதெல்லாம் வைக்கோலைப் போட்டும் பிண்ணாக்கை நீரில் கரைத்தும் வைத்தனர். ஆனால் அது ஆகாரம் எடுக்காமல் கத்திக் கொண்டே இருந்தது.

மாலை ஆதி வந்தவுடன், சுந்தரி, "ஆதி! காமு ஏன் எப்போதும் கத்திக்கொண்டே இருக்கிறது. வெடர்னரி டாக்டரிடம் கொண்டு போய்க் காண்பித்து விட்டு வருகிறாயா?" என்று கேட்டாள்.

ஆதி அசட்டு சிரிப்பு சிரித்துக் கொண்டே, "அம்மா, இதுக்கு டாக்டர்கிட்டே போக வேணும். சினைக்குக் கத்துகிறது" என்றான்.

அப்புறம்தான் சிவகுமாருக்கும் சுந்தரிக்கும் சற்று மன நிம்மதி ஏற்பட்டது.



சில நாட்களுக்கெல்லாம் வளைகாப்புக்கு என்று சுந்தரியை அவள் பெற்றோர் ஊருக்கு அழைத்துச் சென்று விட்டனர்.

சுந்தரி ஊருக்குச் சென்றபின் நாட்களை ஒவ்வொன்றாய் நகர்த்தித் தள்ளிக் கொண்டிருந்தான் சிவகுமார். ஆதிமூலம் தான் காமுவைக் கவனித்து வந்தான். சுந்தரி மாத்திரம் ஒவ்வொரு கடிதத்திலும் காமுவைப் பற்றி விசாரிக்கத் தவறுவதில்லை.

''தந்தி'' என்றதும் பதறி வந்து வாங்கிக் கொண்ட சிவகுமார் தனக்கு ஒரு 'பேசும் பொற் சித்திரம்' பிறந்திருக்கும் நற்செய்தியைக் கண்டு ஆனந்தக் கூத்தாடினான்.

குழந்தை பிறந்த செய்தியைக் கேட்ட ஆதிமூலம், ''சாமீ! நம்ம காமு டொரிக் கன்றுதான் போடும்'' என்றான்.

''எப்படி ஆதி உனக்குத்தெரியும்? காமு சினை ஆகியே மூன்று மாதம் தானே ஆகிறது?'' ஆச்சரியத்துடன் கேட்டான் சிவகுமார்.

''வீட்டிலேயும் கர்ப்பமாயிருந்து அதே வீட்டிலே மாடும் சினையானால் ஒன்று ஆணானால், மற்றது பெண்ணாகத்தான் பிறக்கும் என்று பெரியவங்க சொல்லுவாங்க!'' என்றான் ஆதிமூலம்.

சிவகுமாருக்கு இதுவும் மகிழ்ச்சி அளிக்கும் செய்தியாகவே இருந்தது. அவன் எதிர்பார்ப்பதும் டொரிக் கன்றைத்தானே?

இந்தாம் மாதம் தாயையும், சேயையும் சென்னையில் கொண்டு வந்து விட்டனர் சுந்தரியின் பெற்றோர்கள்.

காமுவின் உடலில் ஏற்பட்டிருக்கும் மாறுதல்களைக் கண்ட சுந்தரி 'தாயினும் சாலப் பரிந்து' அந்தப் பசுவுக்குச் சிசுருஷைகள் செய்து வந்தாள். அடிக்கடி கொட்டிலுக்குச் சென்று அதன் கழுத்தை வருடிக் கொடுப்பாள். வெள்ளி, செவ்வாய்க்கிழமைகளில் பூஜை செய்யும்போது குழந்தை கண்ணனையும் இடுப்பிலேயே வைத்துக் கொண்டு அதற்கு மஞ்சள், குங்குமம் இடுவாள். தாய்மை பொங்கும் கண்களுடன் காமு கண்ணனை நோக்கும் போதும், கண்ணன் தன் சின்னஞ்சிறு கைகளால் அதன் நெற்றியைத் தொடும் போதும் சுந்தரி பூரித்துப் போவாள்.

அன்று கொட்டிலிலிருந்து காமு 'அம்...மா, அம்...மா!' என்று ஈனமாகக் கத்திக் கொண்டிருந்தது. சுந்தரிக்கும், சிவகுமாருக்கும் வீட்டில் இருப்பே கொள்ளவில்லை.

கொட்டிலுக்கும் உள்ளுக்குமாக அலைந்து கொண்டிருந்தார்கள்.

காமுவின் ஈனமான குரலைக்கேட்ட சுந்தரி, ''ஆதி, இன்னும் எவ்வளவு நாழியாகும்?'' என்று கேட்டாள்.

''அம்மா, சினைக்கன்று இல்லீங்களா? அது தான் கொஞ்சம் சிரமப்படுதுங்க. பகலுக்குள் போட்டு விடும்'' என்றான்.

நேரமாக ஆகப் பசுவும் கன்றுமாகப் பிரதட்சிணம் செய்யக் குழந்தையுடன் கொட்டிலருகிலேயே வந்து நின்று விட்டாள். மனிதர்களைக் கண்ட கூச்சத்தாலும் வேதனையாலும் பசு தவித்துக் கொண்டிருந்தது.

ஆயிற்று! ஆதி பரபரப்புடன் வேலையில் மூழ்ந்தான். சிவகுமாரும் கன்றைக் காண்பதற்காக ஓடோடியும் வந்தான்.

ஆதி உதட்டைப் பிதுக்கியதைக் கண்டதும் சுந்தரி, ''என்ன ஆதி! காமுவுக்கு என்ன?'' என்று பதறினாள். ''காமுவுக்கு ஒன்றுமில்லீங்க. கன்றுதான் சேங்கன்றாகப் போச்சு'' என்றான் ஏமாற்றக் குரலில்.

சிவகுமாருக்கும் இது பெருத்த ஏமாற்றமாக இருந்தது. ''எந்தக் கன்றானால் என்ன? காமு நல்லபடியாக இருந்தால் நமக்கு சரிதான்'' என்றாள் சுந்தரி.

ஒரு வாரமாயிற்று. காலைப் பால் கறக்க வந்த ஆதி தயங்கித் தயங்கி சிவகுமாரின் அறை வாசலில் வந்து நின்றான். சிவகுமாருக்குக் காமு 'சேங்கன்றாக' ஈன்றதில் ஏற்பட்ட ஏமாற்றம் இன்னும் தணிந்தபாடில்லை.

''சாமீ!''

''என்ன, ஆதி?''

''ஒரு விசயம். கோபித்துக் கொள்ளாமல் இருந்தீங்கன்னா சொல்லுகிறேன்.''

''சொல்லு!''

''நம்ம காமுவோடு கூடவே சினையாயிருந்த கோடி வீட்டுப் பசுவும் நேற்று கன்று போட்டதுங்க. ஆனால் அதுவும் சேங்கன்று தாங்க'' என்று ஆதி முடிப்பதற்குள் சிவகுமார், ''என் ராசியிலேயே பிறந்திருக்கிறாங்களும் அந்த அய்யரும்'' என்றான்.

அவன் பேசிய தோரணையில் கொஞ்சம் தைரியமடைந்த ஆதி, ''சாமீ! நீங்க எதுக்கும் கவலைப்படாதீங்க. அந்த ஐயா கன்றுக் குட்டியை விலைக்கு வந்தால் விற்றுவிடச் சொன்னாருங்க. இரண்டு கன்றுகளையும் ஜோடியாக விற்றால் கொஞ்சம் கூடுதலாகக் கூடக் கேட்கலாமுங்க'' என்று இழுத்தான் ஆதி.

அவனுக்கு இந்த வியாபாரம் செய்தால் கமிஷன் கிடைக்குமே!

கன்றை விற்று விடுவதா? ஒரு கணம் யோசித்த சிவகுமார், ''ஏன் ஆதி, கன்று இல்லாமல் பசு பால் கறக்காதே!'' என்றான்.

''அதுக்கென்னங்க, நான் ஒரு கன்றுக் குட்டி பண்ணிக் கொண்ணாந்துடறேன்!'' என்றான், தான் வந்த காரியம் நிறைவேறும் என்ற நம்பிக்கையுடன்.

பசுவையும் கன்றையும் பிரிக்க மனமில்லாவிட்டாலும் பணத்தாசை சிவகுமாரையும் பற்றிக் கொண்டது. எனவே, அரைகுறையாகச் சம்மதித்து விட்டான்.

மாலை கையில் வைக்கோல் கன்றுடன் வந்தான் ஆதி. காரணம் தெரியாத சுந்தரி, ''எதற்கு அந்த பொம்மைக் கன்றுக் குட்டி?'' என்று கேட்டாள்.

சிவகுமாரே தீர்மானமான குரலில் கன்றை விற்கப் போவதைப் பற்றிக் கூறினான். சுந்தரி எவ்வளவு மன்றாடியும் சிவகுமார் பிடிவாதமாக இருந்து விட்டான். ஆதியும், இரண்டு நாட்களில் பசு மறந்துவிடும் என்று சமாதானம் கூறினான். கொட்டிலை விட்டுக் கன்றை அழைத்துக் கொண்டு போனதும் கன்றும், பசுவும் கதறிய கதறலைக் கேட்ட சுந்தரி, 'ஓ' வென்று வாய்விட்டே அழுது விட்டாள். காமு அன்று முதல் ஆகாரமே எடுக்காமல் கத்திக் கொண்டிருந்தது.

ஆம்! அன்று இரவுதான் கண்ணனுக்கும் ஜுரம் கண்டது: பசுவின் சாபத்தால் தன்னை விட்டுக் கண்ணன் பிரிந்து போய் விடுவானோ?

அடிவயிற்றிலிருந்து ஏதோ ஒன்று மேலெழும்பி நெஞ்சை அடைப்பது போலிருந்தது.

மாலை நான்கு மணி! இன்னும் பதினான்கு மணி நேரம் நல்லபடியாகப் போக வேண்டும்.

"அம்மா....!"

ஆதியின் குரல் கேட்டு சிந்தனை கலைந்தது. என்ன என்பதற்கு அடையாளமாக அவனைப் பார்த்தாள்.

"காமு மடி நிறையப் பால் வைச்சிக்கிட்டுத் திருட்டுத்தனம் பண்ணுதும்மா. கிட்டப் போனால் உதைக்குது" என்றான் ஆதி.

ஒரு வாரமாகக் குழந்தை படுத்து விட்டதால், அந்தக் கவலையில் அவள் காமுவைப் பார்க்கவே போகவில்லை? ஆதி சொன்னதும் சோர்ந்து கிடக்கும் தன் குழந்தையை ஒரு முறை பார்த்துவிட்டு மெல்ல எழுந்து கொட்டிலுக்குச் சென்றாள்.

"அம்...மா!" சுந்தரியைக் கண்டவுடன் உடல் குலுங்கக் கத்தியது காமு.

காமுவின் பரிதாபகரமான குரலைக் கேட்டதும் நெஞ்சில் துக்கம் அடைக்க அதன் அருகில் போனாள். தீனி எடுக்காததாலும், கன்றின் பிரிவாலும் அதன் நீண்ட பெரிய உடம்பு எலும்புக்கூடாகி இருந்தது.

அருகில் வந்த சுந்தரியை நீர் பெருகும் கண்களுடன் அண்ணாந்து பார்த்தது. பிறகு மூலையில் கிடக்கும் வைக்கோல் கன்றையும் பார்த்துக் கண்ணீர் பெருக்கியது. அதன் பார்வை, தன் குறையைச் சுந்தரியிடம் முறையிடுவதுபோலிருந்தது.

மனுவிடம் நீதி கோரிய பசுவுக்கு மனு தீர்ப்பளித்தது போல் சுந்தரிக்கும் விதி தீர்ப்பளித்து விடுமோ?

நெஞ்சம் பதறக் குழந்தையின் அருகில் ஓடிவந்தாள். சிலையாக அமர்ந்து விட்டாள். ஜுர வேகத்திலும் லேசாக வாய் திறந்தபடி கிடந்தது குழந்தை. மழலை பேசும் கொவ்வைக்கனிச் செவ்வாய் வறண்டு தோல் உரிந்திருந்தது.

கண்ணன் மழலைச் சொல்லால் "அம்மா!" என்று அழைப்பதாக தோன்றியது சுந்தரிக்கு. குழந்தையை ஊன்றிக் கவனித்தாள்.

"அம்..மா!"

கண்ணன் கூப்பிடவில்லை. கூப்பிட்டது யார்?

மறுபடியும் ஒரு ஒலி!

இப்போது அம்மா என்று அல்ல!

"அம்....மே!"

கன்றின் குரல்!

மேலும், மேலும் அதே ஒலி விசுவரூபமெடுத்தது. உள்ளத்திலே எதிரொலிக்கும் அந்தக் குரல் அவள் பயத்தைப் பன்மடங்காக்கியது.

பிரமை பிடித்த கண்களுடன் கண்ணனை உற்று, நோக்கினாள். கண்ணன் முகத்தினூடே கன்றின் முகம் தோன்றியது. தன் நிலை மறந்து தடாலென விழுந்து விட்டாள். மருந்து வாங்கி வரச் சென்றிருந்த சிவகுமார் வீட்டின் அருகே வரும் போது, காரிலிருந்து வந்த சுந்தரியின் பெற்றோரும் வண்டியிலிருந்து இறங்கி வந்தனர்.

"சுந்தரி!" சிவகுமாரின் குரலுக்குப் பதில் ஒன்றும் வராததால் பீதி படர்ந்த முகத்துடன் எல்லோரும் உள்ளே விரைந்து சென்றனர்.

கட்டிலருகில் அலங்கோலமாய் விழுந்து கிடக்கும் சுந்தரியைக் கண்டவுடன் பாய்ந்து சென்று பெண்ணை மடியில் கிடத்திக் கொண்டு முகத்தில் நீரைத் தெளித்தாள் பார்வதி.

மயக்கம் தெளிந்த சுந்தரி தாயாரைக் கண்டவுடன் "அம்மா" என்று அலறித் துக்கம் தொண்டையை அடைக்க கண்ணன் இருந்த பக்கம் கையை நீட்டியவாறு திரும்பினாள். சிவகுமார் கவலையே உருவாய் மனைவியைப் பார்த்த வண்ணம் கைகளைப் பிசைந்தவாறு நின்று கொண்டிருந்தான்.

"போங்கள்; இங்கே நிற்காதீர்கள். நீங்கள் இங்கிருந்தால், காமுவையும் கன்றையும் பிரித்தாற் போல், என்னையும் கண்ணனையும் பிரித்து விடுவீர்கள்."

வெறி பிடித்தவள் போலக் கத்திவிட்டு மறுபடியும் மயங்கி விழுந்தாள் சுந்தரி

விவரம் புரியாத பரசுராமனும், பார்வதியும் பயத்துடன் சிவகுமாரை நோக்கினர்.

திகிலுடன் நின்றிருந்த சிவகுமார், காமு செங்கன்று ஈன்றதையும், தான் அதை விற்று விட்டதையும் பரபரப்புடன் கூறினான்.

இதைக் கேட்ட பார்வதி, "இளங்கன்றை இவ்வளவு சீக்கிரம் தாயிடமிருந்து பிரிக்கலாமோ? நாம் என்ன பால் விற்று வியாபாரம் செய்பவர்களா? சென்ற முறை வந்தபோதே காமுவைப் பார்த்தேன். அது 'ஆட்டு ஈத்து' மாடு. மறுபடியும் சீக்கிரத்தில் சினையாகிவிடும். அப்போது இதை விற்றிருக்கலாமே!" என்று அங்கலாய்த்தாள்.

அடுத்த நிமிடம் அங்கு நிற்காமல் வெளியே ஓடினான் சிவகுமார்.

* * *

இரவு எட்டு மணி!

"சுந்தரி! கன்றைக் கொண்டு வந்து விட்டேன்!" என்று கூவிக் கொண்டே உள்ளே ஓடி வந்தான் சிவகுமார்.

சுந்தரி உள்பட எல்லோரும் பரபரப்பாகத் தோட்டத்துக்கு ஓடினர். வாசற்படிகளை ஒரே தாண்டாகத் தாண்டிக்கொண்டு துள்ளிக் குதித்துக் கொட்டிலுக்கு ஓடியது கன்று.

தாயின் மடியை குடித்தவாறு வாலை ஆட்டியது. தன் கன்றைத் திரும்பவும் கண்டுவிட்ட சந்தோஷத்தில் அதன் தேகமெங்கும் நக்கிக் கொடுக்க மெல்லிய 'ஹூங்'காரம் செய்து கொண்டு கட்டுத் தறியில் இருந்தவாறு சுற்றிச் சுற்றி வந்தது காமு. இந்தக் கண் கொள்ளாக் காட்சியைக் கண்டு சிவகுமார் பிரமித்து நின்று விட்டான். சுந்தரியோ உணர்ச்சிப் பெருக்கால் விம்மி விம்மி அழுதே விட்டாள்.

"மிஸ்டர் சிவகுமார்! என்ன குழந்தை அருகில் ஒருவரையும் காணோம்!"

டாக்டரின் குரல் கேட்டு எல்லோரும் உள்ளே வந்தனர். "சிவகுமார்! இப்போது குழந்தைக்கு ஜுரம் குறைந்திருக்கிறது. புரண்டும் படுக்கிறான். இனிமேல் பயமில்லை. இப்போது ஒரு ஊசி போடுகிறேன். இரவு இந்த மருந்தை நேரம் தவறாமல் கொடுத்து வாருங்கள். நாளைக் காலை ஜுரம் இறங்கி விடும்" என்று கூறினார் டாக்டர்.

மலைபோல் வரவிருந்த துக்கம் பனிபோல் மறைந்து விட்ட ஆறுதலில் கண்ணனின் பிஞ்சு முகத்தைத் இரண்டு கைகளாலும் தடவிக்கொடுத்தாள் சுந்தரி.

## குமரி முதல் இமயம் வரை 4

# குருவாயூர்



குருவாயூர் என்னவோ சின்னஞ்சிறிய ஊர்தான்; ஆயினும், ஸ்தல விசேஷமுள்ள ஊராகும்; இந்தக் 'குருவாயூரப்பன்' கோவில் ஒன்றினால்தான் இவ்வூருக்குப் பெருமையும் கூட்டமும். கோவிலும் சிறியதுதான். இச்சிறிய கோவிலினுள்ளே காட்சியளித்திடும் இந்த 'அப்ப'னைத் தரிசித்திடக் கூடி நிற்கும் பெருங் கூட்டத்தையும், அவர்களின் பக்திப் பரவசத்தையும் எப்படிக் குறிப்பிடாமல் இருக்க முடியும்?

குருவாயூரிலிருந்து சாலக்குடிக்குச் செல்வோம். அதற்கு முன்னால் ஒரு முக்கியமான இடத்தைப் பற்றி இப்பொழுது தெரிந்து கொள்வோம்:



“இம்பர் வாழ்வின் இறுதிகண் டுண்மையின்
இயல்பு ணர்த்திய சங்கரர்......”

என்று மகாகவி பாரதி பாடிப் புகழ்ந்திருக்கும் ஆதி சங்கரர் அவதரித்த புண்ணிய பூமியாம் காலடிக்குச் செல்லும் பாக்கியம் கிடைத்தது. பெரியாற்றங்கரையின் மீது இருக்கின்ற ஒரு அழகிய இடத்தில் அவர் அவதரித்த இடம் இருக்கிறது. அந்த இடத்தில் ஒரு சமாதி இருக்கிறது. அவருக்கென ஒரு ஆலயமும், சாரதாம்பாள் ஆலயமொன்றும் அங்கே இருக்கின்றன. பக்கத்தில் அவர் பூஜித்து வந்ததாகச் சொல்லப்படும் கிருஷ்ணர் கோவிலும் இருக்கிறது. அந்த ஆலயத்தின் முகப்பில் இரு புறங்களிலும் தமிழ் மொழி பேசும் மக்கள் வசிக்கும் இல்லங்கள் வரிசையாக இருக்கின்றன. இந்த இடமும் - சொத்துக்களும் மைசூரில் உள்ள சிருங்கேரி மடத்துக்குச் சொந்தமாம். அம் மடத்தைச் சேர்ந்த ஒருவர் இங்கே மேற்பார்வையாளராகப் பணி செய்கிறார். ஆதிசங்கரரைப் பற்றிப் பல கதைகள் சொல்லப்படுகின்றன. ஒவ்வொரு ஸ்தலத்துக்கும் 'ஸ்தல புராணம்' இருப்பது போல, ஆதி சங்கரர் அவதரித்த இந்த ஸ்தலத்துக்கும் எத்தனையோ ஸ்தலக் கதைகள் இருக்கின்றன!

இந்த நாட்டில் வருவதற்கு முன்பும் சரி, வந்த பின்பும் சரி. இங்கு ஏற்பட்ட மகிழ்ச்சி ஆரவாரங்களுக்கும், ஏச்சு எக்காளங்களுக்கும் அளவில்லை!



சாலக்குடியிலிருந்து சித்தூர் பிளாக்குக்கு நாங்கள் புறப்பட்டோம். அந்த மார்க்கத்தில் எங்கு பார்த்தாலும் செங்கொடி மயந்தான்! பல்லாயிரம் செங்கொடிகளின் சிவப்பு மயப் பேரொளியால் நகரம் முழுவதுமே சிவந்திருந்த காட்சியை எப்படி வர்ணிப்பது!

சித்தூர் பிளாக்கின் தலைமை ஸ்தலமான கொழிஞ்சாம்பாறை என்ற ஊருக்குக் காலையில் போய்ச் சேர்ந்தோம்! அன்று அந்தப் பஞ்சாயத்து எல்லையைச் சேர்ந்த கிராமத் தலைவர்களின் கூட்டம் ஒன்று இவ்வூரில் உள்ள உயர்நிலைப் பள்ளி கட்டடத்தில் நடைபெற்றது. மொத்தம் இருபத்தைந்து பேர்களுக்கு மேல் இந்தக் கூட்டத்தில் கூடியிருக்கவில்லை. இந்தக் கூட்டம் முடிந்ததும் நாங்கள் பல கிராமங்களுக்குச் சென்றிருந்தோம். சித்தூர் பகுதியில் வசிப்பவர்களில் பெரும்பாலோர் தமிழர்களே. இங்கு வாழ்கின்ற மலையாளிகளும் தமிழ்மொழி நன்றாகப் பேசுகிறார்கள். இந்தப் பகுதியில் நெல், பருத்தி, நிலக்




கடலை முதலிய பயிர்கள் சாகுபடி செய்யப்படுகின்றன. இந்தப் பகுதியில் உள்ள தமிழர்கள் தாங்கள் தமிழ் நாட்டுடன் சேர முடியவில்லையே என்று வருத்தமுற்றிருப்பது நன்றாகத் தெரிந்தது. புதூர் கிராமத்தில் உள்ள ஸ்ரீ அப்புக் கவுண்டருடன் பேசிக்கொண்டிருந்த போதும், மற்றவர்களுடன் பேசிக் கொண்டிருந்தபோதும் அவர்களின் இந்த உணர்ச்சியைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிந்தது.

மொழி உணர்ச்சி இருக்கட்டும். கேரள நாட்டில் சமுதாய நலத் திட்டம் எப்படி வேலை செய்கிறது என்பதைப் பற்றிக் கொஞ்சம் ஆராய்வோம்.

ஒவ்வொரு பிளாக் அலுவலகத்துக்கும் அழகிய கட்டடம் கட்டப்பட்டிருக்கிறது. சில இடங்களில் கிராம சேவகர்களுக்கும் வீடுகள் கட்டப்பட்டுள்ளன. பிளாக்குகளில் அலுவலகக் கட்டடங்கள் அநேகமாக எல்லா இடங்களிலும் நல்ல இடங்களில் அமைந்துள்ளன. மக்களால் இலவசமாக அளிக்கப்பட்ட இடங்களிலேதான் பிளாக்குகளின் அலுவலகக் கட்டடங்களும் கிராம சேவகர்களுக்கான வீடுகளும் அமைந்திருக்கின்றன.

இங்கேயுள்ள கிராம சேவகர்கள் எல்லாம் தங்கள் பகுதிகளில் மையமான இடங்களில் 'ஆபீஸ்' நடத்துகிறார்கள்!

அப்பளாம் (மலையாளத்தில் பப்படம்) தயார் செய்வது - சுண்ணாம்புக் காளவாய் போடுவது - மூங்கில் பாய் - கூடை முடைவது போன்ற சிறு சிறு கைத்தொழில்களில் ஈடுபட்டிருக்கும் சாமான்ய ஆண்கள்—ஸ்திரீகளுக் கெல்லாம் தாராளமாகக் கடன் தொகைகள் வழங்கப்பட்டிருக்கின்றன. இந்தத் திட்டத்தின் கீழ் அளிக்கப்படுகின்ற கடன் உதவியே சாமான்ய மக்களை அதிகமாகக் கவர்ந்திருக்கிறது என்றாலும், அதனால் அதிகமான பயனை அனுபவிக்கும் பல பேர்களையும்- அவர்களின்

கைத்தொழில்களையும் குறிப்பிடாமல் இருக்க முடியாது. கூட்டுறவுத் துறையில் முன்னேற்றம் பெற வேண்டுமென்ற உணர்ச்சி அடி யெடுத்து வைத்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இங்கு மங்குமாகக் கூட்டுறவு விவசாய சங்கங்கள் சில பிளாக்குகளில் தலையெடுக்க ஆரம்பித்துள்ளன. எங்கெல்லாம் முடியுமோ, அங்கெல்லாம் அருகில் ஓடுகின்ற நதிகள் மூலம் பம்புசெட் மூலம் தண்ணீர் இறைத்துச் சாகுபடி செய்வதற்கு வேண்டிய சகாயங்களைத் திட்ட நிர்வாகம் செய்து தந்திருக்கிறது.

கதர் அபிவிருத்தித் துறையில் இங்கே உள்ளவர்களுக்கு—மேலிடத்திலிருந்து அடித்தளம் வரையிலும் உள்ளவர்களுக்கு நம்பிக்கை இருப்பதாகச் சொல்ல முடியாது.

“கதர் விலை அதிகமாக இருக்கிறது; எப்படி அதை வாங்கி அணிய முடியும்?” என்கிறார்கள் பிளாக் அபிவிருத்தி நிர்வாக ஊழியர்கள். ‘காந்தி கிராம’த்தில் சமுதாயக் கல்வி அமைப்பாளர் பயிற்சி பெற்று வந்திருக்கும் கல்வி அமைப்பாளர் கூட இங்கு வந்தவுடன் கதர் அணிவதையே விட்டுவிட்டார்கள்.

குடிசைத் தொழில்களை வளர்ப்பது மூலந்தான் ஆயிரக்கணக்கான பேர்களுக்கு உப வருமானத்துக்கு வழி செய்ய முடியும் என்பதை நமது சர்க்கார் ஒப்புக் கொண்டு வேலை செய்து வருகிறது. கனரகத் தொழில் வளர்ச்சியுடன், சிறு தொழில்களும் குடிசைத் தொழில்களும் பரவலாக வளர்ச்சி பெற்றால்தான் நமது நாட்டின் பொருளாதாரம் ஸ்திரமாக இருக்க முடியும். ஆனால் குடிசைத் தொழில்களில் முக்கிய இடம் பெற்றிருக்கும் கதர் அபிவிருத்தித் தொழிலில் நம்பிக்கை சிறிதுமின்றி அலட்சியமாய்ச் செயல்படும் போக்கு விபரீதமானதென்றே துணிந்து கூறுவேன்.

சமுதாய நலத் திட்டத்தைப் பற்றிய பிரசாரம் இங்கே எதிர்பார்த்த பலனை அளித்திருப்பதாகச் சொல்வதற்கில்லை.

மாதர்கள், பள்ளிச் சிறுவர் சிறுமிகளை இப்பிரசாரம் ஓரளவு எட்டியிருக்கிறது என்பது உண்மையே; தங்களுக்குச் சர்க்கார் உதவி செய்யப் பணம் செலவழிக்க முன்வருகிறது என்ற அளவுக்கே, இப் பிரசாரம், பிற்பட்ட சமூகத்தாரை ஒரு வரம்பு வரை எட்டியிருக்கிறது. மத்தியதர வகுப்பைச் சேர்ந்த பெரும்பான்மையான ஆண்களையும் பெண்களையும் இந்தப் பிரசாரம், இந்த ராஜ்யத்தில், இன்னமும் எட்டியிருப்பதாகத் தோன்றவில்லை.

ஆனால் சாலக்குடிப் பகுதியில் நடைபெற்றுள்ள மூன்று முக்கிய வேலைகளை நேயர்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

1. வெட்டிலப்பாறாவில் உள்ள திருச்சூர் ஜில்லா மாஜி ராணுவத்தினரின் கூட்டுறவுக் காலனி. இந்தக் காலனி மலைச் சாரலில் அமைந்துள்ளது. நூறு கஜத்துக்குக் கீழே சாலக்குடி நதி ஓடுகிறது. ஆயிரம் ஏக்கரா நிலங்களைக் கொண்டது இந்தக் குடியேற்றக் காலனி. சுற்றிலும் சர்க்கார் காடுகள் இருக்கின்றன. இங்கே வீடுகள் எழுப்பிக் கொண்டிருக்கின்றன. இருநூறு குடும்பங்களை இங்கே குடியமைக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது. குடியேறியுள்ள பலர் நிலங்களைத் திருத்திச் சாகுபடியில் ஈடுபட்டிருக்கிறார்கள். இங்கே குடியேறும் ஒவ்வொருவருக்கும் நாலு ஏக்கர் நிலம், 750 ரூபாய் மான்யம், 1300 ரூபாய் கடன். இவை தரப்படுகின்றன. நிலம் அவர்களுக்குச் சொந்தம்; கடனை மட்டும் இருபது தவணைகளில் திருப்பித் தந்துவிட வேண்டும். இந்தக் காலனி 1953-ல் ஆரம்பிக்கப்பட்டது. இங்கே ஒரு ஆயுர்வேத ஆஸ்பத்திரியும் பள்ளிக்கூடமும் இருக்கின்றன.

இந்தக் காலனியின் நிர்வாகம் ஒன்பது அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு கமிட்டியின் மூலம் நடைபெறுகிறது. வீடு கட்டிக் கொள்ள, மாடு வாங்க, விவசாயம் செய்ய, இங்கே குடியேறியவர்களுக்குச் சகாயம் தரப்படுகிறது.

2. அழிக்கோடு என்ற கடற்கரையில் உள்ள இடத்தில் மீன் பிடித் தொழிலுக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள குளமும்—மீன் உலர்த்தும் கொட்டகைகளும் அரிய சாதனைகளே.

3. பால் வற்றிப்போகும் கறவை மாடுகளுக்கு ஊட்டம் தருவதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் — தும்பூருமுழி என்ற இடத்திலுள்ள பண்ணையையும் குறிப்பிட விரும்புகிறேன். இன்னும் எத்தனையோ காரியங்களைத் திட்ட நிர்வாகம் செய்திருக்கிறார்கள்.

சமுதாய நலத் திட்ட வேலைப் பகுதிகளில் எல்லாம் மின்சார விஸ்தரிப்புக்காகப் பல லட்ச ரூபாய்கள் செலவிடப்பட்டிருக்கின்றன.

காய்கறித் தோட்டங்களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற பிரசாரமும், இந்தத் துறையிலான வேலைகளும் இங்கே ஒவ்வொரு பிளாக்கிலும் நிறைய நடைபெறுகின்றன. பல இடங்களில் புதிய ரோடுகள் போடப்பட்டிருக்கின்றன. குடிநீர்க் கிணறுகள் வெட்டப்பட்டுள்ளன.

“பள்ளிக்கூடக் கட்டடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன” என்ற செய்தியைப் பாலக்காடு பகுதியில்தான் நாம் கேட்க முடியும். சமீப காலம் வரை சென்னையுடன் சேர்ந்திருந்த காரணத்தால் நமது ராஜ்யத்தில் உள்ளது போன்ற நிலைமையே இப்பகுதியிலும் இருக்கிறது. நமது ராஜ்யத்தில் ஒவ்வொரு பிளாக்கிலும் புதிய பள்ளிக்கூடக் கட்டடங்கள், திட்ட நிர்வாகம் ஏற்பட்டவுடன்தான் கட்டப்பட்டிருக்கின்றன. அதே போல, பாலக்காடு பகுதியிலும் (இப்போது கேரள ராஜ்யத்துடன் சேர்ந்துள்ளது) பல பள்ளிக்கூடக் கட்டடங்கள் கட்டப்பட்டுள்ளன. இந்தப் பகுதியில் புது நகரத்தில் உள்ள ‘பிரதம ஆரோக்கிய நிலையம்’—ஆறுகளில் கட்டப்பட்டுள்ள இரண்டு பெரிய தாம்போதிகளையும் பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

திட்ட நிர்வாகப் பகுதிகளில் ஆரம்பிக்கப்பட்டு, உருப்படியாகப் பணியாற்றி வரும் உற்பத்திப் பயிற்சி நிலையங்களில், ‘ஏராளமாகப் பணம் விரயம் செய்யப்படுகிறது’ என்று என்னிடம் ஒரு நண்பர் மிகவும் ஆவேசமாகக் குறிப்பிட்டார். அத்துடன் அவர் நின்றுவிடவில்லை! அவர் சொன்னதாவது:

“அன்றாடம் அவசியப்படும் பொருள்களை உற்பத்தி செய்தால்தான், அவ்வித உற்பத்தித் துறையில் தொழில் நுணுக்கப் பயிற்சி

**பத்மினி** கூறுகிறார்: "எப்பொழுதும் நான் உபயோகிப்பது தூய, வெண்ணிற லக்ஸ் டாய்லெட் சோப்!"

பாரதக் கலைச் செல்வியான பத்மினி மிகவும் சுறுசுறுப்பான நட்சத்திரம். எனினும், மணம் கமழும், தூய, வெண்ணிற லக்ஸ் டாய்லெட் சோப்பை உபயோகித்து தமது மேனியை மென்மையுடனும் மழமழப்புடனும் வைத்திருக்க அவர் மறந்து விடுவதில்லை.

லக்ஸ் டாய்லெட் சோப்பை நீங்களே உபயோகித்துப் பாருங்கள். அதி விரைவிலேயே அதன் பேரில் உங்களுக்கும் பற்றுதல் ஏற்பட்டுவிடும்.

## லக்ஸ் டாய்லெட் சோப்




சினிமா
நட்சத்திரங்களின்
அழகுசாதன சோப்

LTS. 543-50 TM

அளித்தால்தான், திட்ட நிர்வாகம் பண விரயத்தைத் தடுக்க முடியும்.

மரவேலை-கொல்லு வேலை போன்ற கைத் தொழில்கள் மூலம் உற்பத்தி செய்யப்படும் பொருள்களை இரண்டு ரகமாகப் பிரிக்கலாம் :

1. ஆடம்பரப் பொருள்கள், அதாவது தமது அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்ள நினைப்பவர்கள் மட்டுமே வாங்கும் பொருள்கள்.

2. ஒருதரம் வாங்கப்படுவதே அதிக காலத்துக்கு உழைப்பதின் காரணமாக, அடிக்கடி தேவைப்படாத அல்லது வாங்கப் படாத பொருள்கள். எனவே இந்தத் தொழில்களில் விஞ்ஞான ரீதியான வெறும் தொழில் நுணுக்கப் பயிற்சி மட்டும் அளித்து விட்டால் போதும்.

அதிக விலையில் மரம் வாங்குவதும், உற்பத்திப் பொருள் விற்பனையில் அதிகச் செலவு செய்வதும், பயிற்சி நிலையங்களுக்காக அதிக நிர்வாகச் செலவு செய்வதும் சகிக்கவே முடியாத பண விரயம்தான் !''

இந்த அன்பரின் பெயரை நான் அவர் விருப்பப்படியே வெளியிடவில்லை ! அவர் மிகவும் நல்ல மனிதர். தேச பக்தியுடையவர், இந்தத் திட்ட வேலைகள் எல்லாம் சீராகவும் சிக்கனமாகவும் நடைபெற்று, இவை மூலம் மக்கள் வாழ்க்கையில் 'புது வாழ்'வின் ஒளி வீச வேண்டும் என்ற உணர்ச்சியுடன் இருப்பவர் ! ஆயினும், அவர் இந்த உற்பத்தி, பயிற்சி நிலையங்களின் செயல் திட்டம், நோக்கம், வரம்பு ஆகியவற்றைப் பற்றிய விவரங்களை நன்கு அறிந்து கொள்ளவில்லை.

எந்தப் பயிற்சி அளிக்கும் நிலையத்திலும், கூடவே உற்பத்தி வேலையும் நடைபெறுகிறது. பயிற்சி பெறும் மாணவர்கள், தொழில் திறமையைக் கொஞ்சம் கொஞ்சமாக, அந்தக் குறிப்பிட்ட தொழிலின் சகல அம்சங்களிலும், பெறுகிறார்கள். எனவே, உற்பத்தி செய்கின்ற போக்கிலேயேதான் அவர்கள் பயிற்சி பெறுகிறார்கள் ! ஆகையால் உற்பத்தி மூலமன்றி வெறும் கைத்தொழில் அளிப்பது என்பதற்கே இடமில்லை ; இங்கே உற்பத்தியும்-பயிற்சியும் பிரிக்க முடியாத சம்பந்தம் பெற்றுள்ளவை என்பதை அந்த அன்பர் அறிந்து கொள்ளவில்லை போலும் !

மேலும், அத்தியாவசியப் பொருள்கள் - ஆடம்பரப் பொருள்கள் என்று மிகவும் சிரமப் பட்டுப் பிரித்துப் பார்க்க வேண்டியதில்லை. படித்து விட்டு வேலையின்றியிருக்கும் இளைஞர்களுக்கு எல்லாத் தொழில்களிலும் தொழில் நுணுக்கப் பயிற்சி அளிக்க வேண்டுமே என்பதுதான் திட்ட நிர்வாகத்தின் முக்கியமான லட்சியமாயிருக்கிறது !

உற்பத்தி செய்யப்படும் சாமான்களை விற்பனை செய்யச் சீரான ஏற்பாடுகள் இல்லாத காரணத்தினால் விற்பனையின்மையும், சரக்குகளின் தேக்கமுமே ஏற்படும். இதனால் இட நெருக்கடி, அதிகச் செலவு போன்ற தீமைகளும் ஏற்படும். எனவே, உற்பத்தி, பயிற்சி விற்பனை—இவை மூன்றும் நெருங்கிய முறையில் இணைந்து, விறுவிறுப்பாகச் செயல்பட்டாலன்றி, பண விரயத்தைத் தவிர்க்க முடியாது!

அதிக சம்பளங்களைப் பெற்று வரும் 'பிரின்ஸிபால்'கள், போதகர்கள் இவர்களுக்குப் பதிலாக, இத் தொழில்களில் வழி வழியாக ஈடுபட்டு வரும் ஸ்தலத் தேர்ச்சியாளர்களை இந்த உற்பத்தி, பயிற்சி நிலையங்களில் நியமிக்கக் கூடாதா ? நியமிப்பதால் இன்னும் நல்ல பலன் ஏற்படாதா ! என்பதைத் திட்ட நிர்வாகம் பரிசீலனை செய்ய வேண்டும்.

அப்பா ! ஒருவாறு இந்த ராஜ்யத்தில் நமது சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு விட்டோம்.

இங்கே சில முக்கிய ஊழியர்களையும் பற்றிக் குறிப்பிடாமல் இருக்கவே முடியாது !

நெய்யாற்றங்கரை பிளாக்கு நிர்வாக அதிகாரி ஸ்ரீ செல்லப்பன் நாயரைப்பற்றி எவ்வளவு எழுதினாலும் தகும் ! அவர் ரெவின்யூ இலாகாவைச் சேர்ந்தவர் ; டெபுடி கலெக்டர் அந்தஸ்தைச் சேர்ந்தவர். ஆயினும் அவர்-அதிகாரவர்க்க உணர்ச்சி சிறிதுமில்லாத ஒரு உயர்ந்த பொதுஜன ஊழியராகவே பணியாற்றுகிறார் ; அவர் நல்ல ரசிகர் ; நடிகர் ; எழுத்தாளர் ; பல சினிமாப் படங்களில் நடித்துமிருக்கிறார்.

செரயின்கீழ்-வர்க்கலா முதலிய இடங்களில் உள்ள பிளாக் அபிவிருத்தி அதிகாரிகளும் கூடத் தேச பக்தியுள்ள சிறந்த ஊழியர்களே.

மாவெல்லிக்கரா பிளாக்கின் அபிவிருத்தி அதிகாரியான ஸ்ரீ கோபால நாயரை ஆற்றல் நிறைந்த - துணிச்சலான ஊழியர் என்றாலும் அது மிகையல்ல ! இந்தப் பகுதியின் சமூகக் கல்வி அமைப்பாளர் ஸ்ரீ ராமகிருஷ்ண பிள்ளையும் அவருக்கு ஏற்ற ஜோடிதான்.

இந்தத் திட்டத்தின் லட்சியத்தில் அளவு கடந்த நம்பிக்கை கொண்டவர்களான, ஏன், இந்த லட்சியத்தில் லயித்து விட்ட ஸ்ரீ வைத்தியலிங்கம் பிள்ளை (கோவிபுரம் பிளாக் அதிகாரி) ஸ்ரீ வெங்கடாசலம் (மூவாட்டுப் புழா அதிகாரி) ஆகியவர்களையும் பாராட்டாமல் இருக்க முடியாது.

தம்பூருமுழியில் உள்ள பால் வற்றிப்போன கறவை மாடுகளுக்குப் போஷாக்கு உணவு தந்து உதவுகின்ற பெரிய பண்ணை ஒன்று சாலக்குடிப் பகுதியில் இருக்கிறது. அந்தப் பண்ணையின் டாக்டரும் அவரது இளம் மனைவியும் காட்டிய பரிவு மறக்க முடியாது.

சுந்தர பூமியாம் இந்தக் கேரள ராஜ்யத்தில் கண்ட காட்சிகளோ அநேகம். இந்த நாட்டு மக்களுடைய கபடமற்ற அழகு முகங்களையும், அன்பு நிறைந்த மொழிகளையும், தாபங்களையும், சிரிப்பொலிகளையும், உணர்ச்சி நிறைந்த கீதங்களையும், அவர்களுடைய அழியாத அருங்கலையாகிய நடன நாடகமாகிய 'கதகளி'யையும் என்றென்றும் மறக்க முடியாது.

இந்தச் சுற்றுப்பிரயாணத்துக்கு விரிவான ஏற்பாடுகளைச் செய்து தந்த அடிஷனல் டெவலப்மெண்டு கமிஷனரான ஜனாப் அப்துல் சலாம் அவர்களுக்கு நமது நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு, கேரள நாட்டிலிருந்து விடைபெற்றுக் கொள்வோம். அடுத்த வாரம் மைசூர் ராஜ்யத்துக்குச் செல்வோம். (தொடரும்)




# ஆரோக்கியத்திற்குச் சிறந்ததோர் வழி



உங்கள் குழந்தைகளை பாலைச் சாப்பிடும்படி செய்வது சிரமம்ம அல்ல. ப்ரௌன் அண்ட் போல்ஸன் கஸ்டர்ட் பவுடரிலிருந்து தயாரிக்கப்பட்ட பாலாடை நிறைந்த கஸ்டர்டை அவர்கள் விரும்புவார்கள். இதில் ஆரோக்கியத்திற்கான பொருள்கள் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. இதை நீங்கள் பாலின் உதவிகொண்டு தயாரிக்கலாம். இது தாவரப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்பட்டது.

இனாம்—"மோர் குட் திங்க்ஸ் டு ஈட்" என்ற பெயர்கொண்ட புதிய பாக சாஸ்திரப் புத்தகம் ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டு இனாமாக கொடுக்கப்படுகிறது. உங்கள் பெயர், முகவரி இத்துடன் தபால் செலவுக்காக இரண்டு அணா அல்லது 13 நயா பைசா தபால் வில்லையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்.

**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.**



தபால் பெட்டி நெ. 994—பம்பாய்.

## உலகப் பிரசித்தி பெற்றது!

லிச்சென்ஸா - உஷ்ணப் பிரதேசத்திற்குரிய சகல சரும ரோகங்களிலும் எவ்வித ஹானியுமின்றி மிருதுவாக குணம் தருகிறது. செங்கிறப் படைகள், படர்தாமரை, சிரங்குகள், வெடிப்புகள், எரிச்சலூட்டும் சகலவித ரணங்கள், தீப்புண்கள், பனி வெடிப்புகள், காலில் பித்த வெடிப்புகள் முதலிய இனங்களில் லிச்சென்ஸா உதவுகிறது. மூலரோகத்துக்கு உலகப் பிரசித்திப்பெற்ற நிவாரணியாகிய ஹெடன்ஸாவை தயாரிப்பவர்களே லிச்சென்ஸா மெழுகையும் உற்பத்தி செய்கின்றனர்.

**லிச்சென்ஸா**




ஜெர்மனியில் தயாரிக்கப் பட்டது

எங்கும் கிடைக்கும்

விசேஷ டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
மகாராஜா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் லிமிடெட்
54. பேங்க்ஷல் தெரு. கொழும்பு

---

நவராத்திரிக்கும் தீபாவளிக்கும்

# புதிய ஜவுளிகள்

### விற்பனை ஆரம்பம்

எங்களிடம் நவராத்திரிக்காகவும் தீபாவளிக்காகவும் பிரத்தியேகமாக தருவிக்கப் பட்ட அசல் கொள்ளேகாலம் பட்டிலும் தயாரிக்கப்பட்ட ஆரணி, காஞ்சீபுரம் சேலைகள், பாவாடைகள், ரவிக்கை, சோளி துணிகள். பெங்களூர் அசல் பட்டு, ஆர்ட் கிரேப் சேலைகள், பாவாடைகள், சின்னாளப்பட்டி பட்டு, பட்டுப் புடவைகள், பாவாடைகள் மற்றும் கோடம்பாக்கம், உறையூர், மதுரை & கோயமுத்தூர் நூல் புடவைகளும், சேலம் வேஷ்டிகளும் புதிய டிஸைன்களில் ஏராளமாக ஸ்டாக் செய்திருக்கிறோம். விலை மிக்க சரசமாகக் கிடைக்கும்.

செலக்ஷனுக்கு முந்திக் கொள்ளுங்கள்

★

விவரங்களுக்கு:

**ஸ்ரீ சசிதரா ஸில்க் ஹவுஸ்**
நெ. 12, 2-வது மாடி. ஸ்ரீரங்கா பில்டிங்
சந்தாவர்கார் ரோடு
மாதுங்கா :: பம்பாய்-19

---

FZY-36-TAM



# Zam-Buk

## ஜாம்-பெக்

### எக்ஸிமா, மண்டை சரும நோய், சிரங்கு இவைகளுக்கு உடனேயே நிவாரணம் அளிக்கிறது.

விசேஷ பலனளிக்கும் ஜாம்-பெக் உலகின் மகோன்னதமான சருமக் களிம்பு. ஜாம்-பெக் நோயுற்ற தசை நார்களை சுத்தம் செய்து, எரிச்சலுக்கு இதமளிப்பதுடன், சருமத்திற்கு மறுபடியும் ஆரோக்கியத்தை ஊட்டுகிறது.

ஜாம்-பெக் இதர சரும நோய்களையும் காயங்களையும் ஆற்றுவதில் அற்புத சக்தி வாய்ந்தது.




**கொழுப்புச் சத்து சேர்க்கப்படாதது**

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

சோல் ஏஜண்டுகள்:

**தாதா அண்டு கம்பெனி**
86, லிங்கியப்ப நாயக் தெரு. சென்னை - 3



# தர்மசாலையில்

மலையாளம்: எஸ். கே. பொற்றெக்காட் • மொழிபெயர்ப்பு: சௌரி

பனாரஸ் கண்டோன்மெண்ட் ஸ்டேஷனில் இறங்கியதும், ஒரு கூலி வலிய வந்து என் பெட்டி படுக்கைகளைத் தூக்கிக் கொண்டு, "எங்கே போகவேணும், சார்!" என்றான்.

"கிருஷ்ண தர்மசாலைக்கு."

"ஸ்ரீ கிருஷ்ண தர்மசாலைதானே? வாங்க போகலாம்" என்று கூறி முன் நடந்தான்.

ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் நாங்கள் தர்ம சாலைக்கு வந்து சேர்ந்தோம். பெரிய சத்திரம் அது. பல நாட்டு யாத்திரிகர்களும் தங்கிப் போக வசதியுள்ள தர்மசாலைகளில் ஒன்று.

வெளி வராந்தாவில் ஒரு கிழவன் உட்கார்ந் திருந்தான். பருமனான கணக்கு நோட்டுகள் எதிரே மேஜைமேல் இருந்தன. கம்பி பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி வழியாக வருபவர் களைக் கண்காணித்துக் கொண்டிருந்தான். வாய் வெற்றிலை பாக்கை மென்று கொண் டிருந்தது. வருபவர்களை ஜாடை மூலம் வர வேற்றுக் கொண்டே, கணக்கையும் எழுதிக் கொண்டிருந்தான் கிழவன். அவன் தான் தர்மசாலையின் நிர்வாக அதிகாரி என்பதை அறிந்து கொண்டேன். கூலியாள் என் சாமான் களைக் கிழவனுக்கு எதிரே இறக்கி வைத்தான்.

கிழவன் தலையை நிமிர்த்தாமல், விழிகளை உயர்த்தி என்னைக் கவனித்தான். என்னுடைய நாகரிக உடையையும் உருவத்தையும் கண்டதும், "ஐயாவுக்கு எந்த ஊரோ?" என்று விசாரித்தான். "மதராஸ்; எனக்குத் தங்க ஒரு இடம் வேண்டும்!" என்றேன்.

ஒரு பருமனான நோட்டை எடுத்து, என் பெயர், ஊர், வயது, வேலை, விலாசம் முதலிய விவரங்களைக் கேட்டு எழுதிக் கொண்டான். கடைசியில், என்னுடைய கையொப்பத்தை வாங்கிக் கொண்டு, "கங்காராம்!" என்று உரக்க அழைத்தான்.

"மஹராஜ்! என்ன வேண்டும்?" என்று கேட்டுக் கொண்டே, ஒல்லியான வாலிபன் ஒருவன் வந்து நின்றான்.

"இவரை முப்பத்திரண்டாவது அறைக்கு அழைத்துக் கொண்டு போ!" கிழவனிட மிருந்து உத்தரவு பிறந்ததும், கூலியாள் என் பெட்டி படுக்கைகளைத் தூக்கிக் கொண்டான்.

முப்பத்திரண்டாம் நம்பர் அறைக்கு வந்து சேர்ந்தேன்! இடம் நன்றாக இருந்தது.

கங்காராம் ஒரு கயிற்றுக் கட்டில் கொண்டு வந்து போட்டான். என் சாமான் களை அறையில் ஒழுங்கு படுத்தி வைத்தான். அங்கிருந்து கங்காராம் போனதும், கட்டிலில் உட்கார்ந்து கொண்டு, தர்ம சாலையைக் கூர்ந்து கவனித்தேன்.

பல யாத்திரிகர்கள் தர்மசாலைக்குள் வந்து கொண்டிருந்தார்கள்:

கிழத்தனத்தை எட்டிக் கொண்டிருந்த ஒரு குருடனும், துணையாக இளம் பெண் ஒருத்தி யும் அந்தக் கும்பலில் காணப்பட்டார்கள். நான் இருந்த வராந்தாவுக்கு வந்ததும், அந்தப் பெண் ஒவ்வொரு அறையின் இலக் கத்தையும் பார்த்துக் கொண்டே வந்தாள். என் அறைக்கு எதிரே வந்ததும், இருவரும் நின்றார்கள். அவள் குருடனிடம் ஏதோ சொன்னாள். குரலில் தொனித்த ஏமாற் றத்தை உணர்ந்த நான், "நம் அறைக்கு யாரோ ஒருவர் குடி வந்து விட்டார்!" என்று சொல்லி யிருப்பாள் என்பதை ஊகித்துக் கொண்டேன்.

அவர்களைக் கூர்ந்து கவனித்தேன். பிச்சைக் காரர்களல்ல. அந்த இளங் கிழவனின் முகம் பரங்கிப் பழம்போல் இருந்தது. அதிக நீள மில்லாத நரைத்த தாடியும் மீசையும், முகத் தோற்றமும் அந்தஸ்தையும் நல்ல குடிமை யையும் எடுத்துக் காட்டின. காவி நிறத்தில்

ஒரு முழு அங்கியைக் கிழவன் அணிந்திருந்தான். கழுத்தில் ருத்திராக்ஷ மாலை எடுப்பாகத் தெரிந்தது. ஒரு கையில் வெள்ளிப் பூணிட்ட தண்டமும், முதுகுப் பக்கத்தில் பிடில் போன்ற வாத்தியமும் இருந்தன. சிறிது நேரம் குருடன் என் அறை எதிரே மௌனமாக நின்று கொண்டிருந்தான்.

கிழவனுடைய ஒளியிழந்த விழிகள் அறையை வட்டமிட்டன. அவனது உள்ளம் அறைக்குள் ஓடி விளையாடுவதுபோல் எனக்குத் தோன்றியது. அருகிலிருந்த பெண், தயக்கத்துடன் அங்குமிங்கும் பார்த்துக்கொண்டு தவிப்பதைக் கண்டபோது எனக்கு இரக்கம் ஏற்பட்டது. அவள் அதிக அழகியல்ல; இருந்தாலும் பெண்மைக்குக் கவர்ச்சிதரும் உருவப் பொலிவு பெற்றிருந்தாள்.

அந்தப் பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டு கிழவன் என் அருகில் வந்தான். சற்று ஒதுங்கி இருந்தாலும், என்னைத் தன் எதிரே உட்கார்ந்திருப்பதாகப் பாவித்துக்



கிழவன் பேசினான்: "ஐயா! இந்த அறையை நீங்கள்தான் உபயோகப் படுத்திக் கொண்டிருக்கிறீர்களோ?"

அர்த்தமில்லாத கேள்வி. வேறு யாராவது கேட்டிருந்தால், எனக்கு ஆத்திரம் வந்திருக்கும். கிழவனின் பணிவையும், அப்பெண்ணின் தவிப்பையும் அறிந்து கொண்ட பிறகு, உதாசீனமாகப் பதிலளிக்க மனம் இடம் கொடுக்கவில்லை. "ஆமாம்" என்றேன்.

"ஐயா! மன்னிக்க வேண்டும். விகற்பமாக எடுத்துக் கொள்ளக்கூடாது....." என்று பேச்சை மேலே தொடர்ந்தான்:

"வருஷத்துக்கு ஒருமுறை நான் இங்கு வருவது வழக்கம். வரும்போதெல்லாம் இந்த அறையில்தான் தங்குவேன். இந்தத் தடவை நீங்கள் தற்செயலாக வந்து விட்டீர்கள். எனக்காக நீங்கள் கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொண்டால் மிகவும் உதவியாக இருக்கும். எனக்கு இந்த அறையைக் கொடுத்துவிட்டுப் பக்கத்து அறையில் நீங்கள் இருந்து கொள்ளுங்களேன்" என்று வேண்டிக் கொண்டான்.

கிழவனின் பேச்சில் மேலோங்கி நின்ற பணிவு என்னைப் பணியத் தூண்டியது. கூடவே சில சந்தேகங்களும் எழுந்தன. சற்று நேரம் கிழவனை உற்றுக் கவனித்தேன். கூடவந்த யுவதி நிலை கொள்ளாமல் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தாள். என் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளாமல், முடிவுக்கு வர நான் விருப்பவில்லை.

"தர்மசாலையில் வேறு அறைகள் ஒழிந்திருக்கிற போது, இந்த அறைக்குத் தான் வரவேண்டுமென்று நீங்கள் தீவிரமாக இருக்கக் காரணம்? இனிமேல் வேறு அறை தேடிக்கொண்டு கிளம்புவதானால், எனக்கு எத்தனை சிரமம்?" என்றேன்.

கிழவன் கொஞ்ச நேரம்வரை பேசவில்லை.

"இந்த அறைக்கும் எனக்கும் உள்ள தொடர்பைப் பற்றி நீங்கள் தெரிந்து கொண்டால் இப்படிச் சொல்லமாட்டீர்கள். நிச்சயம் என் மீது இரக்கப்படுவீர்கள்" என்று கிழவன் தன் கதையைத் தொடங்கினான்:

* * *

என் பெயர் மோஹன் பாடக். சொந்த ஊர் பாட்னா. சற்றுப் பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன் நான். வாலிபப் பருவத்தை எட்டும்போது நானும் கிழத் தாயும்தான் குடும்பத்தில் எஞ்சியிருந்தோம். எனக்கு அப்போது இருபத்தைந்து வயதிருக்கும். வைசூரி கண்டு, படுத்த படுக்கையாகி விட்டேன். கண்களைப் பலி கொடுத்து, உயிர்ப் பிச்சை பெற்றேன். உலகமே இருண்டுவிட்ட பிறகு, 'நான், எனது' என்பதற்கு என்ன வழி இருக்கப் போகிறது? வாழ்நாளை விரஸமாக்கிக் கொள்ள வேண்டாமென்று, சங்கீதம் பயின்றேன். எப்போதும் நாத உபாசனை தான். பயிலப் பயில உற்சாகம் வளர்ந்தது. உற்சாகம் வளர வளர இசைத்திறனும் மெருகேறி உயர்நிலைக்கு வந்தது. பிடிலும் கையுமாக உட்கார்ந்துவிட்டால் எனக்கு இந்த உலகத்துச் சிந்தையே இருக்காது.

என் வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு குடும்பம் புதிதாகக் குடி வந்தது. குடும்பத் தலைவர் தையற்காரர். ராம்கோபால் என்று பெயர். அவருக்கு ஏழு பெண்கள்.

ஒருநாள், நான் வழக்கம்போல் பிடில் வாசிக்க உட்கார்ந்தேன். காலை வேளை.

"தயவு செய்து, நான் இங்கே உட்கார்ந்து கொண்டு பாட்டுக் கேட்க அனுமதி தருவீர்களா?" என்று ஒரு குரல் கேட்டது.

"ஆகா; தாராளமாக உட்கார்ந்து கேட்கலாம்" என்று பதிலளித்தேன். இசை தொடங்குவதற்கு முன், அந்த இனிய குரலுக்கு உடையவளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆவல் உந்தியது.

"யாரம்மா நீங்கள்?" என்றேன்.

"பக்கத்து வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருக்கிறாரே ராம்கோபால், அவருடைய நாலாவது பெண் நான். பிரபாவதி என்று பெயர்" என்றாள் அவள்.

அன்று முதல் தினமும் பிரபாவதி காலையில் என் வீட்டுக்கு வருவாள். நான் பிடில்



வாசிப்பதை ரசித்துக் கொண்டிருப்பாள். பிரபா நல்ல அழகி, இளம் பெண், இனிய சுபாவம் என்று என் அம்மா ஒரு நாள் தற்செயலாகக் குறிப்பிட்டாள். இருக்கலாம்; அவளுடைய குரலின் இனிமைதான் என்னை மிகவும் வசீகரித்தது. பிரபாவின் அங்க லாவண்யத்தைக் கண்டு மகிழும் பாக்கியம் எனக்கு இல்லாது போனாலும், அவளுடைய குயில் போன்ற குரலைக் கேட்டுத் திருப்திப் பட்டுக் கொண்டிருந்தேன். பிரபா எதிரே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருக்கிறாள் என்கிற உணர்வே என் பாட்டுக்களுக்கு ஜீவனும் உற்சாகமும் அளித்தது.

பல தினங்கள் கழிந்தன. பிரபாவதி என் மாணவியானாள். நான் முறையாக அவளுக்குப் பாட்டு கற்றுக் கொடுத்து வந்தேன்.

இதற்கிடையில்தான் என் பெற்றதாய் இறந்தாள். நான் அநாதரவானேன். என் அக்காளை ராஜகிரியில் கொடுத்திருந்தது. அவள் என்னை ராஜகிரிக்கு வந்து தன்னுடன் வசிக்கும்படி வற்புறுத்தினாள். நான் அதற்கு ஒப்பவில்லை. பிரபாவை விட்டு ஓர் அங்குலம் கூட விலகிப்போக என் மனம் அநுமதிக்க வில்லை. மாயாத இருளில் கிடந்து உழலும் இந்தக் குருட்டுப் பாடகனுக்கு உள்ளத்து ஒளியாக ஒளிர்ந்தவள் பிரபாவதிதான். எனக்கு வாழ்க்கைத் துணைவியாக அமைந்து என்னை வாழவைக்க முன் வந்தாள்.

இருட்டில் பட்டு வாடும் முல்லை மொட்டு எதிர்பாராமல் மலர்ச்சி பெறுவதைப் போல, இதயத்தில் பிரேமை விகசித்தது. வளர்மதியின் முழுநிலவு போல், பிரபாவதி என் இதயத்தைக் குளிர வைத்தாள்.

இந்தச் சங்கடமான நிலையிலிருந்து தப்ப, பிரபாவதிதான் உபாயம் சொன்னாள். அவள் யோசனைப்படி, நாங்கள் இருவரும் ஊரை விட்டு ரகசியமாகப் போய் விடுவதென்று முடிவு செய்தோம். பாட்னாவிலிருந்த என் சொத்துக்களையெல்லாம் விற்றுப் பணமாக்கிக் கொண்டேன். ஒரு நாள் மாலை, யாரு மறியாதபடி பாட்னாவை விட்டு நானும் பிரபாவதியும் வெளியேறினோம். மிர்ஜாபூருக்குப் பக்கத்திலுள்ள பித்தாசலம் என்னும் ஊரில் குடியேறினோம். கங்கைக் கரைக்குப் பக்கத்தில் சிறு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டோம். எங்கள் திருமணம் அந்த இல்லத்தில்தான் நடைபெற்றது.

ஒரு குருடனின் இல்லற வாழ்வு! ஒளியுள்ள கண்களைப் படைத்த உங்களால் அந்தப் பிணைப்பைப் பற்றி ஊகிக்கக் கூட முடியாது. இசையின் சொல்லலைகள் போல, பிரபா என் ஜீவநரம்புகளைத் தொட்டுக் கொண்டிருந்தாள். என்னிடமிருந்த ரொக்கத்தில் கணிசமான பகுதியைப் பிரபாவுக்கு நகைகள் செய்யச் செலவிட்டேன். பாக்கியைப் பாங்கியில் போட்டிருந்தேன்.

ஏழு ஆண்டுகள் பித்தாசலத்தில் எங்கள் வாழ்க்கை இன்பமாகக் கழிந்தன.

ஒருநாள், நான் பணம் போட்டு வைத்திருந்த பாங்கி திவாலாகி விட்டது. இந்தச் செய்தி எங்களை அதிர வைத்தது. பிரபாவிடமிருக்கும் நகைகள்தாம் கையிருப்புநிதி என்ற நிலை ஏற்பட்டு விட்டது.

கையிலிருந்த சிறு தொகையை வைத்துக் கொண்டு நாங்கள் வட இந்திய புண்ணிய தலங்களைத் தரிசித்துவரத் தீர்மானித்தோம். பல க்ஷேத்திரங்களுக்கும் சென்று விட்டு இங்கு (காசிக்கு) வந்து சேர்ந்தோம். இந்தத் தர்ம சாலையில், இதே முப்பத்திரண்டாவது எண் உள்ள அறையில் வந்து தங்கினோம்.

மறுநாள் காலையில், வேதனை மனத்தை அழுத்தத்தயங்கிக்கொண்டே நான் பிரபாவதியிடம் சொன்னேன்: "பிரபா! கையிலிருந்த கடைசி அணாவும் செலவழிந்து விட்டது. இனி உன்னிடமிருக்கும் நகைகளில் ஒன்றை விற்றுத்தான் ஜீவனம் நடத்த வேண்டும்."

"இப்போதே வேணுமா?" பிரபாவின் குரல் ஏனோ நடுங்கியது.

"இப்போது வேண்டாம். நாளை இரவு கொடுத்தால் போதும்."—உள்ளக் கொந்தளிப்பை அடக்கிக்கொண்டு நான் சொன்னேன்.

கொஞ்ச நேரம் வரை கிழவன் பேசவில்லை. துக்கம் நெஞ்சை அடைத்தது. பிறகு, மந்தமான குரலில் வேதனை வெளிப்பட அவன்



# கல்கெமிகோவின்

# காந்தரிடைன்

## கூந்தல் தைலம்



மிகவும் சுத்தமான ஆலிவ் ஆயிலும் மற்ற தாவர எண்ணைகளும் சிறந்த நயமான காந்தரிடைனுடன் விஞ்ஞானமுறையில் கலக்கப்பட்டிருக்கின்றன. இத்தைலம் வழுக்கையை நீக்கி முடி வளர்ச்சியைத் துரிதப் படுத்துகிறது.

இதன் நறுமணம் அலாதியானது. மிகச் சிறந்தது.

5 அவுன்ஸ் அழகான சீசா

Tam

**கல்கத்தா கெமிகெல்,** கல்கத்தா - 29.

---

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை -1

---

சொன்னான்: "அன்று இரவு பிரபாவதி இறந்து விட்டாள்."

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. கதைக்கு இப்படி ஒரு திருப்பமா?... கிழவனோடு வந்திருக்கிற ஸ்திரீதான் பிரபாவதி என்று முடிவு செய்து வைத்திருந்தேன்.

"இறந்துவிட்டாளா? எப்படி?" என்றேன்.

"எப்படி இறந்தாள் என்பதை நான் எவ் விதம் சொல்ல முடியும்? பொழுது விடிந்ததும் நான் அவளை அழைத்தேன். பதில் வரவில்லை. இன்னும் எழுந்திருக்கவில்லை என்று தெரிந்தது. எழுப்புவதற்காக அவளைத் தொட்டேன். உடல் விறைத்துப் போய், ஜில்லிட்டுக் கிடந்தது.

கிழவனின் சாம்பல் நிறக் கண்களிலிருந்து நீர் ததும்பி வழிந்தது. குரல் தழு தழுக்க அவன் சொன்னான்:

"இன்று என் அன்புத் துணைவி பிரபாவதி இறந்த தினம். வருஷந்தோறும் நானும் வாசந்தியும் இந்தத் தினத்துக்காக இங்கு வந்து தங்குகிறோம். இதே அறையில்தான் இருப்போம். இரவு முழுவதும் நான் பழைய பிரேம கீதங்களைப் பாடிக் கொண்டிருப்பேன். எதிரே பிரபா உட்கார்ந்து கொண்டு கேட்பதாக எனக்கு ஒரு நம்பிக்கை. அவளுடைய ஆத்மா என் இசை வெள்ளத்தில் திளைத்துத் திருப்திப்படுவதாகவே நான் கருதுகிறேன்."

கிழவன் என் உதவியை எதிர்பார்க்கும் நம்பிக்கையோடு தன் மங்கிய விழிகளை உயர்த்தி என்னைப் பார்த்தான்.

என் உள்ளம் இரங்கியது. அதி அற்புதமான காதற் கதையல்லவா நான் கேட்டது!

அறையைக் கிழவனுக்கு ஒழித்துக் கொடுப்பதாக முடிவு செய்தேன். இதற்குள் என் சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளலாமென்று கிழவனைப் பார்த்துக் கேட்டேன்:

"இந்த வாசந்தி யார்?"

கிழவனின் முகம் பொலிவு பெற்றது. "இவள் என்னுடைய பெண். ஆமாம்; தெய்வம் எனக்கு அளித்த மகள். இந்தத் தர்மசாலையில்தான் இவள் எனக்குக் கிடைத்தாள். பிரபா என்னைத் தவிக்கவிட்டுச் சென்ற இரண்டாவது நாள், உலகத்துச் சூனியமெல்லாம் என்னைச் சூழ்ந்து கொண்டு சித்திரவதை செய்த சமயத்தில்தான், எனக்குப் புத்துயிர் அளிப்பதுபோல் ஓர் ஆறுதல் மொழி ஒலித்தது. 'பாபு! எனக்கு உங்களுடைய நிராதரவான நிலையைப் பற்றி நன்றாகத் தெரியும். நானும் வாழ்க்கையில் வஞ்சிக்கப்பட்டவள். நிராசைதான் எனக்கும் நிறைந்திருக்கிற மூலதனம். நீங்கள் என்னை உங்கள் மகளாக ஏற்றுக் கொள்வீர்களா?'

"நான் அந்தப்பெண்ணைக் குறுக்குக் கேள்வி எதுவும் கேட்கவில்லை. அந்தத் துர்ப்பாக்கியவதியை ஆதரவோடு அணைத்துக் கொண்டேன்; என்னுடைய மகிழ்ச்சியும் ஆறுதலும் கண்ணீர்த் துளிகளாகத் துளித்தன. பிரபாவை இழந்து தவிக்கும் சமயத்தில், இப்படி வேறு விதத்திலாவது ஆறுதல் கிடைத்ததே என்று மனத்தைத் தேற்றிக் கொண்டேன். ஏழு வருஷங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் இது. இவ்வளவு காலமாக, வாசந்திதான் எனக்குத் துணையாக இருந்து வருகிறாள்.



"இந்த வரிப் பளுவை எல்லாம் நினைத்துப் பார்த்தால் இந்தப் பூலோகத்தை விட்டே யாத்திரை போய் விடலாம் என்று பார்க்கிறேன்....."

"அப்படித் தப்பித்தும் போக முடியாது சார்! புதுசா பிரயாண வரி வேறு வந்திருக்கு!"

---

"பிறகு, பிரபாவின் ஒரு தங்க நகையைக் கூட நான் தொடவில்லை. அவ்வளவு நகைகளையும் இந்த வாசந்திக்கே கொடுத்து விட்டேன். நீங்களே பார்க்கலாம்; இப்போதும் அவள் என் பிரபாவின் நகைகளை அணிந்து கொண்டிருக்கிறாள். நான் பாட்டுக் கச்சேரிகள் நடத்தி, ஜீவனத்துக்கு வேண்டிய பணத்தைச் சம்பாதித்துக் கொள்ளுகிறேன்."

கிழவன் பெருமிதத்துடன் இலேசாகச் சிரித்துக் கொண்டே பேச்சை முடித்தான்.

இந்த இடத்தில் எனக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. வாசந்தி அணிந்திருந்தவை தங்க நகைகளா?...மங்கிக் கறுத்துக் கிடக்கும் அப்போலி நகைகளை இந்தக் கிழவன் தனித் தங்கத்தில் செய்தவை என்று எதற்காக மாற்றிச் சொல்கிறான்?

அதிகம் குழம்பிக் கொண்டு நிற்காமல், கங்காராமைக் கூப்பிட்டு என் சாமான்களை எடுத்துக் கொண்டுபோய், பக்கத்து அறையில் வைக்கச் சொன்னேன். கிழவன் நன்றி கூறி எனக்கு வணக்கம் செலுத்தினான்.

அன்று சாயந்திரம் குளக்கரையில் நான் வாசந்தியைச் சந்தித்தேன். அவள் பாத்திரம் துலக்க வந்திருந்தாள். என்னைப் பார்த்ததும் நன்றியோடு முறுவலித்தாள். நான் அவள் அணிந்திருந்த ஆபரணங்களை உற்றுப் பார்த்தேன். அவையெல்லாம் போலிச் சரக்குகளென்பது உறுதிப்பட்டது.

"வாசந்தி! இந்த நகைகள் தங்கத்தில் செய்தவைகளா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டேன். அவள் முகம் மாந்தளிரைப் போலச் சிவந்து விட்டது.

வாசந்தி சட்டென்று எழுந்து நின்றாள். "ஐயா! தயவுசெய்து நீங்கள் இந்த ரகசியத்

தைக் கிழவரிடம் சொல்லி விடாதீர்கள்!'' என்றவள் தொடர்ந்தாள் :

'' இறந்து போன பிரபாவதி தேவியின் வீட்டில் வேலைக்காரியாக இருந்தவள் நான். இந்த உண்மை கிழவருக்குத் தெரியாது. பிரபாவதியின் வாழ்க்கையிலும் ஒரு ரகசியம் உண்டு. அவளுக்கு அப்போதே தீராத நோயின் அறிகுறிகள் ஏற்பட்டு விட்டன. அவள் குடும்பத்தாருக்கும் எனக்கும் மட்டுமே அந்த ரகசியம் தெரியும். அவள் மோகன் பாடகருடன் பாட்னாவை விட்டு வெளியேறியதற்குக் காரணம் அந்த நோய் தான்.

'' அவர்கள் இருவரும் ஊரைவிட்டுப் போன போது எனக்குப் பதினைந்து வயது. நானும் காதல் மயக்கத்தில் சிக்கி யலைந்த சமயம் அது. கிருஷ்ணஸஹா என்ற பாடகரிடம் காதல் கொண்டேன். அவருக்கு ஒரு நாடகக் குழு அமைக்க வேண்டுமென்று வெகு நாட்களாக ஆசை. என் நகைகளையெல்லாம் அதற்காக அவரிடம் கழற்றிக் கொடுத்து விட்டேன். அவைகளை விற்றுச் செலவு செய்தார். பணம் போதவில்லை. அப்போது எனக்கு ஒரு யுக்தி தோன்றியது. பிரபாவதி தம் குருட்டுக் கணவருடன் பீந்தாசலத்தில் குடியேறி யிருக்கிறாள் என்பதை நாங்கள் அறிந்திருந்தோம். நான் சுய நல எண்ணத்துடன் பிரபாவதிக்கு ஒரு கடிதம் எழுதினேன். அதில், 'உங்களுடைய வியாதியைப் பற்றி உங்கள் கணவருக்குத் தெரிவித்து விடுவேன். அந்த ரகசியத்தை ஒளித்து வைக்க வேண்டுமானால் உடனே, எனக்கு நூறு ரூபாய் அனுப்பி வைக்கவேண்டும்' என்று பயமுறுத்தி எழுதியிருந்தேன்.

''மூன்றாவது நாள் பிரபாவதியிடமிருந்து எனக்கு ஒரு பார்சல் வந்தது. அதில் அவளுடைய தங்க நகையொன்றும், கடிதமும் இருந்தன. இதேமாதிரி போலி நகையொன்றை உடனே வாங்கி அனுப்பும்படி கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாள். என் ஆசை நாயகரின் பேராசை வளர்ந்தது. பணம் பறிக்க இது ஒரு நல்ல வழி என்று என்னைத் தூண்டிவிட்டார். நான் மறுபடியும் பிரபாவதிக்குப் பயமுறுத்திக் கடிதம் அனுப்பினேன். உடனே மற்றொரு நகை வந்து சேர்ந்தது. பதிலுக்கு, அவள் கோரிக்கைப்படி போலி நகையொன்றை வாங்கி அனுப்பினேன். இப்படியே ஐந்து வருஷங்களுக்குள் பிரபாவதி தேவியின் நகைகள் யாவும் என் மூலமாகக் கிருஷ்ண ஸஹாவின் கைக்கு வந்து சேர்ந்தன.

''இவ்வளவு நகைகளையும் என் காதலர் வெளியூரிலிருந்து கொண்டே எனக்கு எழுதி வருவித்துக் கொண்டு விட்டார். நாடகக் கம்பெனி உருவானதும், என்னை வந்து அழைத்துப் போவதாக உறுதி மொழி கொடுத்துச் சென்றதை நான் நம்பியிருந்தேன். இனி என் மூலம் பணம் பெற முடியாது என்று அறிந்துதானே என்னவோ, அவர் பல மாதங்கள் வரை எனக்குக் கடிதமே போடவில்லை. நான் போட்ட கடிதங்களுக்கும் பதிலைக் காணோம். பிறகு, விசாரித்ததில் பனாரஸில் முகாம் போட்டிருக்கும் ஒரு வங்காளிப் பாடகர் குழுவில் அவர் சேர்ந்திருப்பதாகத் தகவல் கிடைத்தது. நான் உடனே பனாரஸ் போய்ச் சேர்ந்தேன். எதிர்பாராத என் சந்திப்பை அவர் மகிழ்ச்சியுடன் வரவேற்கவில்லை. பணக்கவலையோ என்னவோ, என்று நான் என் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டேன்.

'' இதற்கு ஏற்றாற்போல், பிரபாவதியும் அவர் கணவரும் இந்தத் தர்மசாலையில் தங்கியிருப்பதைத் தெரிவித்து, மீதியுள்ள நகைகளையும் வாங்கி வரும்படி என்னைக் கட்டாயப்படுத்தினார். நானும் வேறு வழியில்லாமல் பிரபாவதியிடம் வந்து சேர்ந்தேன். அப்போது பிரபாவதியின் வியாதி கண்டுபிடிக்கும் அளவுக்கு வளர்ந்துவிட்டது. பிரபா அழுது கொண்டே, தன் கடைசி நகையையும் கழற்றி என் கையில் கொடுத்தாள். என் உள்ளம் நடுங்கியது. சுயநலம்தான் கொடுமைகளுக்கெல்லாம் வித்து என்று நொந்து கொண்டே என்னுடைய காதலர் தங்கியிருந்த இடத்துக்கு மிகுந்த ஆவலுடன் வந்து சேர்ந்தேன்.

'' அப்போது இரவு நேரம். அவர் வேறொரு அறையில், யாரோ ஒரு பெண்ணுடன் குலாவிக் கொண்டிருப்பதைக் கண்டேன். நான் பயமுறுத்திப் பிரபாவதி தேவியிடமிருந்து அபகரித்த நகைகள் யாவும் அந்தப் பெண்ணின் உடலை அலங்கரித்திருந்தன. நான் கொடுமையாக வஞ்சிக்கப்பட்டதை அப்போது தான் உணர்ந்தேன். கிருஷ்ண ஸஹா அந்தப் பெண்ணை ஆறு மாதங்களுக்கு முன்பே மணந்து கொண்டு விட்டார் என்ற உண்மையும் அப்போதுதான் வெளியாயிற்று.

'' வேதனையும், ஏமாற்றமும், பச்சாத்தாபமும் என்னைச் சகிக்க முடியாமல் வதைத்தன. மறுநாளே நான் பிரபாவதியிடம் மன்னிப்பு கேட்க ஓடிவந்தேன். வந்து பார்த்தபோது, அவளுடைய சவம்தான் என்னை வரவேற்றது. பிரபாவதி தற்கொலை செய்து கொண்டு விட்டாள் என்பதை ஊகித்தறிய எனக்கு நேரமாகவில்லை. இந்தக் கிழவரின் நிராதரவான நிலை என் உள்ளத்தை இளக வைத்தது. போலி நகைகள் அணிந்திருந்த குஷ்டரோகியான பிரபாவதியின் சடலத்தைக் கட்டி அணைத்துக் கதறிக் கொண்டிருந்தார் கிழவர்.

''கங்கைக் கரையில் பிரபாவதியின் உடலைத் தகனம் செய்தோம். பிறகு, கிழவருடன் கூடவே நான் தங்கிவிட்டேன். மகள்மாதிரி இவருக்குப் பணிவிடைகள் செய்து வருகிறேன். செய்த துரோகத்துக்குப் பரிகாரமாக இருக்கட்டுமென்றுதான் இப்படி இருக்கத் தீர்மானித்தேன். கிழவர் என்னிடம் கொண்டிருக்கும் பாசத்துக்கு நான் எவ்வளவு தொண்டு புரிந்தாலும் போதாது.''

வாசந்தி கதையைச் சொல்லி முடித்தாள்.

அன்று இரவு முழுவதும், அந்தக் கிழவவின் பிடில் இசையும் பிரேமகீதங்களும் ஒலித்துக் கொண்டிருந்தன. சோகம் நிறைந்த அந்த இசை அலைகளில், வாழ்க்கையின் நுட்பமான உணர்ச்சிகளிலிருந்து புறப்படும் அபூர்வமான மணியொலியைக் கேட்க முடிந்தது!

மறு நாள் காலையில் நான் அந்தத் தர்மசாலையை விட்டுப் புறப்பட்டேன். கிளம்பும் போது, முப்பத்திரண்டாவது அறையைக் கவனித்தேன். கிழவன் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். வாசந்தி தேவி காலை உணவு தயார் செய்து கொண்டிருந்தாள்

# "உயிருடனிருக்கும்போதே என்னை கண்டமிடுதல்"

அடிப்போஸர் புலம்பல்





பூமியின் அடியிலிருந்து துவாரமிட்டு வெளிக் கொண்டுவந்து ரிபைனரிக்கு அனுப்புகிறார்கள். அங்கு என்னை உயிருடனிருக்கும்போதே சின்னாபின்னமாக்குகிறார்கள். நானாவித முறைகளை கையாண்டு, சுத்திகரணம் செய்பவர்கள் பற்பல பெட்ரோலிய பொருள்களாக என்னை மாற்றுகிறார்கள். பரிபாஷைப்படி, பல பெரிய மாறுதல்கள் அடைகிறேன்—பகுதி பகுதியான காய்ச்சி வடித்தல், நான் ஒருவித மாறுதலுமடையாமல் பிளவுபடுதல், சீராக்குதல் மற்றும் இணைக்கப்படுதல் முதலியன. ரிபைனரியின் உலைக்களத்தோடு போகும் குழாய்கள் மூலமாக என்னை உஷ்ணப்படுத்துகிறார்கள். என்னை பிளவுபடுத்துவதற்காக "குமிழிடும்" ஸ்தூபிகளில் அமுக்குகிறார்கள். இங்கு வரிசையாக வைக்கப்பட்டிருக்கும் தட்டுகளிலுள்ள சிறு துவாரங்களின் வழியாக வெவ்வேறான கொதி நிலையில் கடந்துபோகிறேன். வெவ்வேறான நிலைகளில், பெட்ரோலிய பகுதிகளென்றும், கிரோஸின், லூப்ரிகேடிங் ஆயில் என்றும், என்னை பிரித்து இழுத்துவிடுகிறார்கள், சுத்திகரணம் செய்தல் என்பது சிக்கலான பல முறைகள் கொண்டது. அதில் காய்ச்சி வடித்தல் என்பது ஒரு படி. என் யாத்திரை இன்னும் முடிந்தபாடில்லை. இதன்பின், 'கேடலிடிக் கிராக்கிங்' என்ற முறைக்கு உட்படுத்துகிறார்கள். என்னுடைய வாழ்க்கையிலேயே சுவாரஸ்யமிருந்த முறையைப்பற்றி அடுத்த இதழில் விவரமாக இன்னும் சொல்லுகிறேன்.



**ஸ்டான்வாக்** — வளர்ச்சிக்கென்றே நிற்கும் பெயர்

# அறம் வளர்த்த கை

மூன்று வருஷங்களுக்கு முன் கல்கத்தாவுக்குப் போயிருந்தேன். அங்கு எப்போது போனாலும் என் நண்பன் ராமுவுடனேயே தங்குவது வழக்கம். பாலிகஞ்ச் என்று அவன் இருக்கும் பகுதிக்குப் பெயர். கல்கத்தாவில் பிழைப்புக்காகக் குடி வந்திருக்கும் தமிழர்களில் முக்கால்வாசிப் பேருடைய இருப்பிடம் இந்த இடம்தான்.

எனக்கு வேறு வேலை யிருந்தாலும், ராமுவுக்கு விடுமுறையாயிருந்தால் அவனுடனேயே என் பொழுதைப் போக்குவேன். பண்டிகையொன்றை யொட்டி அவன் ஒருநாள் ஆபீஸ் போகவில்லை.:.. இரண்டு பேருமாக ஒரு திட்டமும் இல்லாமல் வெளியே கிளம்பினோம். பேசிக் கொண்டே பவானிப்பூரை நெருங்கி யிருப்போம். பெரியவர் ஒருவர் எங்களை நிறுத்தினர். அவருடன் ஒரு வயது முதிர்ந்த அம்மாளும் இருந்தாள். அவள் கையில் ஒரு சிறு பாத்திரம் இருந்தது.

" உங்களை நிறுத்தியதற்கு மன்னிக்க வேண்டும். விஷயம் சிறியதுதான். என் மனைவிக்கு இன்று விரதம். தயிர் கலந்த உணவுதான் அவள் எடுத்துக் கொள்வாள். எங்களுக்கு இந்த ஊர் புதிது. நல்ல தயிர் கிடைக்கக் கூடிய இடத்தைக் காண்பிக்க முடியுமா ?" என்று பெரியவர் எங்களைக் கேட்டார். அவருடைய பார்வையிலும், பேச்சிலும் ஒருவித ஒளி வீசியது.

" இன்னும் இரண்டு பர்லாங்கு நடந்து போனால் ஒரு பஞ்சாபி மிட்டாய்க் கடை இருக்கிறது. அநேகமாக அவனிடம் நல்ல தயிர் இருக்கலாம் " என்று கூறி ராமு கடை இருக்கும் பக்கத்தையும் சுட்டிக் காட்டினன்.

அதற்குப் பெரியவர் " அந்தப் பக்கமாகத் தான் வந்தேன். இரண்டு மூன்று இடங்களில் கேட்கவும் கேட்டேன். இல்லை என்று சொல்லி விட்டார்கள். என்னுடன் நீங்களும் வந்து அந்தக் கடையைக் காண்பிக்க முடியுமா ?" என்றார். அவர் பேச்சில்தான் என்ன பணிவு! உடனே அதற்கு இசைந்து விட்டோம்.

பெரியவருடனும், அந்த அம்மாளுடனும் மெதுவாக நடந்து போனோம். அவர்களை அழைத்துப் போகும்போதே ஏனோ எனக்குத் தனியான ஒரு உணர்ச்சி இருந்து கொண்டேயிருந்தது.....மெதுவாகவே நடக்க வேண்டியிருந்ததால் அவரைக் கூர்ந்து கவனிக்க முடிந்தது. அந்தக் குறுகிய காலத்துக்குள் இரண்டு மூன்று ஏழைகளுக்கு ஓரொரு அணா கொடுத்திருப்பார். மற்றவர் படும் கஷ்டத்தை உண்மை வருத்தத்துடன் அனுபவிப்பவர் போலவே தோற்றமளித்தார். இருந்தாலும் முகபாவத்தில் சாந்தியின் உச்சத்தில் இருப்பதாகவே அவரை நான் கண்டேன்.

மிட்டாய்க் கடை வந்தது. கொஞ்சம் முன்பாகவே அங்கு சேர்ந்திருந்த ராமு கடைக்காரனிடம் தயிர் கேட்டிருந்தான். " சட்டியில் இருந்ததெல்லாம் இப்போதுதான் தீர்ந்து போயிற்று. வீட்டினுள் இருக்கிறதா என்று கேட்டுத்தான் சொல்ல வேண்டும் " என்று சொல்லி அவன் வாயை மூடுமுன் நான் முந்திக் கொண்டு, " ஐயா ! தயிர் அவசியம் வேண்டும். இதோ எங்களுடன் வந்திருக்கும் பெரியவர்கள் இன்று விரதம் இருக்கிறார்கள். வீட்டினுள் போய்க் கட்டாயமாகப் பார்த்து வாருங்கள் " என்றேன். எனக்கு அவ்வளவு அவசரம். அதற்குள் கடைக்காரரே பெரியவரை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன்....

அவன் முகத்தில்தான் என்ன கலவரம்? என்னென்ன விதமான உணர்ச்சிகள் ; அவன் கண்கள் கலங்கின. உதடு தழுதழுத்தது. கலவரம் அடைந்தவன் போல் மெதுவாகக் கடையை விட்டு இறங்கினன். பெரியவரை நோக்கி வந்து, விம்மிய குரலுடன் " ஐயா! உண்மையைச் சொல்லுங்கள், நீங்கள்தானே பேனி பாபு ?" என்றான்.

'ஆம்' என்கிற முறையில் தலையசைத்து விட்டுப் பெரியவர், "உனக்கு ஏனப்பா இந்தச் சந்தேகம் ?" என்றார்.

" ஐயா என்னைத் தெரியவில்லையா?" என்று சொல்லிக்கொண்டே மண்டியிட்டு அவர் கால்களைத் தன் கண்களால் ஒத்திக் கொண்டான். அவனுடைய ஆனந்தக் கண்ணீர் அவர் கால்களை நனைத்ததை நானும்-ராமுவும் ஒரே பெருமையுடன் பார்த்துக் கொண்டிருந்



தோம். அந்த அம்மாள் மட்டும் கலவரம் அடைந்தவளாகக் காண வில்லை; நிம்மதியாக இருந்தாள்.

"ஷீலாவின் கணவன் சட்டாதானே அப்பா நீ!" என்று அவள் கேட்டு முடிப்பதற்கு முன்அவன், "சுவாமி! நீங்களும் மாதாஜியும் இங்கே எப்போது வந்தீர்கள்? ஏன் இப்படி வெய்யிலில் நடந்து போகிறீர்கள்? வாருங்கள்!" என்று சொல்லிக் கொண்டே "ஷீலா! ஷீலா! நம் கடவுளும், லோக மாதாவும் நமக்குக் காட்சி அளித்து விட்டார்கள். வா, வா, உடனே வா" என்று உற்சாகத்துடன் கூவிக்கொண்டே உள்ளே வேகமாகப் போனான்.

அவன் மனைவி. பெரியவர்களைக் கண்டவுடன் பெற்ற சந்தோஷத்தை விவரிக்கும் சக்தி எனக்கு இல்லை.

கடைக்கு முன்பே, நடைபாதையிலேயே சாஷ்டாங்கமாகத் தரையில் மண்டியிட்டு நன்றாக நமஸ்காரம் செய்து, "மாதாஜீ! உள்ளே வாருங்கள். எப்போது வந்தீர்கள்? உங்கள் பேரக் குழந்தைகளைப் பார்க்க வேண்டாமா?" என்று கூறி அவளை உள்ளே அழைத்துப் போய்விட்டாள்.

பெரியவரைக் கடையில் உட்காரவைத்தான் கடைக்கார சட்டா. அவர் பக்கத்தில் அவன்



நின்று கொண்டான். பிறகு உரத்த குரலில் 'நண்பர்களே! வாருங்கள். வாருங்கள்! பிரத்யக்ஷமாகக் கடவுளைப் பார்க்கக் கூடிய சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள். அவருடைய புனிதமான கைகளால் கிடைக்கும் பிரசாதத்தை வாங்கத் தவறாதீர்கள்" என்றான்.

அவனுடைய நடத்தை ஒரு பெரிய கூட்டத்தையே அந்த இடத்தில் கூடும்படி செய்து விட்டது. மறுபடியும் உரத்த குரலில், "இன்று எனக்கு வியாபாரம் வேண்டாம். என் கடையிலுள்ள மிட்டாய்கள் முழுவதும் பெரியவர் — என் கடவுள் — கரங்களினால் உங்களுக்கு விநியோகிக்கப் படும். ஒவ்வொரு



பருத்த மனிதர்:— என்டாப்பா இப்படி எலும்பாக இருக்கிறாயே. டாக்டரிடம் காண்பிக்கக் கூடாது?

மற்றவர்:— ஒரு எலும்பு கூட இல்லாமல் நீங்கள் இருக்கிறீர்களே. டாக்டரிடம் காண்பிக்கக் கூடாது!

---

ராக வாங்கிப் போங்கள்!'' என்று கூறினான். ராமுவுக்கும் எனக்கும் என்ன செய்வதென்றே தெரியவில்லை. பகல் வேளை. மணி பன்னிரண்டாகி விட்டது. வீட்டில் ராமுவின் மனைவியும்-குழந்தைகளும் காத்திருப்பார்கள். வேடிக்கை பார்க்க நேரமில்லைதான். பெரியவரிடம் விடைபெற்றுக் கொண்டு, அவர் கொடுத்த மிட்டாய்களுடன் வீட்டுக்கு விரைந்தோம். பத்தடி போய்த் திரும்பிப் பார்த்தால், பெரிய கூட்டமே சட்டாவின் மிட்டாய்க் கடைமுன் கூடியிருந்தது. பணமில்லாமல் தின்பண்டம் கிடைக்கிறதென்றால் நம் நாட்டில் கூட்டத்துக்குக் கேட்பானேன்?

வீட்டுக்குப் போய் உணவருந்திய பிறகும் நடந்து போன சம்பவத்தை நினைக்காமல் இருக்க முடியவில்லை: ''ராமு! அந்த சட்டா சொன்னதைக் கேட்டாயாடா. அந்தப்-பெரியவரைக் கடவுள் என்றல்லவோ வர்ணித்தான். ஏதோ கூட்டம் கூடிவிட்டதனாலும், சட்டாவும், அந்தப் பெரியவரைக் கண்ட சந்தோஷத்தில் மெய் மறந்திருந்தினாலும், மேற்கொண்டு ஒன்றும் கேட்க முடியவில்லை. இருந்தாலும் உண்மை விஷயத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற ஆவல் தணியாமல் இருக்கிறதே!'' என்றேன். அவனும் ''எனக்கும் அப்படியே, முடிந்தால் மாலையிலேயே சட்டாவிடம் போய் வருவோம்'' என்றான்.

*   *   *

மாலை நேராகச் சட்டாவின் மிட்டாய்க் கடைக்குச் சென்றோம். அந்தப் பெரியவரைக் காணவில்லை. கடை பூட்டி யிருந்தது. சட்டா வீட்டு வாசலில் நின்றுகொண் டிருந்தான்.

''காலையில் நடந்ததெல்லாம் எங்கள் இருவரையும் ஒரே ஆச்சரியத்தில் மூழ்க அடித்து விட்டது. எங்கள் இருவருக்கும் உங்களிடமிருந்து அவரைப் பற்றித் தெரிந்து கொண்டாலொழிய மனத்தில் நிம்மதியே இருக்காது. கடவுள் என்கிற பெரிய பதத்தை அவ்வளவு நிச்சயமாக உபயோகித்து அந்தப் பெரியவரை வர்ணித்தீர்களே, அதுதான் பெரிய புதிராக இருக்கிறது!'' என்றேன்.

''சொல்லித்தான் ஆகவேண்டுமென்றால் சொல்கிறேன்'' என்று தன் கதையை, ஆரம்பித்தான் மிட்டாய்க் கடை முதலாளி சட்டா.

''நான் பிறந்தது உத்தரப் பிரதேசத்தில். என் தகப்பனாரும் அவர் தம்பியும் வேலை தேடிப் போய்ப் பஞ்சாப் மாகாணத்திலுள்ள ராவல் பிண்டியில் குடியேறியிருந்தனர். ஏதோ ஒரு கடையில் குமாஸ்தாவாக அமர்ந்திருந்தார் என் தகப்பனார். என் சிறிய தகப்பனார் ஒரு பள்ளிக்கூடத்தில் வாத்தியாராயிருந்தார். துரதிருஷ்டவசமாக என் தகப்பனார் என்னுடைய பத்தாவது வயதிலேயே நோயால் இறந்து போனார். எனக்கும் தாயாரும் இல்லை. என்னைப் பெற்ற போதே தவறி விட்டதாகக் கேள்வி. என் சிறிய தகப்பனார் குடும்பத்தில் ஒருவனானேன். சிறிய தாயாரின் கொடுமையை இன்று நினைத்தாலும் உள்ளம் நடுங்குகிறது.

'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்கிற வாக்குப்படி ஓர் இரவு வீட்டைவிட்டு வெளியேறினேன். ஊரைவிட்டே போய் விடும் முடிவுடன் லாகூர் போகும் ரயிலில் டிக்கெட் இல்லாமலேயே ஏறிக்கொண்டேன். அதுதான் என் முதற் பிரயாணம் ரயிலில். ஒரே பயம். நான் ஏறிய பெட்டியில் ஒரு வயது வந்த வாலிபரும் அவர் மனைவியும் உட்கார்ந்திருந்தனர்.

லாகூர் வரப்போவதாகத் தெரிந்தது. பிரயாணிகள் எல்லோரும் மூட்டை கட்டித் தங்களைத் தயார் செய்து கொள்வதிலிருந்து புதிதாகத் தெரிந்து கொண்ட அந்த மனிதருக்கு மூட்டை கட்டுவதில் நானாகவே உதவி புரிந்தேன். அந்தச் சமயத்தில்தான் ஒரு டிக்கட் பரிசோதகர் வந்து சேர்ந்தார். ''டிக்கெட் எங்கே?'' என்று என்னை அவர் அதட்டிய போது எனக்கு உலகமே முடிவுக்கு வந்து விட்ட உணர்ச்சி ஏற்பட்டது.

பேனி பிரஸாத் என்னும் அந்த யுவர் டிக்கட் பரிசோதகரிடம் ''அந்தப் பையன் எங்களுடைய புதிய ஆள். முதன் முதலாகப் பிரயாணம் செய்கிறான். கடைசி நிமிஷத்தில் ஏறிக் கொண்டதால் அவனுக்கு டிக்கட் வாங்கவில்லை. எவ்வளவு வேண்டுமோ எடுத்துக் கொள்ளுங்கள்' என்று பத்து ரூபாயை டிக்கட் பரிசோதகரிடம் நீட்டினார்.

பேனிபிரஸாதின் தாராள புத்தியைக் கண்டு மயங்கியவர்போல் சீட்டு ஒன்றை எழுதிக் கொடுத்து விட்டு, மீதி சில்லறையும் தந்தார்.

அவர்களுடனேயே லாகூரிலுள்ள அவர்கள் வீட்டுக்குப் போனேன். போனதும் போகாததுமாக என் கடந்த கால வாழ்க்கையை அவர்களிடம் விவரமாகக் கூறிவிட்டேன். அவர் அப்போது என்ன வேலை பார்த்து வந்தார் என்பது எனக்குத் தெரியாது. நானும் கேட்கவேயில்லை. இன்றுவரையில் அறியேன்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, 'சட்டா! என்னுடன் வருகிறாயா, தன்பனொருவன்

மல்டி-பர்ப்பஸ் பாலிஸி

# அவள் கணவனே அவள் உலகம்

ஒரு பெண்ணின் மிக உயர்ந்த பரிசு அவள் கணவனின் பரிபூர்ண அன்புதான்—அவளுடைய இன்றையத் தேவைகளை மட்டுமின்றி, நிலையற்ற வருங்காலத்தேவைகளையும் பூர்த்தி செய்யும் கணவன்.

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ், வருங்காலத் திட்டத்தில் ஒரு முக்கிய அம்சமாகும். உங்கள் மனைவி மற்றும் குழந்தைகளுக்குப் போதிய பாதுகாப்பு அளிக்க விரும்பினால், மல்டி-பர்ப்பஸ் பாலிஸியின் விபரங்களை அறிய ஆவலாயிருப்பீர்கள்.

மல்டி-பர்ப்பஸ் பாலிஸி, ஒரே திட்டத்தின் கீழ், ஒருவரின் பல்வேறு இன்ஷ்யூரன்ஸ் தேவைகளைப் பூர்த்தி செய்கிறது—அவனுடைய அந்திகாலத்திற்கான பணவசதி; அவனுக்கு அகால மரணம் சம்பவித்தால், அவனுடைய குடும்பத்தினரை சம்ரக்ஷிக்கப் பண வசதி; அவனுடைய குழந்தைகளின் கல்வி, கல்யாணம்; அல்லது வாழ்க்கையைத் துவங்கத் தேவையான பணம் முதலியவை. ஆம், மல்டி-பர்ப்பஸ் என்ற பெயரிலேயே அதன் பல்வேறு அம்சங்கள் த்வனிக்கவில்லையா!



மல்டி-பர்ப்பஸ் பாலிஸி நீங்கள் எடுத்துக்கொண்டால், உங்கள் கவலைகள் அநேகம் ஒழியும். நீங்கள் இருந்தாலும், இல்லாவிட்டாலும், உங்கள் குடும்பத்தினரின் நலனைக் கவனிக்கும் ரக்ஷகன் இதோ உள்ளது.

பாலிஸிதார் ஒரு வேளை அகாலத்தில் இறக்க நேரிட்டால், இந்த பாலிஸி அளிக்கும் அநுகூலங்களாவன:

சங்கடமான சூழ்நிலையினால் ஏற்படும் பணச்செலவுகளை ஏந்த, இன்ஷ்யூர் செய்த தொகையில் ஒருபாகம்.

பாலிஸியின் மீதி காலத்திற்கு தவறாமல் வருமானம்:

மரணம் சம்பவித்த நாளிலிருந்து 2 வருஷங்களுக்கு, குடும்பத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல் நிலைமையைச் சமாளிக்க உதவி பணம்;

இன்ஷ்யூர் செய்த தொகையின் மீதிப்பணம் பாலிஸி காலவரையாகும் பொழுது கொடுக்கப்படும்.

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**



ASP/LIC.20

மிட்டாய்க் கடை ஒன்று திறந்திருக்கிறான். அவன்கடையில் வேலை கிடைக்கலாம்' என்றார். என்னைப் பற்றியே எனக்குக் கொஞ்சமும் நம்பிக்கை இல்லாவிட்டாலும், அவருடன் கிளம்பினேன். அவருக்கும், அவர் மனைவிக்கும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன். அவர்களும் மனப்பூர்வமாக என்னை ஆசீர்வதித்தார்கள். மிட்டாய்க் கடையில் வேலைக்கு அமர்ந்தேன். பலவிதமான வேலைகளும் கற்றுக் கொண்டேன். கடை முதலாளியும் பலவிதமான பொறுப்புக்களையும் எனக்கு அளித்துப் பரீட்சை பார்த்து வந்தார். இப்படியாகச் சில வருஷங்கள் ஓடின.

1946ம் வருஷம் வந்தது: திடீரென்று ஹிந்து — முஸ்லிம் கலகம் ஏற்பட்டது. அமைதியாக வாழ்ந்து வந்த மக்களிடம் ஆத்திரம், துவேஷம், பகைமை எல்லாம் எப்படித்தான் குடிகொண்டனவோ! இன்று வரை அந்தப் புதிருக்கு நான் விடை காணவில்லை. எங்கள் கடையில் அதிகமான வியாபாரம் முஸ்லிம் நண்பர்களுக்குத்தான். அந்த மிட்டாய்க்கடை முதலாளி மிகவும் நல்லவர். அவருக்கு ஹிந்து நண்பர்களைவிட முஸ்லிம் நண்பர்களே அதிகம். இருந்தாலும் அவர் 'முதலாளி' என்ற பெயர் இருந்ததாலோ என்னவோ, ஒரே இரவில் ஒரு கலகக் கூட்டம் அவர் கடையைச் சூறையாடியதுடன் திருப்தியடையாமல், அவரையும் அவர் மனைவியையும் ஈவிரக்கமின்றிக் கொலையும் செய்தது.

ஏதோ சந்தர்ப்பவசத்தால் அவர்களுடைய பத்து வயதுப் பெண் தப்பினாள். எனக்கு அப்போது பதினைந்து வயதேயிருக்கும். இருந்தாலும் பேனி பிரசாதின் அருளினாலோ என்னமோ அந்தச் சிறு வயதிலேயே பொறுப்புணர்ச்சி எனக்கு ஏற்பட்டிருந்தது. அந்தப் பெண்—ஷீலாவுடன் பேனி பிரசாத் இருக்குமிடத்தை ஒருவாறு விசாரித்துக் கொண்டு அடைந்தேன். ஏமாற்றமே எங்களுக்குக் காத்திருந்தது. அவர்கள் ஊரை விட்டுப் போய்ப் பல காலம் ஆகிவிட்டதென்றும், அவர்கள் எங்கே போனார்களென்று தெரியாது என்றும் சொல்லி விட்டார்கள், அண்டை வீட்டுக்காரர்கள். பத்து வயதுச் சிறுமி ஷீலா என் பொறுப்பானாள். இருவருக்கும் உலகமே சூன்யமாக இருந்தது.

என்னைப் பிடித்த கஷ்டம் தீர வில்லை. பல ஊர்களுக்கும் பல இடங்களுக்கும் சென்று வேலை கேட்டேன், கிடைக்க வில்லை. நானும் ஷீலாவுமாக பஜனைப்பாட்டுக்கள் பாடுவோம். சிறிய கூட்டம் கூடும். ஏதோ கொஞ்சம் சில்லறையும், தின்பண்டங்களும் கிடைக்கும்.

பீகார் மாகாணத்தில் சப்ரா என்று ஒரு ஊர். அந்தப் பக்கமாக ரயிலில் பாடிக் கொண்டே போய்க் கொண்டிருந்தோம். 1949ம் வருஷம் டிக்கட் பரிசோதகர் ஒருவர் எங்களை இறங்கும்படி சொன்னார். அப்போது தான் மறுபடியும் அந்த பேனி பிரசாதைச் சந்திக்க நேர்ந்தது.

''பாபு! என்னைத் தெரியவில்லையா? முன் பொரு முறை காப்பாற்றினீர்களே'' என்று கத்தி விட்டேன்.

அவருக்கு என்னை அடையாளம் புரியவில்லை. இருந்தாலும் அருகில் வந்தார். அவர்தான் எவ்வளவு மாறியிருந்தார்! அவ



''இந்த ஊரில் காப்பி தோட்டம் எங்கே இருக்கு சார்?''
''அதோ ஈக் கூட்டம் போகிறதே? அதன் பின்னாலேயே போங்கள்!''

ரும் தேசப் பிரிவினையின் போது நேர்ந்த கலவரங்களில் நொந்து போயிருக்க வேண்டும்.

என் முதல் ரயில் பிரயாணத்தையும், அவர் எனக்கு மிட்டாய்க் கடையில் வாங்கிக் கொடுத்த வேலையையும் ஒரே மூச்சில் சொல்லி முடித்தேன். ஷீலா மிட்டாய்க் கடைக்காரரின் ஒரே குழந்தை என்பதையும் தெரிவித்தேன்.

அவரிடம்தான் எவ்வளவு தாராள குணம். பரிசோதகரிடம் மறுபடியும் பணம் கொடுத்து எங்களை விடுவித்துப் பக்கத்து ஊரிலுள்ள தங்கள் வீட்டுக்கு அழைத்துப் போனார். அவர் ஒரு சிறிய சர்க்கரை ஆலைக்கு அதிகாரியாக இருந்து வந்தார்.

அது நாட்டில் சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டிருந்த சமயம். தினமும் கொஞ்சம் சர்க்கரை கொடுப்பார். அதை விற்று வந்து அதன் விலையைக் கொடுத்து விடுவேன். ஷீலாவுக்கு அவர்கள் வீட்டில் உதவி செய்யும் வேலை கிடைத்தது.

ஒரு நாள் பேனி பாபு என்னிடம் பேச வேண்டுமென்று அழைத்தார்.

''சட்டா, உனக்கு இப்போது எவ்வளவு வயது?'' என்று கேட்டார்.

''பதினெட்டாகிறது, பாபுஜீ!'' என்றேன்.

''ஷீலாவுக்கு எவ்வளவு வயது?''

இதுதான் அவருடைய அடுத்த கேள்வி.

''பதின்மூன்று என நினைக்கிறேன்'' என்று குனிந்தவாறே உரைத்தான் அவன்.

''உங்களிருவருக்கும் மணம் செய்து முடிக்க நானும் மாதாஜியும் தீர்மானித்து விட்டோம்'' என்றார்: அத்துடன் நிற்காமல், ''சட்டா! சர்க்கரைப் பஞ்சம் கூடிய சீக்கிரமே தீர்ந்துவிடப் போகிறது. பிறகு இந்த வியாபாரத்தில் பணம் படைத்தவர்களே சமாளிக்க முடியும். ஐந்நூறு ரூபாய் வரை சேர்த்து வைத்திருக்கிறாய். கல்கத்தாவில்

என் நண்பர் ஒருவருக்கு ஒரு கடிதம் கொடுக்கிறேன். அவர் ஒரு கடை வைத்துத் தருவார். உனக்கு மிட்டாய்க் கடையில் வேலை செய்து அனுபவம் உண்டு. மிட்டாய் வியாபாரத்தில் நல்ல லாபம் உண்டு. உன் நேர்மையான குணத்துக்கும், உழைக்கும் தன்மைக்கும், லீலாவின் பொறுப்புணர்ச்சிக்கும் கூடிய சீக்கிரமே பலன் கிட்டும். இதுதான் உங்களைப் பற்றிய என் முடிவு'' என்றார்.

அவர் சொல்லைத் தட்ட நான் யார்? ஒரு சுப தினத்தில் அவர்கள் வீட்டிலேயே எங்கள் திருமணம் நடந்தேறியது. நண்பருக்குக் கடிதத்துடன் கல்கத்தாவுக்கு ரயிலேறினோம். கல்கத்தாவில் இறங்கிப் பேனி பாபுவின் நண்பரைத் தேடினோம். எவ்வளவு முயன்றும் கிடைக்கவில்லை. அவரைப் பார்க்கும் எண்ணத்தைக் கைவிட்டு எங்களுக்கென்று ஒரு இடம் தேட ஆரம்பித்தோம்.

நாம் உட்கார்ந்திருக்கும் இந்தக் கடைக்கு வாடகை ரூபாய் இருபத்தைந்துதான் என்றாலும் முந்நூறு ரூபாய் முன் பணம் கேட்டார்கள். பேனி பாபுவின்பேரில் இருந்த நம்பிக்கையினால் கடையை ஆரம்பித்தேன். லீலாவின் நம்பிக்கையும், பேனிபாபு மாதாஜி அவர்களின் ஆசியும் எங்களைத் தூக்கிவிட்டன. தினமும் நூறு ரூபாய் வரைக்கும் வியாபாரமாகிறது. வியாபாரத்தை விட்டு ஊர் போய்ப் பேனி பாபுவைப் பார்த்து வர இயலாமல் பல மாத காலம் கடந்து போயிற்று. பிறகு ஒரு மாதிரியாக ஏற்பாடு செய்து கொண்டு ஒரு முறை போனேன். பெருத்த ஏமாற்றமே காத்திருந்தது.

சர்க்கரை வியாபாரத்தில் மந்த நிலை ஏற்பட்டு அவரைத் தொழிற்சாலை முதலாளி வேலையை விட்டு நீக்கிவிட்டாரென்றும், மனமுடைந்தவராக எங்கோ போய்விட்டார் என்றும் ஊரார் சொன்னார்கள். வேறு வழியில்லாமல் கல்கத்தா திரும்பி வந்தேன். வியாபாரம் நன்றாக நடந்து வந்தது. இந்த இடத்தையே விலை பேசி வாங்கி விட்டேன். நாங்கள் நாங்கள் நல்ல நிலையிலுள்ளதற்குக் காரணம் அந்தப் பேனி பாபுதான். அவர் கடவுள் என்பதுதான் என் முடிவு'' என்று தன் கதையை முடித்தான் சட்டா.

வீட்டுக்கு வந்து சேரும்போது மணி பன்னிரண்டு. புதியதொரு உணர்ச்சியுடன், காலையில் பிரசாதமாகக் கொண்டு வந்திருந்த மிட்டாய்களையும் பாலையும் உட்கொண்டு உறங்கி விட்டோம். மறுநாள் சென்னைக்குத் திரும்பி விட்டேன்.

கடந்த மூன்று வருஷங்களில் கல்கத்தா போகும் சந்தர்ப்பமே நேரவில்லை. நான் செய்து கொண்டிருந்த வேலையிலும் முன்னேறிப் பெரிய பதவி வகித்துக் கொண்டிருந்தேன். ராமுவுடன் நெருங்கிய தொடர்பு இருக்கவில்லை. கல்கத்தாவுக்குப் போகும் சந்தர்ப்பம் ஒன்று சமீபத்தில் நேரிட்டது. ராமுவுக்குத் தந்தி அடித்திருந்தேன். விமான நிலையத்துக்கு அவன் வந்திருந்தான். பெரியதொரு மோட்டார் வண்டியில் அழைத்துப் போனான்.

''நான் வேலை செய்துவந்த கம்பெனி பெரியதாகப் போய் விட்டது. கடந்த மூன்று வருஷங்களில் என் வாழ்க்கையில் பெரிய முன்னேற்றங்கள் ஏற்பட்டு எனக்கு இப்போது மாதம் இரண்டாயிரம் ரூபாய் சம்பளம்'' என்றான் ராமு. பிறகு ''உன்னைப்பற்றிச் சொல்லவில்லையே. முன்பு வந்தபோது ஜனதா எக்ஸ்பிரஸில் வந்தாய். இப்போதோ விமானத்தில் பறக்கிறாயே!'' என்று என் முன்னேற்றத்தைக் கண்டு திருப்தி அடைந்தான். தொடர்ந்து அவன், ''உனக்கு அந்த மிட்டாய்க்கடைச் சம்பவம் நினைவிருக்கிறதா? அந்தச் சட்டா இப்போது பெரிய பணக்காரனாகி விட்டானடா. இருந்தாலும் எப்போதும் போல் அவன் சகஜமாகவே இருக்கிறான். அவனைப் பார்த்து விட்டு வரலாமா?'' என்றான்.

இருவரும் மாலையில் பவானிபூர் பக்கம் போனோம். ராமுவின் கார் ஒரு பெரிய கட்டடத்தின் முன் நின்றது. மூன்றடுக்குக் கட்டடம். அணைந்து அணைந்து பிரகாசிக்கும் விதவிதமான ''நியான்'' விளக்குகளாலான பெரியதொரு போர்டு கட்டடத்தை அலங்கரித்தது. ''பேனிபாபு ஸ்வீட் மார்ட்'' என்பது வெளிச்சத்தில் நன்கு தெரிந்தது. நேராகச் சட்டாவிடம் அழைத்துப் போனான்.

எங்களைக் கண்டதும், ''இன்னும் நல்ல செய்தி கொண்டுவந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டபோது நாங்கள் திகைத்து விட்டோம்.

''எதைக் கேட்கிறீர்கள்?'' என்றான் ராமு.

''நண்பர்களே! என் குறையை உங்களிடம் தான் சொல்லி ஆறுதல் அடைய வேண்டும். உங்களால் என் கடவுளை நான் மூன்று வருஷங்களுக்கு முன் பார்க்க முடிந்தது. அதன் பிறகு தினமும் எதிர்பார்த்துக் கொண்டேயிருக்கிறேன். இன்று வரை நேரவில்லை. ஆனால் தினந்தோறும் படிப்படியே வியாபாரம் மேன்மேலும் ஓங்கியவாறே இருக்கிறது. லீலாவும் நானும் நன்றாகவேயிருக்கிறோம். செல்வச் சீமான்களாகவே வாழ்கிறோம். எங்கள் கடவுளின் அருளாலும் மாதாஜியின் ஆசியினாலும் இரண்டு குழந்தைகளும் பிறந்திருக்கிறார்கள். ஆனால்பேனிபாபுவும், மாதாஜியும் எங்கே, என்ன செய்து கொண்டிருக்கிறார்களோ என்கிற நினைப்பே எங்களைச் சதா சர்வ காலமும் வாட்டுகிறது'' என்று முடித்தார். நிறையத் தித்திப்புப் பண்டங்கள் உண்டு விட்டுச் சட்டாவிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினோம். காரில் ஏறி உட்கார்ந்ததும் அதுவும் 'விர்' என்று போக ஆரம்பித்தது. திடீரென்று ஒரு கேள்வி எழுந்தது. அதை ராமுவிடம் பகிர்ந்து கொள்ளாமல் இருக்க முடியுமா? ''மூன்று வருடங்களுக்கு முன்பு பேனி பாபுவின் கையால் அளித்த பிரசாதத்தை மிகவும் ஆவலுடன் உண்டோமே! அவர் அருளும் ஆசியும்தான் என்னையும், ராமுவையும் கூட இம்மூன்று வருட காலத்துக்குள் உயர்த்திவிட்டிருக்குமோ?''

ராமுவின் பதில் சந்தேகத்துக்கு இடமில்லாமல் செய்து விட்டது. 'அதிலென்னடா சந்தேகம்...அந்த மகானைத் தரிசித்த அன்றிலிருந்தே இந்தக் கல்கத்தாவில் என் அதிர்ஷ்டம் மாற ஆரம்பித்து விட்டதடா' என்று பேனிபாபுவின் அறம் வளர்த்த கையின் பிரலாபத்தை விவரித்தான்.

சட்டாவையும், லீலாவையும் தவிர, நானும் ராமுவும் கூடப் பேனிபாபுவைக் கடவுளெனக் கருதுவதில் தவறில்லை யல்லவா?

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon